MADRAS GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS SERIES NO 17.




# வசு சரித்திரம்

[தொண்டைமாந்துறை அம்பலத்தாடும் ஐயன் இயற்றியது]

# VASU CARITTIRAM

of

*Toṇḍaimānturai Ambalattāḍum Aiyan*

EDITED BY

T. CHANDRASEKHARAN, M.A. L.T.

Curator, Government Oriental Manuscripts Library, MADRAS.

and the staff of the Library.

Under the orders of the Government of Madras

1952

[*Price :* 2-12-0.

# INTRODUCTION

This work VASUCHARITRAM describes the history of the king Uparicharavasu. It was originally written in Telugu by the poet Ramaraja Bhushana. The Tamil version was written at the command of Thimma Bhupathi who lived at Maduvai. This Thimma Bhupathi was born to Thirumalai Raya due to the blessings of the God Siva—the presiding deity of Valikandapuram. He belonged to the Panda family (*Vide* Mukavuraippadalam verse 32). The name Panda may refer to the members of Vijayanagar family belonging to the Aravidu dynasty. As a number of Thirumalai Rayas are known to have existed it is difficult to identify the person of that name having Thimma Bhupathi as his son (*Vide* Mukavuraippadalam verse 32).

Most probably Thirumalai Raya was a feudatory king under the Emperor of Vijayanagar exercising authority over a portion of Tamil districts having as his capital Maduvai near Valikandapuram, which is in the Tirichirapalli District. This Maduvai cannot be identified now. Thimma Bhupathi succeeded to his father's position after his death. He was known for his munificence especially to poets. His greatness is described in verses 32 to 38 in Mukavuraippadalam. He caused the Telugu version of the Vasucharitram to be translated in Tamil through Thondaimanthurai Ambalattadum Ayyan. The Telugu original was written in 1570 A. D. The Tamil translation should have been written not long after this date. Hence this work may be assigned to the last part of the 16th Century or the beginning of the 17th Century.

The same Thimma Bhupathi was also responsible for the composing of the work Adiparuvattadiparuvam which is also published by this Library as No. XVI in the Madras Government Oriental Manuscripts Series.

## AUTHOR

The name of the author is Thondaimanthurai Ambalattadum Ayyan. He lived in Thondaimanthurai. He composed this work in Tamil at the command of Thimma Bhupathi. (*Vide* verse 39 of Mukavuraippadalam). More details of the author are not available. From his introduction to his work, it is known that he was a great devotee of God Siva. He has praised his patron Thimma Bhupathi in a number of verses (*Vide* my Tamil Introduction).

## THE WORK

It has been said that it is a translation of the Telugu version. It can be favourably compared with Tamil Classics like KAMBA RAMAYANAM.

VILLI BHARATAM, NAIDATHAM etc. It consists of 1008 vers divided into 32 Patalas. Though the first 12 verses of the Nagarpt Patalam are not printed on account of their absence in the original, t numbering of verses is retained as found in the original. There are lacun in a few places. Readings suggested by me are given in square bracke Where lacunae could not be filled up due to the very injured condition the manuscript, the verses have been printed as found in the origin indicating the lacunae by means of dots. The headings are given by n to give an idea of the contents of the verses.

This work is based upon a single manuscript R. No. 1050 writt on paper. This was acquired in the year 1934 by transcription from t manuscript in the possession of the late Mahamahopadhyaya D U. V. Swaminatha Iyer, the pioneer in the field of research in Tam The press copy was once again compared with the original now deposit in Dr. U. V. Swaminatha Iyer Library in the Theosophical Societ Adyar. My thanks are due to the authorities of that Library. I mu also thank Sri V. R. Kalyanasundaram and Sri V. S. Krishnan, Pandi of this Library for preparing the press copy and correcting the proof. Th Kesari Printing Works have also to be thanked for the neat and quic execution of the printing of this work.

Government Oriental Manuscripts Library, Madras, *Dated the 17th December 1951.* — T. CHANDRASEKHARAN.

# முன்னுரை

வசு சரித்திரம் என்னும் இத் தமிழ்நூல், உபரிசரவசு என்று சிறப்புப் பெயர் கொண்ட சேதி நாட்டு மன்னனது வரலாற்றைச் சுவைமிகுந்த தமிழ்ப் பாடல்களினால் உணர்த்தும் ஒரு காப்பியமாகும். இவ் வசுவினைப்பற்றி, மகாபாரதம் ஆதிபருவத்தில் சுருங்கக் கூறப் பட்டுளது. இவ்வரலாறு, முதலில் இராமராஜபூஷண கவி என்பவரால் தெலுங்கில் இயற்றப்பட்டது. பிறகு அதனைப் பின்பற்றித் தமிழில் ஆக்கப்பெற்றது. மடுவை என்ற ஊரில் வசித்த திம்மபூபதி என்னும் வள்ளலின் வேண்டுகோளுக்கு இணங்க இந்நூல் இயற்றப் பெற்றதாக நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

## நூல் ஆக்குவித்தார்

இந்நூலை ஆக்குவித்த வள்ளல், திருவாலிகண்டபுரம் என்ற தலத்தில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான் அருளால் திருமலைராயர் என்பார்க்குப் பிறந்தவன் என்றும், பண்ட குலத்தைச் சேர்ந்தவன் என்றும் இந்நூலாசிரியர் குறிப்பிடுகின்றார். அப்பாடல் :—

> கருதருமவ் வாலிநகர் மதிச்சடிலக் கடவுடிருக் கருணை தன்னால்
> திருமலைத விடத்தினுதித் தொருநேமி வையமுடைச் செல்வ னாகி
> வரமிலகு வாள்கொடுதெவ் விருளகற்றிப் பரிதியென வயங்கி னானெல்
> விரிகமலங் கமழ்மடுவைப் பண்டகுல திம்மையனும் வேந்தர் வேந்தே.
>
> [முகவுரை : 32].

என்பது. பண்டகுலம் என்பது விஜயநகரத்தைச் சார்ந்த ஆரவீடு என்ற பரம்பரையினரைக் குறிப்பதாகக் கொள்ளலாம். திருமலைராயர் என்ற பெயருடன் பலர் இருந்திருப்பதால் எந்தத் திருமலைராயரின் புதல்வன் இத்திம்மபூபதி என்பது தெளிவாக அறியக் கூடவில்லை. இன்னும், இந்நூலாசிரியர் இவ்வரசனை 'திருமலைபெற் றருளுமணி எம்முடர் குமரர் திம்மபூபன்' என்று முகவுரைப் படலம் 33 ஆம் செய்யுளில் குறிப்பிடுகின்றார். ஒருகால், திம்மைய வரசன் தந்தையாராகிய திருமலைராயர் விஜயநகர அரசரின் பிரதிநிதியாகத் தமிழ்நாட்டில் வாலிகண்டபுரத்தருகே மடுவை என்ற தலத்தில் தங்கி ஆட்சி புரிந்திருக்கக் கூடும். வாலிகண்ட புரம் என்பது திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் உள்ளது. மடுவை என்ற ஊர் இப்பொழுது எங்குள்ளது, எப்பெயரால் வழங்கப்படுகிறது என்று தெரியவில்லை. தந்தைக்குப்பின் திம்மையன் ஆட்சிப் பொறுப்பை மேற்கொண்டு புகழ்பெற்று வாழ்ந்தான். பல தமிழ்ப்புலவர்களை ஆதரித்தான். பகைவர்களை வென்றான். இவ்வரசனது சிறப்பு முகவுரைப் படலம் 32—38 ஆம்

"விரிபுகழ் வசுசரித மெனுந்தெலுங்கி னருந்தமிழ்தை விரித்து ரைத்தார்
இருவர்மா தவனமச்சி வாயையன் பாலைய னிவர்கள்"

என்று கூறப்பட்டுளது. இவற்ருல், தெலுங்கில் அமைந்த வசுசரித்திரத்தின் பொருளைத் தமிழில் "நமச்சிவாய தேவன், பாலைய தேவன் என்போர் விரித்துரைத்தனர் என்பதும், அவர்களிடமிருந்து கேட்டதனைத் தொண்டைமாந்துறை அம்பலந்தாடும் ஐயன் இச் சீரிய தமிழ்க் காப்பியமாக இயற்றினர் என்பதும் தெளிவாகின்றன. இவ்வாசிரியரைப் பற்றிய வரலாறு விரிவாகப் புலப்படவில்லை. இவரும் திம்மபூபதி காலத்தவர். சிறந்த சிவனடியார். இவர் திருவாலிகண்டபுரத்துச் சிவபெருமானிடம் அளவில்லாத பக்தி கொண்டவர் என்பது முகவுரைப்படலத்தில், சிவபெருமான், உமாதேவியார் முதலானோரைப் பற்றிக் கூறியுள்ள செய்யுட்களால் நன்கு விளங்கும்.

கம்பர், வில்லிபுத்தூரார் முதலான கவிஞர்களைப் போல, இப்புலவர் பெருமானும் தம்மையாதரித்த திம்மபூபதியை இடையிடையே பாராட்டியுள்ளார். அவற்றுள் சிலவிடங்களைக் கீழே காண்போம். "குளங்களில் வெண்தாமரையும் செந்தாமரையும் கலந்து காணப்படுகின்றன. அவற்றை ஆசிரியர் புகழும் வெற்றியும் சேர்ந்து திம்மையவரசனிடம் வாழ்வதுபோல இருக்கின்றன" என்று குறிப்பிடுகிருர்: அச்செய்யுள்:

விடல ரும்புனல் தடத்திடை விரைகொள்வெண் கமலத்
தொடுசி றந்தசெந் தாமரை பலகலந் துறைதல்
மடுவை யம்பதித் திம்மையன் சீர்த்தியும் வயமும்
இடம தொன்றினில் வாழ்ந்திடு மியல்பினை யேய்க்கும்.

(நாட்டுப். 8)

என்பதாம்.

தடாகப்படலத்தில் கிரிகையும் மற்றத் தோழியர்களும் ஒரு பொய்கையைக் கண்டதாகக் கூறுகின்றபொழுது, அப்பொய்கை "திம்மையன் அறிவினைப்போல் தூய்மையாகவும், அவன் கல்விப் பெருமைபோன்று நீர் நிறைந்தும், புலவர்கள் அவனைப் பாடிய பாடல்களையொத்து அலங்காரங்களுடன் கூடியதாகவும் விளங்கியது" என்று கூறுகிருர். அப்பாடல்:

அறமுடைத் திம்மை யன்ற னறிவெனப் புனித மாகி
பெறலரு மன்னேன் கல்விப் பீடுபோ னிறைந்த வன்கொண்
மறுவிலொண் பாடல் போல மலரலங் காரம் பெற்று
நறைகமழ்ந் திலங்கும் பொய்கை நலம்பல நாடி னின்ருர்.

(தடாகப். 4)

என்பது.

பெறவில்லை. பொருள் நோக்கத்தையறிந்து சில இடங்களில் [ ] இக்குறிகளுக்கிடையில் சில சொற்களும் எழுத்துக்களும் இப் பதிப்பில் சேர்க்கப்பட்டுள்ளன. மிகவும் சிதைந்து உள்ள இடங்கள்.......என்று இவ்வடையாளத்துடன் ஏட்டில் உள்ளவாறே பதிப்பிக்கப்பட்டுள்ளன. பாடல்கள் முழு உருவத்துடன் கிடைத்து வெளியிடுவதே மிக்க மகிழ்ச்சிக்கு உரியதாயினும், இப்பொழுதுள்ள நிலையிலும் சிறிதுகாலத்தில் இந்நூல் சிதைந்துவிடுமோ என்ற அச்சத்தால் இயன்றவரை ஒழுங்குபடுத்தி வெளியிடப்படுகிறது. பாடல்களில் கூறப்பட்ட பொருட்சுருக்கத்தை உணர்ந்து கொள்ளுவதற்காகத் தலைப்புக்கள் கொடுத்துள்ளேன்.

இது, இந் நூல்நிலைய மூவருடக் காட்லாக்கு R 1050 ஆம் எண்ணின் கீழ் வருணிக்கப்பட்டுள்ள காகிதக் கையெழுத்துப் பிரதியிலிருந்து பெயர்த்து எழுதி அச்சிடப்பெறுகிறது. அப்பிரதி மகாமகோபாத்யாய; தாக்ஷிணாத்ய கலாநிதி; டாக்டர்; உ. வே. சாமிநாதையர் அவர்களிடமிருந்த பிரதியைப் பார்த்து 1934 ஆம் ஆண்டு இந் நூல்நிலையத்தில் எழுதிவைக்கப்பட்டதாகும்.

இதனை அச்சிடும்பொழுது ஏற்பட்ட சில ஐயங்களை மூலப் பிரதியைப் பார்த்துத் திருத்தஞ்செய்துகொள்ள அன்புடன் அநுமதி தந்த, அடையாறு; மகாமகோபாத்யாய சாமிநாதையர் நூல்நிலைய அதிகாரிகளுக்கும், மூலப்பிரதியிலிருந்து பெயர்த்து எழுதி அச்சிடுவதற்குரிய வகையில் அமைத்துக்கொடுத்த இந் நூல்நிலைய பண்டிதர்கள்; ஸ்ரீ V. R. கல்யாணசுந்தரம், ஸ்ரீ V. S. கிருஷ்ணன் ஆகியோர்க்கும் எனது நன்றி உரியதாம்.

17-12-'51
சென்னை.

தி. சந்திரசேகரன்.

# வசு சரித்திரம்

## கதைச் சுருக்கம்

### படலம்:—1.

மடுவை என்ற பதியைத் தலைநகராகக் கொண்டு திம்மையவரசன் என்பவன் ஆட்சி புரிந்துகொண்டு இருந்தான். அவன் திருவாலிகண்ட புரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் கருணையினால் திருமலைராயர் என்பவர்க்குப் புதல்வனாய்த் தோன்றியவன். கல்வி கேள்விகளில் சிறந்தவன். பகைவர்களை வென்றவன். தருமசிந்தையுடையவன், தமிழ்ப்புலவர்களை ஆதரித்தவன். அவன் வேண்டுகோளின்படி தெலுங்கில் உள்ள வசு சரித்திரத்தைத் தொண்டைமாந்துறை அம்பலத்தாடும் ஐயன் என்பவர் தமிழில் இயற்றினார்.

### படலம்:—2.

நைமிசாரணியத்தில் சவுனகர் முதலான தவமுனிவர் கூடியிருந்தனர். அக்கூட்டத்தில் ரோமகருஷணி என்ற முனிவர் பெருமான் ஒருவர் இருந்தார். அவரைப் பார்த்து மற்ற முனிவர் "முனிவரே, இந்திரன் அளித்த வளங்கள் நிறைந்த விமானத்தின் மீது அமர்ந்து, தெய்வத்தன்மை பெற்று, ஆகாயம், பூவுலகம் எங்கும் தடையின்றி விருப்பத்தோடு சஞ்சரிக்கும் வலிமை பெற்ற அரசன் யாவன்? அவன் வரலாற்றை எங்களுக்குக் கூறியருள வேண்டும்" என்று கேட்டுக் கொண்டனர். முனிவர்கள் கூறியதைக் கேட்ட ரோமகருஷணி அவர்களை நோக்கி "நீங்கள் கூறியபடி உள்ள அரசன், அளவிலாப் புகழ் பெற்று மனுநெறி தவறாது செங்கோல் செலுத்தும் வசு என்பவனாவான். அவன் சரித்திரத்தைக் கேளுங்கள்" என்று கூறத் தொடங்கினார்.

சேதிநாடு என்பது எல்லாக் கலைகளுக்கும் இருப்பிடமாய் இருந்தது. அது ஐம்புலன்களுக்கும் விருந்து செய்யக் கூடியது. புலவர்களால் பாடப் பெற்றது. அந்நாட்டின் தலைநகரம் அதிஷ்டானபுரி. அந்நகரத்தைச் சுற்றிய மதில் ஆகாயத்தை அளாவி இருந்தது. மதிலை வளைந்து அகழி ஒன்று மிக ஆழமுடையதாக விளங்கியது. கடல் போன்று காணப்பட்டது அகழி. அந்நகரில், வசிக்கும் அந்தணர், சிறந்த ஒழுக்கம் உடையவர். தருமசிந்தனை யுள்ளவர். ஒப்பற்ற கல்வி கேள்விகளை யுடையவர். மிகுந்த அறிவினைப்பெற்றவர். புதன், பிருகஸ்பதி இவர்களைப் போன்ற புத்திமான்கள்.

அந்நகர் வாழ் அரசர்கள் உயர்ந்த குலத்தில் உதித்தவர். சிறந்த வீரர். போர் முனையில் பின்வாங்காத உறுதியுள்ளவர். மிகுந்த செல்வம் பெற்றவர். யானைப்படை, குதிரைப்படை இவைகளை யுடையவர்.

வணிகர்கள் எல்லோரிடமும் மிகுந்த அன்புள்ளவர்கள். பிறர் அடைந்த துன்பத்தைத் தீர்ப்பவர். நல்வழியிலே சேர்த்த பொருளை மிகுதியாகப் பெற்றவர். துன்பமில்லாது வாழ்பவர். அவர் பெருமை பேசுவதற்கு அரியது.

வேளாளர் செழிப்பான நிலங்களைப் பயிர்செய்து தானியங்களை விளைவிப்பார்கள். அறுவடை செய்த தானியங்களை மூட்டை மூட்டையாகக் கட்டிவண்டிகளில் ஏற்றிச் செல்லுவார்கள். நாட்டு மக்களின் உயிர்நாடியாகிய வேளாண்மைத் தொழில் அந்நகர வேளாண் மக்களால் திறமாக நடத்தப்பெற்று வந்தது. மக்கள் கவலையின்றி வாழ்ந்தனர்.

இந்நகரில், நால்வகைப் படைகளும் நிறைந்திருந்தன. நந்தவனங்கள் ஆங்காங்கு மலர்கள் நிறைந்த மரங்களோடும், பழங்கள் குலுங்கும் தருக்களோடும் காட்சி யளித்தன. சுத்திமதி என்னும் தெய்வத்தன்மை பெற்ற நதிநீர் பாய்ந்து சேதிநாட்டையும் அதிஷ்டானபுரியையும் வளம்பெறச் செய்தது.

படலம்:—3.

இத்தகைய சிறப்பு வாய்ந்த சேதிநாட்டுத் தலைநகராகிய அதிஷ்டானபுரியில் வசு என்ற அரசன் தங்கி ஆட்சி புரிந்து வந்தான். அவன் சூரியன் போன்ற ஒளியுடையவன், மன்மதன் போன்ற உருவச்சிறப்புடையவன். சிறந்த கல்வி கேள்விகளை யுடையவன். பகைவர்களைவென்றவன். தன்னை மதிப்பவர்களுக்கு இனியவன். எதிர்ப்பவர்களுக்கு இன்னாதவன். புலவர்களை ஆதரிப்பவன். மழைபோல் பொழியும் தானத்தை யுடையவன். பலரும் தன்னைத் தொழும் பெருமை வாய்ந்தவன். சுத்திமதிநதியின் குறுக்கே விழுந்திருந்த கோலாகல பருவதத்தைத் தனது கால்நகத்தினுல் எற்றியவன். இவ்வரசனின் வலிமையைக் கேள்விப்பட்டு இந்திரன் இவனோடு நட்புக்கொண்டான். இவன் கால்நகத்தினுல் எடுத்தெறியப்பட்ட பருவதம் நதிக்குப் பக்கத்தில் விழுந்து கிடந்தது. இவ்வரசன் தன் நண்பனுடன் அங்குச் சென்று தங்குவதுண்டு,

படலம்: 4—6.

அந்நகரில் அழகிய நந்தவனம் ஒன்று இருந்தது அப்பொழுது வசந்த காலம், மரங்களில் குயில்கள் கூவின. தடாகங்களில் தாமரை மலர்கள் மலர்ந்தன. நந்தவனத்தைப் பாதுகாக்கும் வனபாலர் பல கையுறைப் பொருள்களுடன் வசுவரசன் முன்புவந்து பொழில் வளத்தைக் கூறி, நந்தவனத்திற்கு எழுந்தருளுமாறு வேண்டினின்றனர்.

வசு வேந்தன் வனபாலர் வேண்டுகோளுக்கு இணங்கிப் பொழிலுக்குச் செல்லத் தன் நண்பனுடன் தேரில் புறப்பட்டான் அப்

பொழுது பல அரசர்கள் அவனைப் பின்பற்றிச் சென்றனர். வசு பொழிலுக்குச் சென்று பல காட்சிகளைக் கண்டு களித்தான். அங்கிருந்து தனது நண்பனுடன் கோலாகலப் பருவதஞ் சென்றான். அம்மலையின் வளங்களை நண்பன் கூறக் கேட்டுக் களித்தான். அம்மலையிலிருந்த ஒரு மணிமேடை மீது அமர்ந்திருந்தான். அப்பொழுது இனிய நாதமொன்று அரசன் செவிப்பட்டது. அந் நாதத்தைப் புகழ்ந்து தன் நண்பனிடம் கூறினன். பாங்கனும் அந்நாதத்தைக் கேட்டு மகிழ்ந்து, பாடுகின்றவர் யாவர் என அறிந்து வரச் சென்றான். பல காட்சிகளை வழியில் கண்டான். ஓசை வந்த வழியே சென்றான். மாணிக்கக் கற்களால் அமைக்கப்பட்ட ஒரு மாளிகையைக் கண்ணுற்றான். பெண்கள் பலர் அங்குச் சூழ்ந்திருந்தனர். இது பெண்கள் பயிலும் இடம் என்று எண்ணி ஒரு மரத்தின் மறைவில் மறைந்து நின்றான். அப்பொழுது நீல மணிகளால் அமைந்த மேடை மீது ஒரு பெண் யாழ் வாசித்தல் அவன் கண்களுக்குப் புலப்பட்டது. அவள் நீல மணிமேடை மீது உட்கார்ந்திருப்பது, கரிய மேகத்தின் மீது மின்னல் கொடி வீற்றிருப்பது போல் காணப்பட்டது. இவள் உமையோ, இலக்குமியோ, சரசுவதியோ அன்றி இரதியோ என்று பலவிதமாக எண்ணிற்று அவன் மனம். இவள் அழகினைக் கண்டு களிக்க நம் வசுவேந்தன் அருகில் இல்லையே என்று நினைந்தான். உடனே அவனை அழைத்துவரப் புறப்பட்டுச் சென்றான்.

ப. வ: 7—9.

வசுவேந்தனிடம் தான் கண்ட பெண்ணின் அழகின் சிறப்பினைப் பற்றிப் பலபடியாகப் புகழ்ந்து கூறினன். அப்பெண் இருக்குமிடத்துக்கு அருகாமையில் அவனை அழைத்துச் சென்றான். அவனை ஓரிடத்தில் இருக்கச் செய்து, பாங்கன் ஒரு யோகி வேடம் பூண்டு அப்பெண் யாழ் வாசிக்கும் இடத்திற்குச் சென்றான். அவனைக் கண்டதும் மகளிர் வணங்கி வரவேற்றனர். அவருள் மந்தமாலி என்பவள் யோகியைப் பார்த்து, "நீங்கள் இங்கு வந்தது என்ன பயனையாகும்; வந்த காரியம் என்ன?" என்று வினவினள். யான் கௌதமமுனிவன் குலத்தில் உதித்தவன்; என் பெயர் [illegible]; ஒரு அரசனிடம் சேவை செய்து கொண்டிருந்தேன்; அவனுடைய மந்திரசக்தியினால் யோகியானேன்; அவனோடு பல இடங்களுக்குச் சென்று வந்தேன்; அவன் இப்பொழுது இம்மலைக்கு வந்திருப்பதால் நானும் இங்கு வந்தேன்; என்னை ஆதரிக்க அரசனுக்கு ஒரு காணிக்கை தரவேண்டும் என்று நினைந்து உங்களிடம் வந்தேன்; இங்கு யாழ் வாசிக்கும் பெண் யார்? இவள் ஒரு மலையரசனின் பெண் என்று என் மனத்தில் தோன்றுகிறது; இவள் பிறப்பு குலம் முதலிய

னவற்றைச் சொல்லுவாயாக" என்று மஞ்சுவாணியிடம் யோகி வேடந்தரித்த பாங்கன் கூறினன்.

படலம்: 10—12.

மஞ்சுவாணி அப்பெண்ணின் வரலாற்றைக் கூறத் தொடங்கினாள். "சுத்திமதி என்று பெயர்பெற்ற தெய்வநதி ஒன்று உண்டு. அந்நதிமாது அழகிய அலங்காரங்களுடன் ஒருசமயம் பிரமதேவன் சபைக்குச் சென்று பிரமனைத் தரிசித்துவிட்டு வந்தாள். அப்பொழுது கோலாகலபருவத அரசனும் பிரமனைத் தரிசிக்கச் சென்றான். அவன் இமவானின் புதல்வன். பார்வதிதேவியின் சகோதரன் சிறந்த வடிவழகு உடையவன். அவ்வரசன் தன்னெதிரில் வந்த சுத்திமதியின் உருவச் சிறப்பினைக் கண்டு ஆச்சரியப்பட்டான். அவள் வடிவம் கோலாகலவரசனின் மனத்தில் நிலைபெற்று விட்டது. அவன் மனவலிமையெல்லாம் குலைந்தது. அவளையடையாமல் தான் வாழ முடியாது என்ற எண்ணம் தோன்றியது அவனுக்கு. சிலநாட்கள் சென்ற பின் சுத்திமதியாற்றுக்கு வந்தான். சுத்திமதி அழகிய பெண் வடிவுடன் எதிர்வந்து கோலாகலவரசனை வரவேற்று உபசரித்தாள். தன்னை நாடி வந்த காரணம் யாது என வினவினள். அதற்குக் கோலாகல அரசன் "நீ பிரமதேவனை வணங்கித் திரும்பும்பொழுது உன்னைக் கண்டேன்; உன் உருவம் என் மனத்தில் பதிந்து விட்டது; உன்னைக் கண்டது போன்ற மகிழ்ச்சி எப்பொழுதும் எனக்கு ஏற்பட்டதில்லை; உன்னை மணந்து கொள்ள விரும்புகிறேன்; உனது எண்ணம் யாது? எனக் கேட்டான்.

கோலாகல அரசனின் சொற்களைக் கேட்ட சுத்திமதி, "நான் எவ்வகையிலும் உன்னை மணக்கும் தகுதியில்லாதவள். நீயோ உயர்ந்த மலையரசன். நான் எளிய நதிவடிவாக இருப்பவள்; சிறந்த தேவப்பெண்களை மணந்து கொள்ளும் பெருமையுடையவன் நீ" என்று பல நியாயங்களைக் கூறி, அவ்வெண்ணத்தைக் கைவிடும்படி வேண்டினாள். சுத்திமதி கூறியவை ஒன்றையும் கோலாகலவரசன் ஏற்றுக் கொள்ளவில்லை. அவளிடம் ஏற்பட்ட விருப்பம் அதிகரித்தது அரசனுக்கு. விரகதாபத்தைக் கட்டுப்படுத்த அவனால் இயலவில்லை. சுத்திமதிநதியின் குறுக்கே விழுந்து மறிக்க எண்ணங் கொண்டான். தனது பேருருவாகிய மலையுருவங் கொண்டு நதியின் குறுக்கே விழுந்தான். சுத்திமதியை அணைந்து இன்புற்றான். பெரிய மலை ஒன்று நதியின் குறுக்கே விழுந்ததனால் தண்ணீர்பொங்கிக் கரையின்மேல் புரண்டது. மலை விழுந்த ஒலியைக் கேட்ட சேதிநாட்டு மக்கள் நடுங்கினர். மிருகங்கள் பறவைகள் ஆகியவையும் அஞ்சின. அந்நாட்டு அரசனாகிய வசுவின் செவியில் இவ்வொலி பட்டது. இது என்ன ஒலியோ என்று அரசன் ஐயுற்றான்.

அப்பொழுது நாட்டு மக்கள் திரண்டு வசுவின் அரண்மனையை யடைந்து "ஒரு பெரிய மலை நதியின் குறுக்கே விழுந்து கிடக்கிறது; அதனால் வெள்ளம் கரை புரண்டு வந்து விட்டது; எங்களுக்கு எவ்விதத் துன்பமும் நேராமல் காப்பவன் நீ; இப் பெரிய துன்பத்திலிருந்து எங்களை விடுவிக்க வேண்டும்" என்று முறையிட்டனர். முறையீட்டைக் கேட்ட வசுவேந்தன் சினமுடன் மலைமீது போர் செய்யப் புறப்பட்டான். நதியின் அருகே சென்று தனது கால் நகத்தினால் சுத்திமதிநதியின் குறுக்கே விழுந்து கிடந்த மலையைத் தூக்கியெறிந்தான். நதிக்கு அப்பால் கரையோரமாகச் சென்று மலை விழுந்தது. தேவர்கள் இச்செயலைப் பாராட்டித் துந்துபி முழக்கினார்கள். சேதிநாட்டவர்கள் தங்கள் அரசனின் பராக்கிரமத்தை உணர்ந்து மிக்க மகிழ்ச்சியுற்றார்கள். இந்திரன் வசுவின் வலிமையைக் கேள்விப்பட்டு விமானமொன்று பரிசளிக்க முன் வந்தான். அந்த விமானம் மிகப் பழைமையானது. திருமால் இலக்குமி மணம் நிகழ்ந்தபொழுது அந்த விமானத்தின் மீது ஏறி இருவரும் வைகுண்ட நகரத்தை வலம் வந்தார்களாம். அதனை இந்திரன் விரும்பியதால் திருமால் அவனுக்குக் கொடுத்து விட்டார். அதில் ஏறிக்கொண்டு நினைத்த இடத்துக்குச் சென்று வரலாம். மிகவும் சக்திவாய்ந்தது அது. அதன் பெருமைகளை எடுத்துக் கூறி இந்திரன் வசுவுக்கு விமானத்தை யளித்தான். வசு விமானத்தின் மீதேறிப் பல்வேறிடங்கட்கும் சென்று வந்தான். ஆகாயத்தில் நடையின்றி ஸஞ்சரித்து வந்ததால் "உபரிசரன்" என்று சிறப்புப்பெயர் தந்து வசுவை யாவருங் கொண்டாடினார். இங்ஙனம் வசு மிகுந்த புகழுடன் அரசு புரிந்துகொண்டிருந்தான். கோலாகல மலையை அகற்றிய பிறகு சுத்திமதி கருப்பமுற்றாள். ஒரு நன்னாளில் ஒரு பெண் மகவையும், ஆண் மகனையும் பெற்றெடுத்தாள். பெண்ணுக்குக் கிரிகை யென்றும், புதல்வனுக்கு வசுபாதன் என்றும் பெயரிட்டாள். இருவரும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தனர். அக் கிரிகைதான் இங்கு யாழ் வாசிப்பவள். நான் அவள் தோழி" என்று மஞ்சுவாணி கூறிமுடித்தாள். கேட்ட யோகி மிகவும் மகிழ்ச்சியடைந்தான்.

## பாடல்: 13—15.

இப் பெண்ணுக்கு ஏற்றகணவன் அவ்வசுவே என்று யோகி கூறினன். "அவ்வரசன் எங்குள்ளான்? எப்பொழுது இங்குவருவான்" என்று மகளிர் கேட்டனர். "இப்பொழுதே என் மந்திர சக்தியினால் வரவழைக்கிறேன்" என்று யோகி கூறிவிட்டு வசுவின் பெயரைக் கூறி யழைத்தான், மறைந்திருந்த வசு வெளிப்பட்டான். மகளிருங் கிரிகையும் எதிர்பாராது வசுவினைக் கண்டதால் மிக்க வியப்படைந்தனர். பிறகு ஓர் ஆசனம் இட்டு வசுவை அதில் அமரச்செய்தனர்.

மஞ்சுவாணி கிரிகையைப்பற்றிப் புகழ்ந்து சில சொற்களை வசுவினிடம் கூறினள். வசு, யோகியைப் புகழ்ந்து சில சொற்கள் கூறினன். இவர்கள் இருவருக்கும் மணம் நிகழும் என்று கூறிவிட்டு யோகி மறைந்தான். சிறிது நேரத்தில் தன் சுய உருவத்துடன் மீண்டும் வெளிப்பட்டான். முன்பு யோகியாக வந்தவன் இவனே என்று மகளிர் நிச்சயித்தனர். வசு கிரிகையை நேரில் கண்டதும் அவள் அழகில் ஈடுபட்டான். கிரிகையும் வசுவினைக் கண்டாள். இவர்கள் தம்மை மறந்த நிலையில் இருப்பதைக் கண்ட கிரிகையின் தோழியொருத்தி வேடிக்கையாச் சில சொற்களைக் கூறினாள். அச் சொற்களைக் கேட்ட கிரிகை நாணமும் சினமும் ஒருங்கே யடைந்து அவ்விடத்தை விட்டு அகன்றாள். கிரிகை அவ்விடத்தை விட்டுச் சென்றதும் வசுவேந்தன் சிறிது நேரம் அவள் சென்ற திசையையே நோக்கிக் கொண்டிருந்தான். அவளைப் பிரிந்திருப்பது மிகவும் துன்பமாய்த் தோன்றியது வசுவுக்கு. தன் மனத்துயரைப் பாங்கனிடம் கூறினான். "உன்னைக் கிரிகை மணப்பாள்; நீ வருந்தாதே" எனப் பாங்கன் தேறுதல் கூறினான். பாங்கனால் சிறிது தேறுதலடைந்த வசுவேந்தன் அச்சோலையில் பல இடங்களிலும் கிரிகையைத் தேடியலைந்துவிட்டுத் தன் அரண்மனை சென்றான். வசுவுக்கு ஊண் உறக்கம் எவற்றினும் மனஞ்செல்லவில்லை. கிரிகையின் நினைவு அரசனை மிகவும் வாட்டியது.

## படலம்: 16—24.

கிரிகையும் வசுவேந்தனையே எண்ணிச் சஞ்சலம் அடைந்தாள். மன்மதன் பலவிதங்களில் கிரிகையைத் துன்புறுத்தினான். நந்தவனத்துக்குச் சென்றால், துன்பம் சிறிது குறையுமோ என்று எண்ணிச் சென்றாள். அங்கும் கிரிகையின் வருத்தம் குறையவில்லை. அரண்மனைக்குள் கிரிகையைக் காணமல், தோழியர்கள் நந்தவனத்துக்கு வந்தனர். அங்குக் கிரிகையைக் கண்டதும், தனியே அவள் நந்தவனத்துக்கு வருவது தகாது என்று கூறினர். பின்பு, கிரிகையின் துயரை மாற்றப் பலவிதமாகத் தேற்றினர். எல்லோருமாக ஒரு தடாகத்தில் நீராடினர். மன்மதன் உருவப் படத்தை ஓரிடத்தில் நிறுத்தினர். சோலையிலிருந்த பலவித மலர்களைக் கொய்து மதன பூஜை செய்தனர். பூஜை முடிந்த பின்னர், மகளிர் அனைவரும் கிரிகையைக் காப்பாற்றும்படி மன்மதனை வேண்டினர். பிறகு கிரிகையுடன் அரண்மனை சேர்ந்தனர். அப்பொழுது சூரியன் மறைந்தான். சந்திரன் கீழ்த்திசையில் உதயமானான். சந்திர உதயத்தினால் கிரிகையின் துன்பம் மிகுதியாயிற்று. கிரிகையின் துன்பத்தைக் கண்டு இரக்கமுற்ற தோழி "வசுவேந்தனிடம் சென்று கிரிகையின் நிலையை அறிவித்து அவன் மனக்கருத்தையும் தெரிந்துகொண்டு வருகிறேன்" என்று கூறிப் போனாள். விரகவேதனை தாங்காத கிரிகை சந்திரனையும், மன்மதனையும், தென்றலையும் வெறுத்து வைதனள்.

மற்ற தோழியர்கள், கிரிகையின் துயரைப் போக்க என்ன செய்வோம் என்று யோசித்துக் கொண்டிருக்கையில் மஞ்சுவாணி மீண்டு வந்தாள். வசுவும் கிரிகையைப் பற்றியே நினைந்து வருந்துவதாகவும், முதல் நாள் ஒரு தூதன் வசுவினிடம் வந்து "கிரிகைக்கும் வசுவுக்கும் மணம் நிகழ்வதற்கு உரிய ஏற்பாடுகளைச் செய்ய இந்திரன் கோலாகலபுரம் சென்றுளான் என்று கூறியதாகவும், அதனாலேயே வசு உயிர் வைத்துக் கொண்டிருப்பதாகவும் மஞ்சுவாணி கூறினள். வசு வேந்தன் தந்த மோதிரம் ஒன்றையும் கிரிகை முன்பு வைத்தாள். மோதிரத்தைக் கண்டதும் கிரிகை சிறிது துன்பம் ஆறியிருந்தாள். கிரிகை வசுவினை மணந்து கொள்ள விரும்புகிறாள் என்று கேள்விப் பட்ட அவள் பெற்றோர் மிகவும் மகிழ்ச்சி யடைந்தனர்.

## படலம்: 25—29

இந்திரன், தேவர்கள் சூழ்ந்துவரக் கோலாகலபுரம் வந்தான். கோலாகலவரசன் இந்திரனையும் தேவர்களையும் வரவேற்று உபசரித்தான். கிரிகைக்குக் கணவனாதற்கு வசுவே ஏற்றவன் என்றும், விரைவில் கிரிகைக்கு மணம் புரிவிக்குமாறும் கோலாகல அரசனிடம் இந்திரன் கூறினான். இந்திரன் கூறியதைக் கோலாகல அரசன் ஆமோதித்தான்.

அங்குக் கூடியிருந்த பலரும் கிரிகைக்கும் வசுவுக்கும் மணம் நிகழ்வது பொருத்தம் என்று பாராட்டினர். அங்கிருந்த தேவருரு, வசு கிரிகை இருவருக்கும் மணத்துக்குப் பொருத்தமாக உள்ள இலக்கினம் மிதுனம் என்று கூறினான். பின்பு தேவேந்திரன் அதிஷ்டானபுரிக்குச் சென்று மணச்செய்தியை வசுவேந்தனுக்குத் தெரிவித்தான். வசுவேந்தன் மிக மகிழ்ந்து, அரசர் பலருக்கும் மணவிதழ் அனுப்பிவிட்டு, மந்திரிகள் சேனைகள் புடைசூழக் கோலாகலபுரத்துக்கு வந்தான். கோலாகலபுரம் மிகவும் சிறப்பாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. கோலாகல அரசன் வசுவேந்தனை எதிர்கொண்டு வரவேற்று உபசரித்தான். கோலாகலவரசன் அரண்மனையில், தேவ மாதர்கள் வசுவுக்கு எண்ணெய் நீராட்டு முதலியவற்றைச் செய்து அலங்காரங்கள் பலவும் செய்தனர். பின்பு, வசுவேந்தன், இந்திரனது ஐராவதத்தின் மீது ஏறிக் கோலாகலபுர வீதியில் பவனி வந்தான். வசு பவனி செல்லுங் காட்சியைத் தேவர்களும் அரம்பையர்களும் பிறரும் கண்டு களித்தனர். வசு யானையினின்றும் இறங்கிக் கோலாகலவரசன் அரண்மனைக்குள் சென்றான்.

## படலம்: 30—32.

திருமண மேடை மீது வசு அமர்ந்தான். கிரிகைக்கு உயர்ந்த அலங்காரங்களைத் தோழியர் செய்தனர். தோழியர்கள் சூழ்ந்து வரக், கிரிகை திருமண மேடைக்கு வந்து வசுவின் பக்கத்தில் அமர்ந்

தாள். அரசர் பலரும், தேவர்களும், அரம்பையரும், நதிமாதரும் மலையரசரும், இம் மணத்தைக் கண்டு மகிழ அங்குக் கூடியிருந்தனர். தேவகுரு கூறிய நல்ல முகூர்த்தத்தில் வசு, கிரிகையின் கழுத்தில் திருமாங்கலியம் அணிந்தான். தேவதுந்துபி முழங்கியது. பூவுலகத் தவர் களித்தனர். முறைப்படி நடைபெற வேண்டிய திருமணச் சடங்குகள் நான்கு நாட்கள் குறைவற நடைபெற்றன. தேவர், திக்குப் பாலகர் ஆகியோர் வசுவுக்குப் பல பொருள்களைப் பரிசாக அளித்தனர். தேவேந்திரன் முதலானோரும், மணத்துக்கு வந்திருந்த மற்றவரும் விடைபெற்றுத் தத்தம் இருப்பிடஞ் சென்றனர். வசுவும், மாமன் மாமியரிடம் விடை பெற்றுத் தனது நகர்க்குப் புறப்பட்டான். கோலாகல அரசனும், சுத்திமதியும் கிரிகைக்குப் பல புத்திமதிகளைக் கூறியனுப்பினர், வசு, கிரிகையுடன் அதிஷ்டானபுரியை யடைந்த பொழுது, நகரமாந்தர்கள் இவர்களிருவரையும் இரதியும் மன்மதனும் போலக் கருதி மகிழ்ந்தனர். அந்நகரப் பெண்கள் பலர், மாட மாளிகையின் மீதும் மற்றும் உயர்ந்த இடங்களின் மீதும் கூடி நின்று, வசுவுங் கிரிகையும் நகர்க்குள் வருவதனைக் கண்டு களித்தனர். தனது பரிவாரங்கள் புடைசூழ வசு கிரிகையுடன் தனது அரண்மனையை யடைந்தான். உடனே தனது அரச சபைக்குச் சென்று சிங்காதனத்தில் கிரிகையுடன் அமர்ந்தான். சபையில் கூடியிருந்த பலருக்கும் அவர்கள் தகுதிக்குத் தக்க பரிசுகள் அளித்தான். பின்பு தன் அந்தப்புரம் சென்றான். கிரிகையும் வசுவும் மிக்க இன்பமுடன் வாழ்க்கை நடத்தினர். சேதி நாட்டைச் சிறப்புற ஆண்டு வந்தான் வசு. வசுவின் ஆட்சியில் மக்கள் பசி, பிணி, களவு, பகை இன்றி மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர். நாடு செழித்திருந்தது.

சவுனகாதி முனிவர்களுக்கு ரௌமகருஷணி உரைத்த இந்த வசுசரித்திரத்தைப் படிப்பவர்கள் சிறந்த தருமச் செயல்களையும் கல்வியையும் உடையவராய், புலவர்கள் நிறைந்த சபையில் இன்பமுடன் வீற்றிருந்து புகழை யடைவார்கள்.

---

# பிழை திருத்தம்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 10 | 3 | ஞமரை | மரை |
| 11 | 5 | தரணிகை | தாணீகை |
| 13 | 5 | கலேரென | களேரென |
| 17 | 15 | வந்திகர் | அவந்திகர் |
| 19 | 22 | சயித்திராத மொப்பன.... | சயித்திரரத மொப்பன்.... |
| ,, | 23 | சயிராத | சயித்திரரத |
| 23 | 29 | புருச்சிறை | யுருச்சிறை |
| 23 | 29 | யாறவாலத் | யாலவாலத் |
| 31 | 1 | வரைக்கேகு | கிரிகையுறுப்பியல் |
| 52 | 31 | சுத்திமதி | மஞ்சுவாணி |
| 53 | 2 | ,, | ,, |
| 84 | 30 | வணங்காய | வனங்காய |
| 97 | 14 | மான் | மரன் |
| 141 | 13 | மேத | யேத |

# பொருள் அட்டவணை

*வந்து ஒரு தூண் மறைவில் நிற்றலை வசு காணுதல், கிரிகையும் வசுவும் அடைந்த இன்பநிலை, வசுவுங் கிரிகையும் பல்வேறு இடங்கட்குச் சென்று வந்து இன்ப வாழ்க்கை நடத்துதல், வசுவேந்தன் ஆட்சிச் சிறப்பு, வசு சரிதங் கற்பதால் உளதாம் பயன், வாழ்த்து.*

வசுசரிதம் இயற்றினுர் இன்னுர் என்பது. 157



# வசு சரித்திரம்

## கடவுள் வாழ்த்து

வான னத்தன் வயவயி ராவதக்
கோன னத்தன் குலமறை காணொைத்
தான னத்தன் தனியுத வுங்கரி
யான னத்தன் அடியிணை போற்றுவாம்.

## 1. முகவுரைப்படலம்

### சிவபெருமான்

நீர்கொண்ட முகில்வண்ணன் முதலமர ருயிருய்ய நிறைந்த வாழிக்
கார்கொண்ட விடமுண்டு கறுத்தமிட றுடையானைக் கமலை மேவுஞ்
சீர்கொண்ட திருவாலி கண்டபுரத் தருட்கடலைச் சிந்தித் தேத்தி
வேர்கொண்ட பவக்காடு கடந்துபர மானந்த வீடு சேர்வாம். 1

### உமாதேவியார்

தலைமீது பிறையாரம் புனைந்துபல மணிப்பணிக டரித்துக் கையி
னுலவாது முளரிகொடு பெருவரையி னுதித்தமல னொத்து நின்ற
மலைமாது திருவாலி நகர்மாது சசிமாது வனச மாது
கலைமாது பணியுமெழி லுமைமாது பதமலரைக் கருத்துள்
[வைப்பாம். 2

வேறு

கரமலர்க் கோடு கொண்டு கயிலையைத் தாக்கி மிக்க
பரையரும் பரனைப் புல்லப் பரன்முடிக் கங்கை சிந்தி
யொருபரை தாளில் வீழப் புரிந்துய ருவகை நல்கும்
பொருவிலொண் குமர சேட்டன் பொன்னடி பணிதல்
[செய்வாம். 3

### சுப்பிரமணியர்

ஆலமுள் ளடங்க நின்ற வரசளித் தருள வோங்கி
வேலையன் றேவி மாவை வீட்டிநல் வாகை பெற்றுக்
கோலமென் கடம்பொ டுற்ற குருந்தடி நிழலிற் சேர்ந்து
சாலவெம் பவாத வத்திற் சரித்தநம் மிளைப்புத் தீர்வாம். 4

### அவையடக்கம்

மலர்தலை யுலகம் போற்றும் வசுசரித் திரத்தை வல்ல
புலவர்க ளிருக்க யானும் புகலுதற் குன்னுந் தன்மை
யிலகுசீ ருடைய வன்ன மென்னவே புனலை மாற்றி
யுலவுறு குரண்டம் பாலை யுண்ணிய கருதல் போலும். 5

## வேறு

## நாட்டுச்சிறப்பு

வனசன தூர்தியின் வடிவம் போலெழீஇ
யினமொடு கனமெலா மேகி வேலையிற்
புனன்முகந் துண்டுமீண் டெங்கும் போர்த்தன
வுனவரு முருகன தூர்தி யென்னவே. 6

விரிந்தமின் வாளினை விதிர்த்துக் கோபமே
பரந்திட வதிர்த்துவெம் பரிதி யோடமர்
புரிந்திட வெழுந்தது போலக் கூடியே
பெரும்புயல் பச்சைமால் வரையிற் பெய்ததே. 7

புயல்மழை பொழிதலிற் புகுந்து தோய்ந்தவர்க்
குயர்தரு பரபத மூதவு கின்றதோ
ரியல்வர வாற்றிடை யெவர்க்கு மின்புற
வியனுடை வெள்ளநீர் விரிந்து சென்றதே. 8

காரகிற் றுணிசெழுங் கவரி வாற்றொகை
பாரிய சந்தனக் குறடு பன்மலர்
வாரிமேற் கொடுவரல் வருண னென்பவன்
சீரிக் கனுப்புறு செய்கை போலுமால். 9

பாரதி தன்னொடு பண்பி னூற்கலந்
தேருறு தாமரை மேவி யெண்ணொணாச்
சீரிய கலைபல சேர்ந்து தோன்றலால்
வேரியம் போதனை வெள்ள மொத்ததே. 10

சங்கினை யேந்தலாற் றரைக்கண் பாதலால்
அங்குறு திகிரிகொண் டாடன் மேவலாற்
பொங்கிய வளக்கரைப் பொருந்த லாலுயர்
செங்கண்மா லொத்தது நெய்த நீத்தமே. 11

மேவரும் பாலையி னனலை வீட்டலிற்
றுவிலார்ப் பொடுமிகத் தருக்கி வேலைபுக்
கோவறு வடவையை யவிக்க வுன்னியே
போவதொத் தெழுந்தது புதிய நீத்தமே. 12

பேருறு மிந்நதிப் பிறங்கு நீர்புக
வேரிவன் னூட்டிடை விரிந்த வாவியும்
நேருறு கயங்களு நிரம்பித் தேங்கின
சீரறம் புரிபவர் செல்வம் போலவே. 13

*ஏர்த்தொகை நடத்தலு மெழுந்த வோதையாற்*
*போர்த்தலை விறலிலார் போல வாமைகள்*
*சேர்த்தநீ ரிடைப்புகுந் தொளிப்பத் தீரர்போற்*
*பார்த்துவெவ் வாளைக ளாளைப் பாயுமால்.* 14

*வெறிகமழ் வனசவெள் ளத்தின் மேவிய*
*நறவினை வாய்மடுத் துண்டு நாரியர்*
*செறிமணி கைக்கொடு விதைத்த செய்தொறு*
*முறுபெருங் குருகைநின் றேட்டு வாரரோ.* 15

*நீடயில் விழிக்கெதிர் நின்ற காவியைக்*
*கோடிடை யுழத்தியர் கொய்தல் கண்டுடைந்*
*தோடுறு கயல்களை யுவந்த ழைத்தல்போல்*
*மூடலர்க் களைகொய முன்கை நீட்டுவார்.* 16

*மாமணி வாரண மன்னர் தங்குழு*
*மேவிவண் டொத்தொகை விரவிச் சூழ்தலாற்*
*பூவினை மருதமொண் புவிபு ரந்திடுங்*
*கோவையொத் தெழிலொடு குலவு கின்றதே.* 17

மலைவளம்

*இத்தகைத் தாகிய வெழில்வன் னட்டிடை*
*வித்தகர் புகழ்தரு புட்ப வெற்புநற்*
*சித்தர்வைப் பாகியே திகழ்ந்து நின்றிடு*
*மத்திரு வரைவள மறைதற் பாலதோ.* 18

*வனசர மகளிர்கள் வதனந் திங்களென்*
*றுனலரு மதிச்சிலை யொழுக்குந் தீம்புனல்*
*தினகர சிலைகதிர் தீண்ட நின்றெழு*
*மனலினை வயின்வயி னவித்துப் போகுமால்.* 19

*வனமுடை வேடர்த மகளிர் சிற்றிலிற்*
*சினவர வுமிழ்மணி தீப மேற்றலுங்*
*கனனுகர் குருகதைக் கவர்ந்து கொண்டுசென்*
*றனலெனக் கோத்தல்கண் டழுவர் தாயர்முன்.* 20

*அறைகளின் மிசையடி யார்ந்த பாறுறுங்*
*கறையொடு முத்துறக் கண்ட வேட்டுவர்*
*மறமுடைத் தந்தியின் மத்த கம்பிளந்*
*தறுகுசென் றதுகொலென் றுலித் தோடுவார்.* 21

*தரைபுகழ் வரைமுடி தனிற்கி டந்தபன்*
*மரகதப் பைங்கதிர் வயங்கு புல்லெனக்*
*கருதிவெண் மதியுழைக் கன்று தாவிமற்*
*றருகொரு புல்லினை யெதிர்கண் டஞ்சுமால்.* 22

வேறு

தாமரை புண்டரிகஞ் சார்தலா லாம்ப லுற்ற
சீர்மையால் வளம்பொ ருந்து சிறப்பினல் வளங்கொள் பூனைத்
தோமிலா வெகின மாமை கழைபல துன்ன லாலம்
மாமலை முழுது நன்மா மருதமொத் திருந்த தம்மா. 23

நகரச்சிறப்பு

புகலுமிப் பெருமை யோங்கு புட்பவெற் பொடுசி றந்த
வகமகிழ் வன்னு டாகு மளவில்சீர் வெண்பா நாட்டிற்
புகழ்புனை வாலி கண்ட புரமென வொருத லந்தான்
மிகவிளங் குறுநி றைந்து மேதினிக் கணிய தாகி. 24

புரைதவிர் வாலி கண்ட புரத்துறு மீசன் றன்னை
மருநறு மடைதி றக்கும் வளச மாளிகையி னுற்றோ
ருருகுறு முளத்தினோடு மூவந்துபூ சனைபு ரிந்தே
யரியதன் சிநட்டி பெற்ற ரைப்பதிக் கிணையொன் றுண்டோ. 25

புயறவழ் மாடஞ் சூழப் புரத்துறு மீசன் றனை
வியனுடை யுலக மெல்லாம் படைத்தருள் வேரிப் போத
னுயர்வுறப் பூசை செய்து செய்துவந் துறையு மூரு
மியல்படு பிரம தேச மெனப்பெயர் பெற்ற தன்றே. 26

தாரகப் பிரம மான சாற்றரும் தனியெ ழுத்தி
னோரரும் பொருளைத் தாதைக் குணர்த்திய முருகன் வந்து
நேரிலொண் பிரம சாரி யாகியே நெடுநா ளுற்றுச்
சீரிய தவஞ் செய்தாலத் திருநகர் தன்னின் மாதோ. 27

வாலிகண்ட புரமென்றதற்குக் காரணம்

தனித்திறல் பெற்ற வாலி தற்பர சிவனைக் கண்டு
மனத்தெழு மன்பிற் பூசை வரமுறப் புரித லானே
பனிப்பிறை சூடி பேரும் பகரரு நகரின் பேரு
முனற்கரு மிவன்றன் பேரா லுற்றது கற்றோர் போற்ற 28

அந்நகர் வடகிழ் பாலுற் றழிவுறு புட்ப வெற்பின்
மன்னிமாரக் கண்ட னென்னு மாதவ னிருந்து மிக்க
தன்னிகர் தவஞ்செய் தானத் தனிமுனி தாள்ப ணிந்து
பன்னருந் தருமங் கேட்டார் பகநதிட் டிரன்முன் னுேனோர். 29

தோய்ந்தவர்க் கின்ப நல்குந் தொல்வட நதியு முத்தி
யீய்ந்தருள் புட்ப வெற்பு மிதனின்மார்க் கண்டன்போற்ற
வாய்ந்தலிங் கமுமி லங்கும் வளமையா லித்த லந்தா
னய்ந்தநூ லறிஞ ரேத்து பாற்கர தலமே யாமால். 30

அலர்தரு மீமத் திட்ட வடுகத முங்கி தன்னில்
தலைவெடி யாதி ருந்த தன்மையா லித்த லத்திற்
புலனொடு வீய்ந்தோர் யாரும் புனிதரா யமரர் போற்ற
விலகுறு சிவசா லோகத் தெய்திவீற் றிருப்ப ரன்றே. 31

## திம்மையவரசன் சிறப்பு

கருதருமவ் வாலிநகர் மதிச்சடிலக்
கடவுடிருக் கருணை தன்றாற்
றிருமலைதன் னிடத்தினுதித் தொருநேமி
வையமுடை செல்வ னாகி
வரமிலகு வாள்கொடுதெவ் விருளகற்றிப்
பரிதியென வயங்கி னானல்
விரிகமலங் கமழ்மடுவைப் பண்டகுல
திம்மயனும் வேந்தர் வேந்தே. 32

திருமலைபெற் றருளுமணி வன்னுடர்
தமதரசு திம்ம பூபன்
பெருமைதிகழ் புகழென்னுந் தரளமணி
மேடைமிசைப் பிறங்க வைத்த
பொருவரும்பொற் குடமென்ன வவன்வீர
முருவெடுத்துப் பொலிவ தென்ன
விரவுதிமி ரம்பருகி யொளிவிரிக்கு
மொருபானு விளங்கு மன்றே. 33

வீறுடுவிண் ணிலகுபயோ தரங்கருகா
தரியசுதை மேடை மேலா
யேறுபொழு தினுங்கமலத் தடத்தாடு
மேல்வையினு மிளையா தற்றே
மாறில்பெரும் புவனகருப் பத்தினொடு
விளங்கினளால் மலரிற் பைந்தேன்
ஊறியெழுந் திடமடுவைத் திம்மயன்றன்
புகழென்னு மொருநன் மாது. 34

பரிவொடுதா னமைத்தவக ரங்களினு
நான்மறைகள் பயிற்றல் செய்யு
மருமறையோர் முகங்களினுந் தடங்களினும்
பொழில்களினு மளவி லாத

புரைதவிரொண் சுதைமாட மெழுத்தெகினம்
போதாகிப் பொலிந்து வைகுந்
தெருவுதொறு முரசதிருந் தேன்மடுவைத்
தீர்மயன்றன் சீர்த்தி மாதோ. 35

மதிவலயத் திரளனந்தன் சுரதருவின்
டலக்களிறு மார்பின் வைக
வெதிரன்மடி மிசையினுற விழியெதிர்நின்
றிடனிழலி லிருக்க மென்மை
பொதிகவுளின் முத்தமிட விரும்பவுநந்
திம்மயன்றன் புகழ்மா மங்கை
விதியினொடு சரிக்கின்று ளொருவருண
முறுபொருளை மிகவுந் தேடி. 36

உயரனந்தன் றவழ்பவனமேற் றுகளிறைத்துக்
கொளுங்கரிக ளோங்க லெல்லா
மயர்வில்பயோ தரவமுதை யகலாவப்
பெருங்கமட மான தம்ம
வியல்பினெழா திவ்வால சளத்தினுட
னெமக்கிணைக்க மென்னென் றுன்னிச்
சயமிலகு தேன்மடுவைத் தீம்மயனை
யடைந்தனளாற் றரணி மாது. 37

விழைவுறுதா னப்புனலாற் கருங்கடலைப்
புகழுநனல் விதுவை மாறுப்
பொழிலுலகில் யாவர்க்கு மிடுவதற்கு
மூரலடு புகையால் விண்மேற்
றழுவுபுய றனையிலகப் புரிந்தனன்று
தாவினுக்குந் தாதா வாகி
மழவிடைய னடிபரவு தீம்மயபூ
பாலனெனு மன்ன ரேறு. 38

## நூலியற்றக் காரணம்

வேறு

மேதகு மினைய பெற்றி மேவிய தீம்ம யன்றன்
மூதறி வுடைமை தோன்ற முதிர்புகழ் வசுவின் சீரை
யோதுக வென்று னென்பா லுயர்பல வரிசை நல்கி
யாதலி னியம்ப லுற்றே னறுமுகன் கருணை கொண்டு. 39

### நூல் வந்த வழி

விரிபுகழ்சேர் வசுசரிதை தெலுங்கையருந்
தமிழதனாற் விளம்புதற்கே
யுரியகலை பயிலமச்சி வாயதேவ
னுக்கருத்த முறைசெய் தானாற்
பெருமையுற விதழ்குவியா ராமகதைத்
தொடைபுனைந்தோன் பேரன்[1] ஞானத்
திருமருவும் வீரசைவப் பாலையன்சேய்
பாலைய தேவன் றானே. 40

முகவுரைப் படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 40.

## நூல்

## 2. நகரப்படலம்

### தெய்வத்தன்மை பெற்ற சிறந்த அரசன் யாவன் என முனிவர்கள் உரோமகருஷணியை வினவுதல்

நவிலரும் பெருமைத் தூய நைமிச வனத்தில் வைகுஞ்
சவுனகர் முதலா யுள்ள தாபதர் யாருங் கூடிக்
கவிஞர்தாம் புகழூ ரோம கருடணி தன்னை நோக்கி
யுவமையி லமுத மாரி பொழிந்தென வுரைக்க லுற்றார். 1

கொற்றவிண் மகவா னீயுங் குறைவிலா வளங்க ளோடு
முற்றணி மானத் தேறி யொழிக்கருங் கடவுட் டன்மை
பெற்றுவா னவனி யெங்கும் பெட்புறச் சரிக்க வல்ல
நற்றவ வரசன் யாவ னென்னவே நவிற லுற்றான். 2

### உரோமகருஷணி முனி வசுவின் வரலாற்றை உரைத்தல்

முனிவர்கா ணீவிர் சொன்ன முறைபெறு மிறையா ரென்னின்
மனுநெறி தவறாச் செங்கோல் வாய்த்துள வசுவென் றோதுந்
தனியிறை யொருவ னுண்டாற் றகவுடைச் சேதி நாடன்
குனிசிலை மதனன் போல்வா னவன்புகழ் கூறற் பாற்றே. 3

### அதிஷ்டானபுரி வருணனை

மன்னவர் மன்னன் சீர்சால் வசுவெனு நாம வேலான்
தன்னிக ரின்றி வாழுந் தனிநகர் யாதோ வென்னில்
உன்னருஞ் செல்வத் தோங்கி யுயரதிட் டான மாகு
மந்நகர் வளத்தை மற்றீண் டறைகுவல் சிறிது கேண்மின். 4

---

1 பி. ம்: தொடைபுனைந்தோன் பேரன்.

கற்பக மாத ருக்கே கணவிஞ்சை யணிக ளுக்கே
செப்பிடப் பலமா வாரஞ் சேரகங் கலியா ணத்திற்
கொப்பிலா முதலொண் சீர்த்தி யாமொளி தரும ணிக்குப்
பொற்புரு கரமென் றென்றும் புகன்றிடப் படுமப் பேரூர். 5

வரமுறு மினிய கேள்விக் கிதமுடை வாக்குப் பெற்ற
விருபிறப் புடையி னங்கட் கின்பணை யிடமாய் மிக்க
பொருவிலொண் கலைகள் யாவும் பொருந்திடு முறையாய் மன்னி
விரியுமைம் புலன்க ளுக்கு விருந்துசெய் திடுமப் பேரூர். 6

புலவர்கண் ணாகி மானப் பொலிவுபெற் றேம முற்றுக்
கலைகளிற் சிறந்து மாக்கள் கவின்படைத் தினிய வேரிப்
பலபல சூழ்ந்தின் பாடல் பயின்றுயர் மாத ரான
குலமணித் தொகைநி றைந்து குலவுமந் நகரி மாதோ. 7

மதில் அகழி இவற்றின் சிறப்பு

வான்றொடு மதிலு மீதார் வயிரஞா யிலினொ ழுங்கு
மான்றவண் டமுமவ் வண்டத் தாறுமென் றுன்னப் பண்ணு
மேன்றமூ தண்டந் தாங்கு மெழின்மகோ ததிகொ லென்னத்
தோன்றுமவ் வெயிற்பு றத்தே சூழ்தரு மகழி மாதோ. 8

விரகற நிமிர்ந்தோர் தாழ்ந்த மிக்கவர் கீழ்மே லென்ப
தரைமிசைக் கண்டா மின்பத் தனிமதி னிமிர்த லானே
யிரவித னிரதந் தன்னைச் சுமந்ததிவ் வகழி தாழ்ந்தே
யரவிறை முடிமே னின்ற ததிசய மிதில்வே றுண்டோ. 9

இலகெயின் மீது வைகு ஞாயில்க ளிணைந்த நாப்பண்
சிலபல திகிரி யாகிற் செல்லரி தென்று நோக்கித்
தலமகிழ் தனது திண்டேர் தனக்கொரு நேமி யாகப
புலனுற வகுத்தல் செய்தான் போற்றருங் கதிர்ப்ப தங்கன். 10

பரப்புறு மகழி யாழ்ந்து பாதலம் புகுத லாற்றன்
கருத்திடை யுன்னி வேதாக் கடிப்புன லிடைத்தாள் கொண்டு
சரிப்பரி தெனவந் நாட்டிற் சார்ந்திடு சனங்க டம்மை
யுரத்தினிற் செலவ மைத்தாங் குரகமென் பெயருநீத்தான். 11

அகழியிற் கயல்க டுள்ளி யணிமதின் மிசைப்போய் வீழ்தல்
புகழ்மிகு புரத்துள் வைகும் புணர்முலை மகளிர் கண்ணோ
டிகல்செய வுன்னித் தாவி யெழுந்தவை பிறழ்தல் கண்டு
மிகவெரீஇ நடுந டுங்கி விரைவொடு மீடல் போலும். 12

வேறு

## நால்வகை வருணத்தவர் சிறப்பு

மகர்சுசியர் தருமர்புகழ் மிகுமருந்தா
 னவருயர்ந்த வருணர் மிக்க
நிகரில்கலை யுடையர்பொரு ளதிகர்தலை
 மதியர்மூய னீரர் வேதர்
தகவுறுமா தவருலக மித்திரரொண்
 புதர்குருவாந் தகைய ராகு
மகமகிழிப் புரமறையோர் பூசுரர்க
 ளென்பதனுக் கைய மின்றே. 13

உயர்நடைக்கோத் திரபதிகண் மடிமையிலாப்
 போகிகளம் புகுந்து நின்றால்
இயல்வெளிருக் கனமானோர் வாண்மறவர்
 நரசிங்க மென்னத் தக்கோர்
வயமுனையி னிடைமுன்பின் பாராத
 குமாரரவரை மறையாச் சூரர்
வியலரிமுன் றெளிவுகெடா கலையாள
 ரிந்நகர்வாழ் மிக்க வேந்தர். 14

குவலயத்துக் காதார மாதலினு
 லத்தமொடு குலவும் பண்பால்
எவருமகிழ் மானத்தின் மருவுதலா
 லிந்துகுல ரிந்துப் போல்வார்
நவையறுசீர்த் தரணிகுலா கரங்கொடு
 நேமியை விளக்கு நன்குளராய்த்
தவறில்சயந் தனமுளராய் மாவுளராய்
 நின்றமையிற் றரணி போல்வார். 15

தன்னினிய மித்திரனைப் பலியெடுக்க
 நோக்கியுறு தன்வாழ் வென்னென்
றுன்னியித மித்திரர்பா லரியளிப்பா
 கன்வருத்த முறினுந் தீர்ப்பர்
நன்னெறிசேர் பொருள்கோடிக் கொருகொடியாய்க்
 கொடிகோடி நாட்டு கூலத்
தின்னலிலா துறைவணிக ரவர்பெருமை
 யெவரானு மியம்ப லாமோ. 16

சதுர்த்தவர்தா னியப்பொலிமேற் றவழ்மதியான்
 முளைத்தபயிர் தன்னைத் தின்ன
ம ̂ குளுழை தாவுதல்கண் டாகாயத்
 துறுகங்கை மதித்து நந்த

மிதத்தகுல மக்கள்பொரு ளெனப்பொற்ற
றமரைமுகத்தி னியல்சேர் வண்டின்
அதிர்ப்பெனுநல் லோசையினல் விரைந்தோட்டு
மவரியல்பை யறைதற் பாற்றே. 17

வேறு

யானை குதிரை தேர் இவற்றின் சிறப்பு

தடநெடுங் குன்றம் போன்ற தந்திமா கரடத் தூறி
இடைவிடா தொழுகுந் தான தாரையி னியல்பு கூறின்
மிடல்புனைந் திடும வற்றின் விரிந்தவன் செவியின் காற்றால்
அடிபடு முகிலாற் றூதங் கடிதனில் வீழ்தல் போலும். 18

குஞ்சரக் கன்றி னேறுங் கூர்விழிக் கரிய கூந்தல்
வஞ்சியர் பாரி சாத மருவலர் பறிப்ப ரெண்ணி
வெஞ்சினப் பிறைவெண் கோட்டு விறற்புகர் முகக்கொ டும்போர்
அஞ்சனப் பெருவே ழத்தி னுயர்வையா ரறிதற் பாலார். 19

பரதர ணிக்க ணேகிற் பரவையில் வீழ்த்த லாற்றன்
புரவியை யிகழு மிந்தப் புரிப்பரி யொலிபொ ருதே
இரவிமா வாகிச் சாயைக் கெதிர்தலும் பதத்தா லுய்த்தவ்
வரியின்காற் கதியை மாற்று மைங்கதி தாங்கள் காட்டி. 20

பொன்மய மறுகின் மான்றே ரெண்ணில புகவெ ழுந்த
மின்மிளிர் பொற்ப ராகம் விண்ணதி கலந்து சேறாய்
மன்னியத் தினமு ழைத்து வயங்குதா மரைக ளெல்லாந்
தன்னிக ரிலவா மம்பொற் றமரை யான மாதோ. 21

அரங்கில் மயில் ஆடுதல்

கண்ணினுக் கினிய தூய கதிர்மணி யரங்கு தோறும்
வண்ணமே கலைப்பூட் கொங்கை மங்கைய ராடா முன்னந்
தண்ணுமை முழங்கல் கேட்டுத் தன்சிறை வீசித் தோகை
நண்ணிநின் றாடுந் திட்டி நடனமீ தென்ன மன்னோ. 22

கோபுரச் சிறப்பு

வகைமணிச் சிகரி மீதே வைத்தபொற் குடங்க டம்மைச்
சகமகிழ் கனக வண்ணத் தாமரை யென்ன வுன்னி
புகர்முகத் திசைவெவ் வேழம் புழைக்கையாற் பிடுங்கு மென்றே
நிகழிரு புறத்து மொண்கோ ளரியுரு நிறுத்தி னரால். 23

மகளிர் நடன சிறப்பு

இவர்மதி மணிமே டைக்கண் ணேழையர் நடித்தல் காண்பா
னவையில்சித் திரத்தோ டொன்றா யணங்கியர் நயந்து வைகு
மவரிசை யமுதாற் சீவ சித்திர மாகிக் கூடுந்
தவறில்சந் தடியிற் கூடி யேகுவர் தமின்ம கிழ்ந்து. 24

வேறு

கனமுழல மதிகுறையக் குவல யததின்
கவன்றினமுங் கெடச்சிறந்த கோத்தி ரத்தின்
தனுவளையப் புரிந்தகுறை தரணி கைக்குத்
தமனியமீ....ய....னருய் வீட்டை
புனிதமறும் பங்கமுறப் படுத்துத் தீமை
புண்டரிக னகற்றினனிப் புரமென் மாதர்
இனியநறுங் குழல்வதன நயனங் கொங்கை
யிலங்குதொடை தாள்படைத்த வியல்பா லன்ருே. 25

நந்தவனச் சிறப்பு

சாற்றருநந் தனவனத்தின் முருகுவிண்ணிற்
சார்வதி சயித்ததனின் சந்தா னத்தை
ஏற்றமுடை விண்ணவர்க ளெடுத்துப் போய்வைத்
திரங்குதிரை சுருட்டுசுர நதிநன் னீரை
ஊற்றிவளர்த் தனர்கொல்லோ வறிகி லேமா
லொளிதிகழ்ந்து விளங்குபெருங் கனக நாட்டிற்
போற்றினிய சந்தான மென்ருேர் தாருப்
புனிதமண மகலாது நின்ற தன்றே. 26

வேறு

ஒருவிடலை மலர்விற்பாள் புடைநின்றுன்
சண்பகப்போ துதவு கென்ன
மருவுறுமென் சண்பகப்போ துயிருடைய
தென்றனளுன் மணிமென் முல்லை
அருளுகென வென்றனுக்கு முல்லையிலை
யென்றனளுன் னும்பற் போது
தருகெனலு மென்னும்பல் கற்பூர
மணக்குமெனச் சாற்றி னளால். 27

நீலவொழுங் கினைநாக மலரைமடி
யிடைமறைத்த நீர்மை யென்கொல்
கோலமல ருடனிலகம் புயக்கொடியை
யெடுத்திலையென் கோதா யென்னச்
சாலவெளி மடுவருகி னிருந்ததுநா
கத்தின்மிசைச் சார்ந்த தம்பொன்
மால்வரைப்பா லுறைந்ததன்ருே வெனநகைத்தாள்
வினவினவன் மயங்க மாதோ. 28

பழுதறுமென் போதுபகர் மடவியர்முன்
கடிமலர பானற் போது
விழைவுதரு தளவமலர் குமுதமலர்
புன்னைமலர் வீற்று வீற்றுக்

குழுமிநறுஞ் செவ்வியொடு விளங்குதல்போல்
கொடிநிகரக் கோதை மாதர்
எழுதரிய வுறுப்பினுட னுறவாடி
வந்துறையு மியற்கை போலாம். 29

## நீர்வளம்

மாநதிக டொழுஞ்சுத்தி மதிநன்னீர்
பாய்ந்துபெரு வயலிற் சாலி
தானினிது விளைதலினா லந்நகரோ
ருஞற்றுபல தரும சாலைப்
போனமுய ராகுதியாக் கொண்டமரர்
பொருந்தியொளிர் புனிதத் தானே
கானுலவு மந்நதிவான் கங்கையினுஞ்
சிறந்தன்று காணுங் காலை. 30

சூடுமலர் குழலியர்நீ ராடுதொறுங்
கரைந்திடுகத் தூரிச் சேற்றி
னாடளைந்த வளைத்தரள மப்படியே
பெருமணமுற் றொளிர்ந்த மின்னார்
தேடருஞ்சந் தனமணிந்த தண்பணிலக்
களத்தினிடைச் சேர்ந்தெப் போதும்
பீடுறுமா மின்னுடையோ ரெவ்விடத்துஞ்
சிறப்படைவர் பேசுங் காலை. 31

## நிலவளம்

வேறு

உழைபொரு தடங்க ணல்லா ருலப்பில ரணைந்து மூழ்கும்
பொழுதெலா மவர ணிந்த புழுகொடு கலந்து செல்லும்
விழுமிய நதிநீர் பாய்ந்து விளைந்துறு சாலி முற்றும்
புழுகுநா றிடுமென் றலப் புரவள மியம்பற் பாற்றே. 32

வளர்பசுஞ் சுவைக்க ரும்பை மணிநிறச் சிறுபுட் கொத்தக்
கிளர்தரு சாறு பாய்தல் கெண்டையந் தடங்கட் செவ்வாய்த்
தளிரிடைப் பழன மாதர் தங்களிற் பாடும் பண்கேட்
டுளமிக வுருகிக் கண்ணீ ரொழுகுதல் போன்ற மாதோ. 33

வேறு

மதிநில வெறிக்கு மிரவினிற் புளின
வரைதொறு மிளநல மகளிர்
சிதரரிக் கண்மூய் விடுப்பமற் றவர்போய்ச்
செழுங்கருப் பூரவான் கதலிப்

புதுமிழன் மறைந்த வனிதையர்த் தொடுவான்
புகுமுனம் பாளிதப் பொடிமென்
கதியுடை யொலியாற் கண்புதைத் திடலுங்
கரந்தவர் கலேரென நகைப்பார். 34

நகரப் படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 74.

## 3. வேந்தியற்படலம்

### வசுவேந்தன் சீர்மை

வாய்த்தவிவ் வளங்கூர் நறவுகொப் பளிக்கும்
மலர்மக டளக்கநிட் டான
மாய்த்திக ழளவில் புகழநிட் டான
மாம்பெயர்ப் பெரும்பதிக் கிறைவன்
பார்த்திபர் மகுட கோடிக ளுறிஞ்சு
பதத்தின றந்தனக் குடம்பாய்
ஏத்தரும் வாய்மை யாவியாய் மிகப்பெற்
றிலங்கினன் வசுவெனு மிறைவன். 1

தன்கரத் திலகி மின்னென மிளிர்வாட்
டாரையா கியதனி முகிலால்
அன்புடைக் கொடியர் வதனதா மரையு
மதியுமாங் கவர்தமக் குரிய
வன்புடைக் குலவோ திமங்களுந் திரிவுற்
றணங்குறப் பெருங்கட லுலகின்
மன்பதைக் குலக்கே தகைமிக மலர்ந்து
வாழ்ந்திடப் புரிந்தன னவனே. 2

வேறு

இறையவன் சீர்த்தி யென்னு மினியநித் திலமே டைக்கு
மறுவறு கொண்மூச் செல்லு மார்க்கமே சாள ரங்கள்
நிறைதரு வீர மென்னு நெடியபே ரங்கி தன்னில்
உறையுமோ ரிரும்பாய் நின்ற தொளிதரு கனக மேரு. 3

தானையி னெழுந்த தூழித் தரைக்குவான் கோளு டுக்கள்
ஆனவை யெல்லாங் கெற்பத் தாதன மென்ன லான
கோனவன் ருன தாரைக் குரைகடற் றிரைமேற் றுள்ளிப்
போனதோர் திவலை யன்றோ பொருவிலா காய கங்கை. 4

அவனுடைக் குணமோரரிய சீலசந் தான வல்லிக்
குவமையில் பிரமாண் டங்க ளொளிர்பெருங் கனிக ளாமாற்
குவலயம் புரக்கு................................ ல
மிவர்முடி யுரக னுக்கு மியம்பலாந் தகைமைத் தன்றால். 5

வேறு

பூமி வாயுவை யுண்பதால் நிலைத்துப்
பொருவின் மேலி....ஞ் செயலாற்
றூம வேலிறை பெயரொடுஞ் சார்ந்து
தவறி லாவசு மதியெனும் பெயர்பெற்
றேம மாரவன் குணமணிந் தனகா
லெய்திமிக் கக்கந் தவதியு மாகி
நாம மண்டல கடகமுந் தரித்து
நலனை டைந்தனள் பொறைபடைத் தனளால். 6

எதிர்த்த மாநில விறைவா....கற்றி
யிணங்கின் முற்படி வளர்வுறப் புரிந்து
மதிர்த்ததி யர்வெங் காந்தி னமடக்கி
யடிந கத்திடை வீழ்பொழு தளித்து
மதித்து நோக்கிடி விதமுறப் புரிந்து
மாறி நோக்கிடிற் கொதிப்பொடு திகழ்ந்துந்
துதிக்க வையமீ திலங்கியுஞ் சிறந்தான்
றொலைவி லாப்புகழ் வசுவெனு மிரவி. 7

அதிர்பெ ருந்திரைக் கடலினை வீர
மான வங்கியாற் சுவறல்செய் ததனை
யுதவி டுங்கன தாரையம் புனலா
லோங்கி யேமிக நிறைதரப் புரிந்து
முதிரி ரும்புவ னத்துளோ ரிதய
மூண்ட கங்தொறு தொறுமன வரத
மெதிரில் பேரளி செறியவு மெழுந்தான்
யாவ ருந்தொழு மிணையில்வா ளிறைவன். 8

ஆசு நிருமவ் வரசனங் கொருநா
ளருவி மாலைநா றிமகிரி யயந்த
தேசு லாவுகோ லாகல மெனும்பேர்ச்
சிமைய மென்பது சுத்திமா மதியில்
வீசி வந்தொலி பரந்தலை புரள
விழுந்த தாலதை யொருபா லெனவே
யாசி லாத்தன் பதநக மதனு
லெற்றி விட்டன னெழுந்து போய்விழவே. 9

### வசுவின் திறனைக் கேள்வியுற்று இந்திரன் வியந்து நட்புக்கொளல்

வான விந்திர னிதுதனைக் கேட்டு
மனத்தி னோர்ந்திறும் பூதொடு கலந்து
தேனு லாம்பொழி னிறைந்துள வரையின்
சிறையை வச்சிரப் படைகொடு தடிந்தாம்
யாந லந்தரு மிவன்பத நகத்தா
லெற்றி ஞன்மிக வலியனென் றெண்ணி
மான மன்னவன் றன்னுழை யடைந்து
வளரு நண்புகொண் டேகினன் மகிழ்வால். 10

### அரசன் பதநகச் சிறப்பு

பறந்து வந்துவீழ்ந் தொருவரை மறிக்கப்
பட்ட மாநதிப் பெருந்திரைப் புனலின்
மறைந்து போய்மிகக் கிடந்திடும் பெரிய
மாநி லந்தனைப் பழம்படி யமைத்துச்
சிறந்த மன்பத நகத்தினுக் குவமை
செப்பி லொப்பறு பேருக முடிவிற்
பிறந்த நீரிடை முழுகிய புவியை
பெரிதெ டுத்தமான் மருப்பென லாமால். 11

வேறு

### இந்திரனது வச்சிரப்படை வசுவேந்தனிடம் விஞ்சை கற்க வருதல்

கரிய மால்வரை யெறிந்தநல் விஞ்சையைக் கற்பான்
பருவ ரைச்சிறை தடிந்திடு வச்சிரப் படைதான்
தரையின் மன்னவர் முடிமிசைத் தன்பெயர் மணியாய்
மருவி யேவசு மலரடி நாடொறு[ம்] வணங்கும். 12

திசைகொள் வேந்துட னுறைபொழு தணையில்வந் திகர்தா
மசல பேதியென் றேத்தவிண் ணரசுகீழ் நோக்கிப்
பசும ணிப்புடை யுகிர்கொடு கீறுதல் பறம்பை
வசையி லிவ்விறை யிட்டதிவ் வாறெனன் மானும். 13

### வசு கோலாகல மலையுச்சியில் தங்குதல்

வரங்கி டத்தல்போற் றுனெறி வரைகிடத் தலினல்
இரங்கி யோர்பகல் யாம்விளை யாடுதற் கியைந்த
திருந்து பூதர மாமிது வெனவதின் சிரத்தில்
விரிந்த சீரிடை யன்பொடு சரித்தனன் வியப்பால். 14

தலைமை பெற்றிடு வசுவரைத் திண்புயந் தழுவி
அலகில் கோத்திர மிலங்குற வனேகசந் தானம்
புலனு றப்பெறு சிறப்புள தானவிப் புவிக்கு
நிலைகொ ளேகசந் தானவா னுலகமோ நிகர்க்கும். 15

வேந்தியற்படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 89.

## 4. வசந்தப்படலம்

### வசந்த ருது தோற்றம்

சால மங்கல முடையவிப் புவிமக டனக்கு
வால கோகில மழைத்திட வடைந்தநல் வசந்த
கால மென்னுமோர் வண்ணமா மகனுளங் களித்துக்
கோல முற்றநற் றளிர்முகை மலர்பல கொடுத்தாள். 1

சால மங்கையர் விழிப்படை சூழ்தலுந் தனுவேள்
கோல வெம்படை யார்கணு நடத்தவுங் குளிர்தென்
காலி னுலலை மாங்கனி களைநுகர் சுகத்தின்
மாலில் பேரொலி யோங்கவு மெழுந்தது வசந்தம். 2

அளியு றுந்தடத் தாமரை தொறுந்தொறு மாழிப்
புளினம் பேடையோ டொன்றவும் பூந்துணர்க் கொடிசூழ்
தளிர்ம னைக்கணே யளியொடு தத்தையன் னவரு
மிளைஞ ருங்கலந் திளைக்கவு மெழுந்தது வசந்தம். 3

### குயில்கள் மரங்களில் நிறைதல்

மருநி றைந்திடு குரவுபா திரிவழை வகுளம்
பரிய சூதமா சினிசெழுந் தமுகயில் படரந்
தருவ ளங்கெழு மிடங்களிற் பெடையோடு தழுவும்
பொருவில் கோகிலத் தொகையே நிறைந்தது பொலிந்து. 4

### குளங்களில் தாமரை மலர்தல்

தங்க ணாயகன் மறுபுலப் பகையினைத் தடிந்து
துங்க மாய்வரல் கண்டலர் தோகையர் முகம்போற்
பங்க மேசெயும் பனிப்பகை துரந்து செம்பரிதி
யங்கண் மேவலுந் தடங்கடோ றலர்ந்தன கமலம். 5

### மாமரங்கள் தளிர்களோடு விளங்குதல்

தணங்கொ டென்றல்வந் திடுதலுந் தளிர்த்தமாந் தருக்கண்
மணந்த நாயகர் பிரிந்தபின் வறுமைகூர்ந் திருந்து
குணங்கு லம்வரக் காணுமுன் குலமட மகளிர்
இணங்கு பேரழ கொழுகுமெய் தளிர்த்தென விலங்கும். 6

மருக்கொ ளின்னிசைச் சுரும்பர்மே லெழுந்திட மலர்ந்த
முருக்கில் வீழ்பசுங் கிள்ளைக ளியல்பினை மொழியில்
விருப்ப நாயக னிறந்திட மடவியர் விரிந்த
நெருப்பி லன்பொடு புகையெழப் பாய்குத னிகர்க்கும். 7

**குளங்களில் வெண்டாமரை, செந்தாமரை மலர்கள்**
**சேர்ந்து தோற்றுதலின் வருணனை**

விடலஃரும்புனற் றடத்திடை விரைகொள்வெண் கமலத்
தொடுசி றந்தசெந் தாமரை பலகலந் துறைதன்
மடுவை யம்பதித் திம்மயன் சீர்த்தியும் வயமு
மிடம தொன்றினில் வாழ்ந்திடு மியல்பினை யேய்க்கும். 8

வேறு

**வேனிற்பருவ வருணனை**

குயிலெனும் வந்திகர் புகழ்ந்து கூப்பிடப்
பயில்கிளி மாகதர் பரவிப் பாடநல்
வியனுடை வல்லிகண் மேவி யாடவோர்
இயல்பொடு வேனிலா னிறைவன் வாழ்ந்தனன். 9

மூசிய மதுகர முழுங்கு பைங்கிளி
யாசறு பூங்குயி லன்றில் கூரிருள்
வீசிய சிறுவளி மேவலான் மதன்
பாசறை போன்றன பலதண் காவெலாம். 10

தாதொடு மதுநிறை தடங்கொ டாமரைப்
போதுதொ ரூதிமம் போந்து லாவுதல்
யாதினி விருந்தன னிறைவ னென்றுதாந்
தீதறு மணியொடு தேடல் போலுமால் 11

உகுபனிப் போர்வையை நீக்கி மென்முலை
முகையினைத் தளிர்க்கையான் மூடிக் கொண்டிடுந்
திகழ்புது வல்லியைத் தென்ற லாம்பதி
சுகமுறக் கூடினன் றுனந் தொட்டரோ 12

வேறு

வசந்தமா தீன்ற தென்றன் மைந்தனைத் தருக்க ளென்னு
மிசைந்தகைத் தாயர் பூந்தே னென்னுநீர் தன்னி னூட்டிப்
பசுந்தளிர்த் தொட்டின் மீதே பலமல ரணையிற் சேர்த்தி
யசைந்துவண் குயிலின் சொல்லா லினியதா ராட்டி னூரால். 13

எண்டகு மசோகப் பூங்கொம் பிராகத்தால் வசந்தங் காட்டி
மண்டுதே னளியி னேச்ச மாதவி தளிர்ப்ப டாத்தைக்
கண்டது துடைப்ப வந்த மாதவி கண்சி வந்து
கொண்டுறுங் குயின்மேற் பூவின் கொழும்பொடி யுகுத்த தன்றே.

பொருவில்லைங் கொடிகள் காவிற் புகவளிக் கணத்தி னேடு
மொருசிலைக் காம தேவற் குயர்விழா நடத்த லானே
மருவிய மைந்தர் மாதர் வளந்திக ழூர்க டோறு
மருமத னினிய நோன்பு செய்திட லரிதோ வன்றே. 15

அஞ்செனு மிடத்தி னென்றி யரியதா மிந்தோ ளத்தை
வஞ்சியர் காட்ட னைந்து வனக்குயி றளிர ருந்தி
தஞ்சிரங் கிழாய் நின்று மமைதலாற் சரிப டைத்தாங்
கெஞ்சலில் வசந்தங் காட்டிற் றியன்முழு ராக மாக. 16

உலகினை யனுக்கி............முறுபணி யெனக்கு ளஞ்சி
யிலகிமா சலது ருக்க மேறினும் விடுவ லோவென்
றலர்புக ழினன்செவ் வாள்கொண் டமைவிலா வெய்யோ னுகி
நலனுறு வடபா னேக்கி நடந்தனன் றென்பா னீத்து. 17

தளிர்ப்படை யேந்து தேவன் தருங்கொடி யேறத் தேர்மேல்
வளப்பட வரலுந் தாரு மேடையில் வல்லி மாதர்
களிப்புட னிவர்ந்து பல்பூத் தளிர் கையாற் கடிதி றைத்தார்
அளப்பரும் பலன்க டம்பா லடைவதற் கிச்சை கொண்டு. 18

துன்னுபைங் கொடியின் சென்னித் தூயபன் மலரு திர்த்து
முன்னருந் தளிரின் மேய வுருவினைப் பிடித்த லைத்து
மன்னுகோ கனகக் கண்ணர் தோட்டினை மலைத்துத் தென்றல்
என்னுமா மத்தன் வந்தா னிளையின்மா விடனே யாகி. 19

முரு(க்)கலர் விளக்கிட் டங்கோங் கணிகளை முழுதுங் கண்டு
தருக்குயித் திகையைத் தாண்டித் தருங்கொடி யென்னு மாதர்
மருக்கிளர் பூம்ப ராகக் கலையினை வாங்கிக் கொண்டான்
செருக்கொடு வனத்த டைந்த சிற்றெலிக் காவன் றனே. 20

வளாளர் கையுறைப் பொருள்களுடன்
வசுவரசன்முன் செல்லல்

மறையுருச் சிறுகாற் கள்வன் வரிமது மானி கட்கு
வெறிமலர் மதுக்கூட் டுண்ண விட்டனன் சுகப்ப டர்க்காங்
குறுபல முகுத்தா னென்றே யுதிர்கனி மலர்தேன் கொண்டு
முறையிட வரல்போல் வந்தார் முயல்வள பாலர் கோமுன். 21

வசந்தப் படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 110.

## 5. தண்டலைப் படலம்

### வனபாலர் பொழில்வளத்தை வசுவுக்குக் கூறல்

வந்தர சனைப் பணிந்து வன்வன பாலர் சொல்வார்
பைந்தளி ரரும்பு போது பழுதறு பிஞ்சு காயோ
டந்தமில் கனியெந் நாளு மற்றில தாகி யுற்ற
தெந்தைநின் பொழில்வ சந்தற் கியல்புடை யுறையு ளாமால் 1

மாவனக் கிளிமு ழங்கும் வளத்தினை விளம்ப வற்றோ
தாவில்சீ ரிலகு நாக தருமலர்க் காக வெய்தும்
பூவளித் தொகையைக் கண்டு புயலென மயில்க ளெல்லா
மோவற முழங்கு மென்னி லுலம்பொரு குவவுத் தோளாய்! 2

மங்கல மயத்த யாங்கள் வளர்த்தபூந் தருக்கள் யாவு
மெங்களுக் குதவி யாக வின்னிசை பாடி யன்பு
பொங்கொளி மிதிப்ப வீழ்ந்த பூம்பொடிப் பாத்தி தோறுந்
தங்கள்பூ மதுநி ரம்பத் தாந்தழைக் கின்ற மாதோ. 3

மலர்மதுக் கதலி யின்பா ளிதக்குவை மருவி வந்து
நிலையுறு தடத்துண் மேவி நிகழ்சல சூத்தி ரத்தூண்
பலவினு மிவர்ந்து தூற்றப் பயந்தல ரிக்காங் குற்ற
குலவிரு ளோடு கூடிக் குளிர்பனி துளித்தல் போலும். 4

பார்பல கொம்பின் சீரும் பல்லவ கணத்தி னேரும்
வேரியம் பூப்ப ரப்பும் விளம்புத லெளிதோ வேந்த
சாரியல் வனந்த னக்கோர் சமித்திரா தமொப்பன........
........மற்றெரூவ் வொன்றே யச்சமி ராதமொப் பாகும். 5

பூவலர் மிசையே மேவிப் புணருமா லொடு பொருந்தித்
தாவில்சீர் மதனைப் பெற்றுத் தளிருரு மிகவுஞ் சேந்து
மேவருந் தும்பிக் கின்பம் விளைத்தவ ணுறலா லந்தண்
மாவின மெல்லாஞ் செய்ய மாவென விளங்கு கின்ற. 6

தொழின் மதன் கணையா யார்க்குஞ் சோகமே விளைத்த தீமை
கழிதர மதித்தோ தம்பேர் காரணம் பிறநி னைத்தோ
வழிமதுத் திவலை தூற்றி மலிநிழல் பரப்பி யெங்கும்
பொழிநிறை யசோக மீந்த பொருந்தினர் தமக்க சோகம். 7

பூங்கணை மதனில் லான பூங்கொடி நிறைந்த சூழல்
ஆங்குறை தலினுற் போதின் மாளிகை யமைப்ப தென்னை
தேங்கிய நறும லர்த்தூள் திசைதொறும் பரத்த றன்று
னீங்கரு மணத்தூள் வேறு நிறைத்திடல் வேண்டா வாங்கு: 8

பூமது வங்கங் கோடிப் பொலிவொடு தெளிந்தி ருப்பத்
தாமவே ழுழவோய் வேறு தனித்தட மமைப்ப தென்னே
தோமில்கற் பூர வாழைத் துகளிளந் தென்ற றாற்ற
மீமிசை நிறைத றன்னல் விதானம்வே றியற்ற லென்னே. 9

வனபாலர் பொழிலுக்கு எழுந்தருளுமாறு
வசுவினை வேண்டல்

மாசறு வசந்த வேந்து வன்வன பால னுகித்
தேசறு மளவி லாத சிறப்பமைத் தெதிர்பார்க் கின்றான்
பூசலிட் டினவண் டார்க்கும் புனைமல ரலங்கற் றோளா
யோசைகொ ணறைவ னத்திற் குற்றிடல் வேண்டு மென்றார். 10

வசு, சோலைக்குச் செல்ல
இரதத்தைக் கொணரும்படி கூறல்

இவ்வகை யுரைத்து நிற்கு மியல்வன பாலர் யாருஞ்
செவ்விதிற் புவன பால ராகவே சிறக்க நல்கிக்
கவ்வைகொ ளிளமென் காவைக் காண்பதற் குள்ளம் வைத்துத்
தெவ்வடு குவவுத் தோளான் றேர்தனைத் தருக வென்றான். 11

வேறு
இரத வருணனை

மரகதக் கொடுஞ்சி வச்சிரத் திகிரி
மாமணிச் சிகரிநீள் கதலி
தரளமா லிகைகோ மேதகப் பரப்புத்
தனிவயி டூரியத் தட்டுப்
புருடரா கப்பா ரரும்துகிர் மதலை
பொற்கலை மனோகதிப் புரவி
மருவிய பெருந்தேர் தனையொரு வலவன்
மன்னவன் றன்னெதிர் கொணர்ந்தான். 12

வேறு

உலப்பறு புரவி பூண்ட தருநிறை வலவ னுள்ள
திலக்குறு திசைக ளெங்கு மேருவ தனேக நேமி
புலப்பட வுடைய தாமப் பொருவில்வாள் வேந்தன் பொற்றேர்
நிலத்தகட் டாம ரைக்கு நெடுமகிழ் வளித்த தம்மா. 13

பெறுபுகழ் வசுவேந் தென்று பெயர்மிகப் பெற்றே னேனு
நிறைதிற லுறுமவற்கு நிகரலே னெனக்கு பேரன்
திறையிடு புட்ப கம்போற் றிகழ்வுடைத் தவனி யெங்குங்
குறையற நிழல் பரப்பு குடையினை னுடைய தேரே. 14

### அப்பொழுதேற்பட்ட ஆரவாரம்

புலவலம் புரிமு ழக்கம் பல்லியத் துழனி பேரிக்
குலவொலி கண்டை யோதை கோலவந் திகர்க விப்பு
விலைவரம் பரிய லாகா வேத்திர மெடுத்தோ ரார்ப்பு
நிலமுழு துண்டு மண்டி நிமிர்ந்தவா னுலக மெங்கும். 15

### பல தேயத்தரசரும் வசு தேரில் அமர்ந்துசெல்லும் காட்சியைக் காண வருதல்

ஆயிடை யங்க வங்க கலிங்கம தாதி யான
தேயமன் னவர்நெ ருங்கி வந்தனர் செறிந்து காண்பான்
ஏயுமன் னவர்தம் பூணி னினமணி யுதிர்ந்த யாண்டுந்
தூயபன் மலரை யுந்தண் முகையையுஞ் சொரிந்த தென்ன. 16

### வசு தேரில் அமர்ந்துசெல்லும் காட்சி

நெடியவான் சிலையு மம்பு பொருந்திநன் னீல மேவி
முடிவிலாத் தரளஞ் சேர்ந்து முழக்கொடு தடித்தி லங்கிப்
படிவிரும் புறந டக்கும் பைம்புய லனைய தேர்மேல்
வடுவற விவர்ந்தான் ஞால மகிபதி யென்ப மாதோ. 17

### வசு பலர் சூழச் சோலையின் அருகில் வருதல்

புண்ணிய சனரே தண்ட தரரும் புவன வேந்தர்
எண்ணருங் கலையு ளார்மற் றிசையெழு நாவர் சீர்சால்
உண்ணயந் திடுத னத்த ருயர்தலை மதியர் சூழத்
தண்ணளி பொதுளு மொண்பூந் தண்டலை யருகு வந்தான். 18

### பல மாதர்கள் வெண்சாமரை முதலியன வீசுதலின் வருணனை

மலர்மக ளனைய மாதர் வளைக்கரத் தெடுத்த சைக்கு
மலகில்வெண் கவரி செம்பட் டாலவட் டத்தி னீட்டம்
புலனுறப் பிறழ்தல் கோவின் புகழுமொண் டிறலுங் கூடி
யுலகுடை யவன்றன் முன்னின் றுய்யென நடித்தல் போலும். 19

### வெவ்வேறு பொருள்கள் ஒன்றுசேர்ந்தமை

மன்னவர் முடிக டாக்க வுதிர்ந்தபொற் பொடிவ யங்கும்
பொன்னொளிர் சண்ப கப்பூம் பொடியொடு கலந்த தம்ம
கின்னர மிதுனம் பாடுங் கிளரொலி யொடுமென் காலால்
இன்னிசை யாழ்ந ரம்பி னெழுமொலி சேர்ந்த தன்றே. 20

படியில்கற் பூர வாழைப் பசியநெட் டிலையின் காற்றும்
பிடிபடு துவச காற்றுங் கூடின பிரித லின்றி
வடிவுடை மிடறு விம்ம வந்திகர் புகழு மோதை
யொடுகருங் குயிலி னோதை யுற்றது கற்றோர் போற்ற. 21

மாநிழல் கீழேபட்டு அசைதலின் வருணனை

மதியுல களவு நீண்ட வனத்துறு தருக்கள் யாவும்
புதுமல ரொழுகு பைந்தேன் புவிமிசை பரந்து நிற்ப
வதினுறு தமது நீழ லலம்வரு தன்மை சால
வெதிர்வரு மரசன் றாளி லிறைஞ்சுதன் போன்ற மாதோ. 22

வசு பொழிலில் புகுதல்

தோத்திரம் பொலிய வானந் தொடுமணித் தேரி றங்கிப்
பார்த்திபர் முதலோர் தம்மைப் பரிவுட னவணி றுத்தித்
தாத்திரி புகழு நன்ம சகனென்போ னங்கை தாங்கப்
பூத்தரு வனத்திற் புக்கான் புவிபுக ழரச ரேறு. 23

அரசன் கண்ட பல்வேறு பொழிற் காட்சிகள்

செழுங்கிளி யொழுங்கென் றேது சிவதோ ரணமுந் தூய
கொழுங்கனிப் பொறையி னோடு குலவிய வாழைக் காடு
மெழுந்துமேற் றளிர்த்த சூத மெனும்பல நிலைத்திண் டேரு
முழுங்கிலைக் கமுகும் யாவும் முறைவழா வரசன் கண்டான். 24

வசந்தனுற் றிகழ்சா லைக்கண் மகிழ்வொடு நிறைவு கொள்ள
மிசைந்தநல் விருபி றப்பு வியன்குல மிதவாக் கோடு
மிசைந்தசி ரங்கைச் சாகைக் கேசராங் கதையை யென்று
மசைந்திடா வலிய சிந்தை யரசன்மே லுதிர்த்த மாதோ. 25

பைங்கொடி மாதர் கிள்ளைப் பாட்டினு லளியி னோடு
மங்குறு தளிர்க் கலத்தி னருப்புநித் திலம்ப ரப்பித்
தங்கிய வொலியி னுடித் தனித்தனி சுழற்றி நிற்றல்
பங்கய நயனங் கொண்டு பார்த்திப னினிது கண்டான், 26

தருக்களுக் கமைத்த திங்கட் டனிமணிப் பாத்தி கட்குண்
மருக்கனி தளிர்ப்பூம் பட்டு மலர்தனித் தனியு திர்ந்தே
யிருத்தல்பா ரிறைக்கு வேனி லிறையிர சதக லத்திற்
றிருத்துபு வைத்துக் காட்டுஞ் சிறப்பினை மானு மன்றே. 27

வல்லியென் முல்லை மாதர் மருவில்லைபைங் கொடிசூழ் மாடத்
தெல்லடை யாடை போர்த்தே யெழிண்முகைச் சாள ரத்துண்
மெல்லென முகம்வைத் தொண்பூ விரைப்பொடி யுதிர்த்து நின்றார்
அல்லுருக் குயிலின் சொல்லா லழகொடு பேசிக் கொண்டு. 28

தகவொடு மலர்ந்து நின்ற சண்பகக் கொம்பு வேந்தன்
முகவெழில் சிறிது நோக்கி மோகமுற் றதுகொ லேரின்
மிகுமுருப் பசலை பூத்து வெம்மையுற் றனங்க சாபப்
புகலருங் குணத்தி னோசை பொறுக்கலா தலைத லானே. 29

மலரெனுஞ் செம்பட் டாடை வளியினு லசையுங் காலை
பலமெனுங் கடினக் கொங்கை தோன்றலாற் பழுக்க மூட்டு
மலர்தரு தூமக் கூந்த லதுகொடு மூடிக் கொண்டார்
நலனுறு மாது ளங்க நாரிய ரிறைவன் றன்முன். 30

வேறு

மாதவிதன் கோகிலத்தாற் பாடித் தேனுல்
வளர்திலகம் பார்த்துயர்மாத் தளிர்க்கை நீட்டி
யோதுபுன்னை நகைத்தலராற் குரவு கான்கொண்
டுறவணைத்துச் செண்பகப்பூ முகந்தி கழ்ந்து
கோதின்மண வுயிர்ப்பளித்துச் சிந்து வாரங்
கோங்குகிளி யாற்பேசி யரசி னுக்கங்
காதரவு விளைத்தனமின் னனையார் தம்பா
லனுதினமித் தொழில்புரிந்து பயிற்ற லானே. 31

நோக்கிமிக நகைத்துமொழி மொழிந்து பாடி
நுவலரிய கரநீட்டி மோந்தணைத்தாங்
காக்கமுற முத்தமளித் தினிய மாத
ரத்தருக்க ளெட்டினைஞ் சிறப்பித் தெம்மைத்
தாக்கினுட னுதைத்துமிழ்ந்து விடுத்தா ரென்னத்
தழையுமசோ கொடுவகுள மிரண்டுந் தம்மின்
மாக்கனிகள் செறிபொறையாற் றலைவ ளைத்து
மலர்கண்ணீ ருகுத்தனவான் மன்னன் முன்னே. 32

வேறு

கருப்பைக டுளைத்த தெங்கின் காய்ப்புழை வழியே சோதி
புருச்சிறை யாறவாலத் துறுபுன லுகுத்து நிற்றல்
விருப்புறு தடத்து நாப்பண் மிகுசல சூத்தி ரத்தின்
அருத்திகொள் தம்ப மேனின் றரும்புனல் வீழ்தல் போலும். 33

**தேன் ஆற்றின் நடுவில் மரம் நிற்றல் கண்டு வசு கூறுதல்**

இத்தகைத் தாய காவி னினமல ரளவி லாதங்
குத்ததே னாற்றி னுப்ப னொருதரு நிற்றல் காணூஉ
நத்தொலி பொலியுஞ் சுத்தி மதிநதி நடுவு நின்ற
குத்திர மொத்த தென்று குறித்தன னரசர் கோமான். 34

### கின்னர மிதுனங்கள் அரசனுக்கு நற்செய்தி கூறல்

நீடலை பொருதே ஹேற்றில் நின்றவத் தருவின் மீதே
கேடில வாமி ரண்டு கின்னர மிதுனம் மேவிப்
பாடல்கள் வல்லாய் நிற்கோர் பகருஞ் சுபம ளித்தாய்க்
கூடுமென் றவனெ றிந்த குவட்டினிற் சென்ற மாதோ. 35

### கோலாகலப் பருவதஞ் செல்ல அரசன் கருதல்

அன்னசொற் செவியி னூடா ரமுதமாய்ப் புகுத வாழ்ந்து
துன்னுபுள் ளொலியி னேனை துகளில்கோ லாக லங்கொண்
டுன்னரும் வளங்கண் மேவி யுயர்ந்தகோ லாக லத்திற்
கின்னுயிர்ப் பாங்க னோடு மேகுவா னுள்ளம் வைத்தான். 36

தண்டலைப் படலம் முற்றும்.

ஆகத் திருவிருத்தம் 146.

## 6. வரைக்கேகு படலம்

### பாங்கன் தான் ஒரு ஆச்சரியமான காட்சியைக் கண்டதாகக் கூறுதல்

அத்திற முரையா முன்ன ரறிந்துயிர்க் கினிய தோழன்
கைத்தலங் கொடுவாய் மூடிக் காசினி முழுதுங் காக்கு
முத்தம வேந்தர் வேந்தே யோரிடம் புதுமை கண்டேன்
சித்தம்வைத் ததனைக் காண்டி யென்றனன் றெரிக்க லுற்றான். 1

என்கர நீட்டு செவ்வே யிறைவநீ பாராய் சேணின்
மின்குல வொருதண் கொண்மூ நின்றது மிகவி ரிந்தே
யன்புட னதனைக் காண்டி யதின்புடை நிறைத ருக்க
ணன்குறு கற்ப கங்கா ணெனவிறை நகைத்துச் சொல்வான். 2

### இறைவன் அக்காட்சியைக்கண்டு கூறுதல்

அவ்வுழி நுனித்துக் கண்டே னதுநம தினிய வெற்பின்
செவ்விதி னிலங்கு நீல சிகரிகா ணத்த ருக்கள்
எவ்வமில் கற்ப கங்க ளென்றுகூ றினைபொய் யென்று
வவ்வரைத் தருவா ன்குரு வென்றிட லுண்மை யன்றே 3

நம்மலை யிடத்தி னேங்கு நலனுடைச் சிகர மெல்லாம்
அம்மணி மயமென் றோத லதிசய மன்று சோதி
விம்முறு மவற்றின் பாலே விளங்கிய கிளைகளெல்லாந்
தம்மிலே மணிக ளீன்று தணப்பற நிற்ற லானே. 4

கொடிகள் சஞ்சீவி யென்று கூறன்மெய் யேய வற்றி
னடிநறை யனங்கர்க் கோர்சஞ் சீவியா யமைத லானே
நெடியவிவ் வசல ரூப மமுதமே நிகழி தன்பால்
வடிதலில் சுனைகள் யாவு மமுதமாய் மலித லானே. 5

இந்நகப் புடையி னெங்கு மியற்சுர நாக தாரு
மன்னியே நிற்றல் காண்டி மணிக்கதி ரிருளை நீக்கு
முன்னரு மதில்வ ளம்போ லுயர்கிரி குமரி பாகன்
றன்னிகர் வில்லி வில்லி லுண்டுகொல் சாற்றுங் காலே. 6

நம்முடைக் கிரிய தன்றோ நாடுதுந் தூர மன்று
வம்மெனச் செலுங்கான் மிக்க மலர்மது நிகர்சூர் மாதர்
தம்மியற் கீத வோசை கேட்டுளந் தளிர்த்து நண்பன்
செம்மலுக் களவ ளாய மலைவளஞ் செப்ப லுற்றான். 7

வேறு

**கோலாகல மலைவளத்தை**
**வசுவுக்குப் பாங்கன் கூறுதல்**

குயிலொலி யொருபா லளியொலி யொருபாற்
கொடுமதன் பரியொலி யொருபான்
மயிலொலி யொருபாற் கருடகந் திருவர்
மதுரநல் யாழொலி யொருபால்
பயிலர மகளிர் பாட்டொலி யொருபாற்
பலபட முழங்கு செயற்கோ
வியலுடைக் **கோலா கல**மெனும் பெரும்பே
ரிசைத்தன ரிவ்வரை தனக்கே. 8

முன்னருந் தரளங் கொழித்திழி யருவி
முழங்குறு மிந்நகப் புடையே
பன்னிற முளவா மணிப்பெருஞ் சிலைகள்
பற்பல வெழில்பெறக் கிடத்தல்
உன்னுடை யடியா லெறிதலி லடிபட்
டுங்ஙனம் வீழ்ந்தவோ யறிவான்
மன்னிய மேரு மந்தர மெழுவாய்
வரைகள்வந் துறைகுதன் மானும். 9

புறவொலி குழுறத் தாதுமேற் சிதறப்
புறப்படு பெருங்குகை யிடைச்செந்
நிறமுடை யருவி யொழுகுறப் பரந்து
நெடுவரை கிடத்தலுன் னடியால்
எறிபடு வருத்த முள்ளுறப் பொருமி
யிடம்பட வகன்றவா யதனாற்
கறையற வுமிழ்ந்து கிடந்திடல் பொருவுங்
**காசினி பரித்தபொற் புயத்தோய்.** 10

எனையொரு பரல்போ லொருபத நகத்தா
லெளிதெடுத் தெறிந்தனை யிதனால்
வனவளந் தருமென் றந்தையைத் துளங்கா
வலிகொடு வென்றனை யிறைவ
வினியெனை யருளாற் புரந்தரு ளெனநின்
றிரங்கல்கண் டலைகொலோ நெடிதிப்
பனிவரை துரும்பு நீலவாய்க் குகையிற்
படுமொலி வார்த்தைகொண் டிரந்தே. 11

அரியிசை சுருதி யாகவிண் மகளி
ரமுதெனப் பாடும்யா ழிசையால்
உருகிய சிலையி னெழுகுநீ ரருவி
யுலப்பறு தாதொடு கலந்து
பெருகலு மதிற்செவ் வொளிர்பரந் தெறிக்கப்
பிறழ்தரு பூங்கொடிச் செறிவாம்
பொருவரு பவள பந்தரி லமுதுண்
பூவைய ரூசலா டுவரால். 12

ஊசலா டமர மாதர்தாட் கடகத்
தொளிர்மர கதக்கதி ரறுகென்
றூசையான் மதிமா னருவிட மதியி
னமுதுகிந் திடுதலு முனது
தேசுறு பதத்தா லெறிதலி னுதிர்ந்த
சிறகர்பின் வளர்ந்தன பொருவ
வாசமார் நெடிய பொருப்பிரு புடையு
மணிமுகில் பரந்தல்கா னுதியால். 13

எழிலிவெவ் வழுவை யெனவுமாங் குறுமின்
னெழுதிய சிந்துர மெனவுங்
கெழுமிடி பிளிற லெனவுமுட் கருதி
கிளர்சிலைப் பகழியோச் சுதலும்
பொழிகனே பலத்தார் முத்தென வெடுத்துப்
புரிவுறும் படிகமுங் காடி
விழைகுற மகளிர் சந்தன நிழற்பால்
விரைவொடும் புகுந்தயா வுயிர்ப்பார். 14

சந்தனப் பணைக ளொன்றொடொன் றுறிஞ்சத்
தகவொடு சிந்திய பொடியின்
மூந்துசண் பகப்பூம் பொடியினைக் கலந்து
மொழிக்கருங் குங்கும மலரின்
நந்துறு விரையுங் கூட்டியவ் வசந்த
னனவொடு முறையினுங் கிருத்து
கந்தமென் பொடியைக் கின்னர மகளிர்
களிப்பொடு பூசுவர் தனத்தில். 15

நறுமலர்ப் புதலிற் பொழிபனி யருவி
நடந்துமான் மதங்களிற் கலந்து
நிறைதரு மலர்த்தூட் குவையினிற் புகுந்து
நிலையுறப் பதம்படு கதம்ப
முறவணிந் தியக்க வனிதையர் நடிக்க
வுளமகிழ்ந் துரகமா மணியால்
மறுவி லாலத்தி யெடுப்பர்கண் டிருந்த
வரையற மங்கையர் செறிந்து. 16

வெயில்பட வெதும்பு தினகர சிலைமேல்
விழுமிய கவரிமான் பொழிந்த
பயனுறு மமுதங் கொதித்தெழுந் திடலும்
பரிவொடு நிறைந்தவா குதியென்
றியல்புற வருபண் ணவர்விழி குளிர
வெயின்குல மகளிரை நோக்கி
மயல்கொடு புனத்தி லுழலுவ ருளத்தை
மாரவேள் கொடுங்கணை வருத்த. 17

வேறு

சுரநாக மட்டு மேவிச் சுரநாக மட்டு மோங்கி
யரியாரங் கான முற்று மரியாரங் கான முற்றுப்
புரியேம மருவி வேடர் புரியேம மருவி நீடி
யொருவாதி விண்டு பொன்மை யொருவாதி விண்டு நிற்கும். 18

வேறு

மலர்மிசை பொழிபனி மழைநி கர்கர
சிலையறை களில்விழ வெழுந்த சீகர
மிலகுமிக் குலவரை யெங்கும் போர்த்தலாற்
றலமகி ழிமகிரி தன்னை யொத்ததே. 19

வசு மலையின்மீதேறிக் கொடிகள் நிறைந்த
மண்டபத்தில் உள்ள ஒரு மேடைமீது அமர்தல்

என்றுள மகிழ்தர விசைத்த நண்பனோ
டன்றுயர் வரையிடை யரச னேறிநீ
ரொன்றிய வருவியங் கரையி னோர்புடைத்
துன்றிய நறுங்கொடிச் சூழல் கண்டனன். 20

அதனிடை வயங்கிய வளவி லாவொளி
மதிமணி வேதிகை மீது மண்டல
பதியினி திருந்தனன் பழுத்து நீங்கலா
முதிர்தரு மன்பினேன் முன்னர் நிற்கவே. 21

### அப்பொழுது இனிய நாதமொன்று அரசன் செவிப்படல்

அவ்வுழி வந்ததா லரசன் றன்செவிக்
கெவ்வமி லினியவா னந்த மீவதாய்
வெவ்விய சிலைகளு மிகக்கு ழைந்திடு
திவ்விய வமுதமாய்த் திகழொ ரோசையே. 22

### அரசன் அந்நாதத்தைப் பலவாறு புகழ்ந்து நண்பனிடம் கூறுதல்

புளகமுற் றிடவரு புனித நாதமென்
கிளர்தரு மன்பநீ கேட்டி லாய்கொலோ
வளவிய வமுதமா துரிய வைப்பதா
யுளமது மனக்களி யுதவு கின்றதே. 23

குயிலினன் னாதமோ கோதின் மங்கைய
ரியன்மணி வீணையி னெழுந்த நாதமோ
நயனுறு சிறையளி நாத மோவதென்
னுயிர்புரை யன்பயா னுணர்கி லேனரோ. 24

உடல்விழி யின்னவை யுற்ற மாதரார்
கெடவரு மிசையினைக் கேட்டி லேன்கொலோ
படிவனி தையர்பலர் பாடக் கேட்டன
னிடரிலி வோசைபோ லிருந்த தில்லையால். 25

அவ்வுல கத்தினு மறிந்த தில்லெனில்
இவ்வுல கத்திடை யில்லை யில்லையே
தெவ்வரு மன்பநீ சிந்தை கோடிமற்
றெவ்வம கற்றிய விந்த நாதமே. 26

இன்னிசை யிதுவென வெங்க ருத்தினுக்
குன்னரு மகிழ்ச்சியை யுதவத் தக்கது
பின்னையொன் றுளதுகொல் பேசி லென்றனன்
வெந்நனி யாவிறல் வேந்தர் வேந்தனே. 27

### அவ்விசையொலியைக் கேட்டு இன்புற்றுப் பாங்கன் கூறுதல்

அவனிவை புகறலு மன்ப னென்பவ
னுவலரு மிசையினை நுனித்துக் கேட்டபின்
உவமையி லின்பமா முத்தி மூழ்கியே
நவையறு மொருமொழி நவில்கின் றனனரோ. 28

குளிர்மதி காந்தமென் குகையி னூடுருக்
கிளர்தரு மெதிரொலி கேட்க வந்தது
களிமயில் குயிலொலி கலந்தொன் றாகவோ
பளிதமென் முலையினள் பாடு கின்றனள். 29

பாடுகின்ற பெண் யாரென அறிந்துவரப்

செங்கையில் யாழொடு திருந்தப் பாடுமோர்
பைங்கொடி யன்னவப் பாவை யாரென
வங்கொரு கணத்தினுற் றறிந்து மீள்கென
விங்கிறை வைகுதி யென்று போயினன். 30

பலவிடங்களிலும் பாங்கன் தேடுதல்

பூங்கொடி துன்றிய புனிதச் சூழ்வினு
மாங்கொலி யொடுவிழு மருவிச் சார்வினுந்
தேங்கிய சுனையினுந் தெய்வக் காவினு
நீங்கருங் குகையினு நேடி னனரோ. 31

பாங்கன் கண்ட காட்சிகள்

வளநெடு படர்தரு வட்டக் குன்றுகு
ழிளவழை யெனுமணி யிரதம் பா[ர்]த்தனன்
றெளிபுன லருவிபாய்ந் தரியச் சேர்ந்திடு
குளிர்மதி யுபலமாங் கோடு நோக்கினன். 32

பளிக்கறை யுறுசுனை யருகிற் பாயொளி
விளைத்துறு நுண்மணல் விரவக் கண்டனன்
தளிர்த்தபூங் கொடிபடர் பந்தர் தன்னில்வீழ்ந்
ககணங மாடக் கண்டனன். 33

ஏலமென் கொடிபட ரிளமென் காவினுட்
கோலநன் னிழல்வழிக் கூடிச் சேறனு
மாலுறு குங்கும மலர்நி ரம்பிய
தூலவண் குவையின்மேற் றூய னேறினன். 34

போதரு மிவன்றனைக் கண்ட பூவையுந்
தீதறு கிள்ளையுஞ் செறிந்து கூப்பிடச்
சோதிகொ ளறைப்பெருஞ் சுனையி
மேதகு பலவொளி விளங்கக் கண்டனன். 35

வேறு

இரத்தினக் கற்களால் அமைக்கப்பட்ட
ஒரு மாளிகையைப் பாங்கன் காணுதல்

வாய்த்த பவளக் கொடுங்கைநிழல்
வயிரப் பருவேதி கையினுறச்
சேர்த்த தரளப் பந்தர்நிழல்
செறித்த பளிக்கு முன்றிலிடை

யேத்து மரங்கக் கொடிநிகர்ப்ப
விலங்கு பசுந்தண் மணிவாயில்
ஆர்த்த பசிய தோரணம்போ
லமைய வாயி லிருபுறத்தும். 36

பதும ராக மணியிழைத்துப்
பாணிக் கனக பாவைபல
கதிர்கொ டேப மெடுக்குமெழிற்
காவி விழியார் போல்வயங்கப்
புதிய மணிச்சா ளரத்தினகிற்
புகைமீக் கமழ்ந்து புறப்படவோர்
மதியந் தவழ வளர்ந்தவொரு
மணிமந் திரத்தை யெதிர்கண்டான். 37

ஒரு மரத்தின் மறைவில் பரங்கன் நிற்றல்

அந்த மணிமந் திரந்தனக்கே
யமைத்த பளிக்குச் சுவரகத்துள்
வந்து சரிக்கு மயிலனையார்
புறத்துந் தோன்று வளம்நோக்கி
யிந்து நுதற்கோ தையர்பயிலு
மினிய தலமீ தென்றறிந்து
சந்து நறும்பூப் பொதுளுமொரு
தாரு மறைவி னின்றனனால். 38

நீலமணி மேடைக்கண் கிரிகை வீற்றிருந்து யாழ்வாசித்தலைப்
பரங்கன் கண்டு வியத்தல்

இருளார் குழலு மறைப்பொருடொத்
திலங்கு நிறமும் பிறழ்விழியும்
பொருவா தகன்ற நிதம்பமும்பொன்
போன்ற வழகும் பிறைநுதலுந்
திருவாண் முகமு முளவொருமின்
றிகழ்நன் னீல வேதிகைக்கட்
கருமா முகிலின் மிசையுறுமோர்
மின்போ லிருத்தல் கண்ணுற்றான். 39

இருந்த நறுமென் கருங்கூந்த
லிந்து வதன விளங்கொடியோர்
திருந்து மணிநல் யாழெடுத்து
சிறந்த வுயிர்ப்பாங் கியர்மகிழ்வு

பொருந்தி யுடலம் புளகித்துப்
புகழப் பாடு மமையத்தில்
விருந்து செவிக்கிட் டிறைக்குரியான்
வியந்து வியந்து நினைக்கின்றான். 40

வேறு

தன்னுருக் கருமை குழல்வயி னிருத்தித்
தரணியி னடைந்தபே ருமையோ
தன்னுடைச் சலனந் தனைவிழிக் கமைத்தே
தாத்திரு வந்தபூந் திருவோ
தன்னுருத் தவள நகையில்வைத் திசைநூல்
சாற்றிட வந்தபா ரதியோ
தன்னிய லருவ மிடைக்களித் துருவா
மிரதியோ சாருமிவ் வனிதை. 41

**வசுவினை அழைத்துவரப் பாங்கன் செல்லல்**

இவணிறங் குணமொண் கலையழ கெனக்கூ
றிவற்றினை யறியுமா றுரைத்துத்
தவலரு மினிய தலைமதி யினனைத்
தாரணிக் குரியநா யகனைக்
கவலையில் புவன மளிப்பவன் றனைமோ
கனனையீண் டுய்ப்பனென் றெண்ணி
யவனுளந் தளிர்ப்ப மீண்டுவந் தவனி
யரசனைத் தொழுதுநின் றுரைப்பான். 42

வரைக்கேகு படலம் முற்றும்.

ஆகத் திருவிருத்தம் 188.

## 7. கிரிகை யுறுப்பியல் படலம்

**கிரிகையைத் தான் கண்டதாகப்
பாங்கன் வசுவிடம் கூறல்**

இலகுறு மமர வல்லிகண் ணடிக்கு
மிடத்தினுங் கரியதும் பிகளின்
குலமுளங் களித்து முழங்குறு மிடத்துங்
கொடியவாங் கானக வேங்கைப்
பலகுழு நெருங்கு மிடத்தினு நெடுமை
பயில்வன மாக்கள்சே ரிடத்து
முலவிகே டினன்யா னடையலர் கறைநீ
ருண்டுகொப் பளித்தடு படையோய். 1

மன்னகே ளகன்ற வொருசுனைக் கரையில்
வகுளசண் பகமுதற் றருக்கள்
துன்னிமற் றவற்றே லக்கொடி நிரம்பிச்
சூழ்ந்திடு நறும்பொழி லிடையே
பொன்னிழன் மணியாற் குயிற்றிய நிகரில்
பொலிவுடைச் சிளகரந் தனிலோர்
கன்னிகை யிருந்து பாடுதல் கண்டேன்
கண்களு முள்ளமுங் களிப்ப. ௨

எடுத்தயாழ்க் குடுகிற் கொளியினைத் தனங்க
ளீந்திடப் பதவிக்க டமக்குத்
தடுப்பரு மிராக மங்குலி யுதவத்
தாளமாய்க் கரவளை யொலிப்ப
வடுத்தசே தனமு மசேதன மாக
வசேதனஞ் சேதன மாகக்
கொடுத்திடு மொருபண் ணிசைத்தனள் புடைசூழ்
கோதையர் பூவையென் றுரைப்ப. ௩

வசுவேந்தனிடம் பாங்கன் கிரிகையின் உடலழகைப் பலபடி
புகழ்ந்து கூறல்

புரைதவிர் சாம்பூ நதமணை லெடுத்துப்
பொருமத னருந்திற லெனுமோர்
எரியிடை யுருக்கித் தனமலர்ப் பொகுட்டா
மடைகலிற் றகடுசெய் ததனாற்
கரையிலா திருந்த கலைவல பிரம
கம்மிய னமைத்தவோ வியமோ
பரவர மகளிர் தெய்வமோ வெனவப்
பணிமொழி யிருந்தனள் மகிழ்வால். 4

முலையிதழ் வெறிசே ரம்பலொத் தனதோண்
மொழிகழை யொத்தன நிதம்பங்
கொலைவிழி யரியொத் தனபுற வடியுங்
கோதையு மாமையொத் தனவால்
இலகுவா ரணமொத் தனநடை மிடறவ்
வேந்திழை யானன முழந்தாள்
அலவனொத் தனநுண் ணிடையுநன் னுதலு
மடுமதன் றனுவையொத் தனவே. 5

வேறு

விளக்குமுன் முகத்தா னீங்கு மெய்யொளி யுடைய ளாகி
யிளைத்தசந் திரனைக் காவா யிளநகை யளித்தென் றன்னோ
னுளக்கிதந் தருமின் னார்வந் தொளிர்பதத் துணையில் வீழ்ந்து
வளப்பட விருத்தல் போலு மாணினி பதந கங்கள். 6

பிறிவறு பதும ரேகை பெற்றமின் றனது பாத
முறுமது வளமங் கொல்கா துற்றபல் லவநன் னீரைக்
கறைதவி ரொளியி னோடு கவர்ந்துகொள் வதனா லன்றோ
திறைதரு மிளமைத் தன்மை நித்தமு மகல்வ தம்மா.

சூலுறு சாலி தன்னைச் சொல்லருஞ் சினைவ ராலைச்
சாலவெம் போர்செய் வென்றித் தனுமத னாவந் தன்னை
மேலிடு மம்பிற் சேர்த்தி விளங்கிய தம்ம தார்கு
ழேலமென் குழல்க ணைக்கா லிணைதரு மழகு வெள்ளம். 8

கரியவெங் கரியின் கையுங் கதலியும் புனலே மாந்தி
யரிவைதன் குறங்கை மான வருந்தவஞ் செயலும் வாழை
யுரியகன் றிதமாய் நின்று நிகர்த்ததென் றுயிர்த்துப் பூட்கை
தெரியுமு னதனை யோடிச் சிதைத்திட லழுக்கா றன்றோ. 9

சீருடை நிதம்ப மென்னுந் திகழ்நில வரசு மிக்க
பாரின தகல மெல்லாம் பரிவொடு வென்று காஞ்சிக்
கூரெழிற் பட்டங் கட்டிக் கொடுமிகு மதனு டைத்தாந்
தேரின்மே லாய தம்ம சிறப்புடன் யாரும் போற்ற. 10

வேறு

முகமதி விளங்க மங்கையென் றினிது
மொழிசரற் காலமெய் திடவே
தொகுமிளம் பருவ மெனுநதி நீத்தஞ்
சுவறிடு தலுநடு வெளியாய்த்
திகழ்முலைப் பெருங்கல் வயிற்றினுண் மடிப்பாஞ்
சிற்றலை யுந்திநன் மடுவோ
டகமகிழ் நிதம்பப் புளினவெற் பெழில்கொண்
டமைந்தன விளங்கிழை யிடத்தே. 11

வேறு

ஏந்திழை யுரோம ரேகை யெழிலெனு மதனா ராமத்
தார்ந்தநன் னிதம்ப வேதி யருகுறு முந்திக் கூவல்
சார்ந்திட வமைத்த நீலத் தனிச்சல சூத்தி ரங்கா
லலதி ருந்தா லுயர்முலை முகையுண் டாமோ. 12

உந்தியங் குகைமீ ரோமப் புகையெழத் தவமு னாற்றி
நந்திடை யனங்க னாக நகின்முடி மதனே யாக
முந்துறு மதுபொ றாது மொழிகடேன் குணம தாக
நிந்தையில் விழிபூ வாளி யாகியே நிகழ்ந்த தம்மா. 13

விளங்கனி துருக்கத் துற்றும் வீணைக்காய் மேருச் சேர்ந்துங்
கொளுங்கதிர் குடம்பூ மின்பாற் கூடிபத் தலைமே லேய்ந்துங்
தளந்திகழ் மரைய ரும்பு சக்கரக் குருகோ டார்ந்து
மிளங்கொடி முலைக்கொப் பாக விலையெனி லிணைவே றுண்டோ.

மிகவுநல் விரைக லந்து மென்மைபெற் றறநெ ருங்கி
யகமகிழ் வாக மாறா வமுதமுட் கொண்டு மன்னிப்
புகரினாற் கிடமே யின்றிப் பொலிந்தென்று மிணைபொ ருந்தித்
திகழ்வொடு மங்கை கொங்கை சிறந்தன யாரும் போற்ற. 15

வெம்புக ரயிலை வென்ற விறல்விழிக் கிரிகை மாதி
னம்பொன்மா முலையின் மீச்சென் றசைந்ததா னுத்த ரீக
மெம்பெறு வறுமை தீர்த்த திம்மைய னினிய கீர்த்தி
செம்பொன்மால் வரையை மூயப் புறத்தினுந் திகழ்தல் போல. 16

வரத்திரு மார்பின் மங்கைப் பருவத்தீ வளர்த்துக் கொங்கை
யரிக்குடஞ் செய்து மார னராவிய பொடியு திர்ந்து
தரித்ததொண் மூலங் காந்தி சார்ந்தன வலாதி ருந்தாற்
பொருத்தணி யிலகு தோளாம் பொற்றொடை மிகவுண் டாமோ.

திருவடி தனக்குத் தோற்ற சேயிதழ்க் கமலப் போதை
யிருகர மலர்க்கொப் பாக வியம்புத லறிவோ வென்று
மருமிகு செய்ய காந்தண் மலரெனிற் சிறிதொப் பாகுந்
தரையிடை யுவமை தேடிச் சாற்றுதற் கில்லை வேறு. 18

இலகுமுத் துடனி ரேகை யிருத்தலா ணிகர்வே னென்று
குலவளை யார்த்துப் பின்னக் குறைதவி ரெழுபண் டன்பால்
இலையென முகஞ்சு ருங்கிப் பயமடைந் திசைக்க ளத்தை
வலமது புரிந்தோ நல்ல வலம்புரி யாயிற் றன்றே. 19

வன்றுகிர் கரத்தே கட்டுப் பட்டது வயங்கு சோதி
நின்றமா மணியி ழைக்கப் பட்டது நிரத மாகித்
துன்றொளிக் கோவை விள்ளப் பட்டது சுவையொன் றின்றி
மன்றலங் குழலி செய்ய வாய்க்கிணை யாது மென்று. 20

பரவையி னுதித்தி லங்கும் பவளம்தோற் பவளம் பெற்ற
தரியமா மணியி ராக மாகவே யழகு பெற்ற
துரைசெயில் விம்ப மேதன் விம்பமா யொளிரப் பெற்ற
திருள்புரை குழலி செவ்வா யெனிலதற் குவமை யேதாம். 21

கரும்புதன் ஞதி யந்தங் கழிந்துதோற் றிடையாந் தன்மை
பொருந்தலா லனேக சென்ம மழலிடைப் புகுந்தெ டுத்து
வருந்தியுங் கண்ட மாகி மாத்துக ளான தன்றித்
திருந்திழை மொழிக்கொப் பாகுந் திறனிலை யான தன்றே. 22

அரிதனை நீத்த துன்னி யருந்தவஞ் செண்ப கப்பூப்
புரிதக வதனு லின்சொற் பூங்கொடி துண்ட மாகித்
தெரிமலர்க் கண்டி ணங்க டிறையளித் திடவுங் கண்ணென்
றிருசுரும் பிருபு றத்தி லிருக்கவும் பெற்ற தன்றே. 23

இரவினிற் கமல நீலம் பகற்பொழு தியல்பு கொண்டு
விரைதர லில்லை யென்று விடுத்துவெள் கமல நீல
சரவிற றருமெ ஞத்தன் றனுவிடை வைத்த தென்ன
வரைபுரை கொங்கை மங்கை வரிவிழி திகழ்ந்த தன்றே. 24

கருவிள முழைசு ரும்பு கமலமுற் பலமே செஞ்சேன்
மருவுத லரிதாய் நின்ற வனத்தினுற் றனவம் போடிப்
பொருபொழு துண்ணு ழைந்து போயின யமன் மறைந்தான்
விரைகமழ் கூந்த லாடன் விழிக்குமற் றஞ்சி யன்றே. 25

நயனவெங் கூற்று வாளா நாடரு முயிரை யுண்டு
வயமொடு மீளு கின்ற வாயிலொத் தொளிர்பொற் காதிற்
பயிறரு தரளத் தோடும் வதனமும் பார்க்கின் மாதோ
வுயர்மதி யிருபு றத்தீ ருடுவுற விருத்தல் போலும். 26

மையள வற்ற நீடு சலத்தொடு மருவி யுற்றுந்
தையல்தன் குழற்கொவ் வாது தன்னிறம் பன்மை யாகி
வெய்யவெற் படைந்தன் றேடி வீண்படு மார வாரஞ்
செய்யுமா சஞ்ச லத்தோர்க் கொருநிலை செப்பில் யாதே. 27

வேறு

பதமயனை யருள்பொருட்கு மிலகுதொடை
யரம்பைக்கும் பரும வல்கு
றுதியுறுவை யந்தனக்குஞ் சிறியவிடைப்
புந்திக்குந் தோகை கொங்கை
யதிகவுமை தந்தைக்கும் வதனமுயர்
குபேரற்கு மார்வில் வாசம்
பொதிகுழலவ் வானுக்கும் புகழுவொணு
தென்போல்வார் புகழ லாமே. 28

விலையிலா மணியரிய பூம்பந்து
கிளிமதன வேத சார
மூலகுபுகழ் பசுந்தோகை பெண்ணரசு
சவுந்தரிய வுததி யான்ற
புலன்முழுது மனுபவிக்கு மமுதமய
மன்னநடைப் பூவை யன்று
ளிலகுமுனக் கேற்றவள்கா ணெவ்வுலகும்
புரந்தருளு மிலைகொள் வேலோய். 29

**கிரிகைக்கு ஏவல் செய்யும் மகளிர் சிறப்பு**

அளவுபடாத் திருமருவு மவ்வணிதைக்
கேவல்செ(ய்)யு மன்ன மன்று
ரிளமுலைகண் முதலுறுப்பி னெழுகழகை
யிவ்வளவென் றிசைக்க லாமோ
தளர்வகன்ற நன்னடையு மிவைவளங்கொள்
பார்வைகளுந் தமக்குண் டாகி
வளனிலகு நாகமட மகளிரெனச்
சரிக்கின்றார் மான வேலோய். 30

**கிரிகையைக்காண, முன்பு நல்வினை செய்துளேன்**
**எனப் பாங்கன் கூறுதல்**

பெண்ணரசு நிகரிலொரு வீணையெடுத்
தருகுறையும் பெண்கள் கேட்பப்
பண்ணருநா னெறித்தான வரிசைவழா
தவணிருந்து பாடும் பாட்டு
வண்ணவொளி மதிக்காந்தக் குகையினெதி
ரொலியதனுன் மகிழ்ந்து கேட்டுப்
புண்ணியமுன் செய்தனன்கொ லாங்கவளைக்
காண்பதற்குப் போயி னேனல். 31

**கிரிகையின் அருகிற் செல்லாமைக்குப்**
**பாங்கன் கூறும் காரணம்**

அன்னமட மயிலருகு விரைவினடந்
திடிவிசைக்கோ ரவதி யாமென்
றுன்னிமலர்க் கொடிச்சூழ விடைநின்றுங்
கெழுதரிய வுருவ மெல்லா
மென்னிருகண் களுமுளமு மானந்தந்
தனின்மூழ்க வினிது நோக்கி
மன்னவுனக் குரைத்திடவந் தேனென்று
னுயிரினுஞ்சீர் வாய்த்த நண்பன். 32

கிரிகையுறுப்பியற் படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 220.

## 8. கிரிகையைக் கண்ணுற்ற படலம்

**கிரிகையிருப்பிடஞ் செல்ல வழி காட்டுமாறு**
**பாங்கனிடம் வசு கூ.**

மனக்கினிய தனிநண்ப னெதிர்நின்று
புகன்றருளு மதுர வார்த்தை
யுனற்கருமம் மயிலிசைத்த சங்கீதந்
தனினுமகிழ் வுதவ வேந்தன்
வனத்துறுகின் னரமிதுன முரைத்தபடி
சுபமினிது வாய்த்த லாலிங்
கெனக்குமதி யுடையோய்நன் னெறிவிரைவிற்
காட்டுகவென் றெழுந்தான் மன்னே. 1

**இவ்விவ் வழியாகச் செல்லவேண்டுமெனக் கூறிப்**
**பாங்கன் வசுவேந்தனை அழைத்துச் செல்லல்**

இவ்வுழிநன் ஞவிமத வளறுடைத்
திறக்கற்களிடை யேகல் வேண்டு
மிவ்வுழிபூ மதுப்பொழியுந் தலைமீது
தழைத்துணர்கொ டேகல் வேண்டு
மிவ்வுழிதே னொழுகருவி யாழ்ந்துளது
பூம்புணைகொண் டேறல் வேண்டு
மிவ்வுழிபே ரறைவழுக்கும் பாங்கருறு
கொடிகள்பிடித் தேறல் வேண்டும். 2

**பாங்கன், செல்லும் வழியில் காணப்பட்ட பல காட்சிகளை**
**இவை இன்னவை என்று வசுவுக்குக் கூறிச் செல்லுதல்**

இதுசோம சிலையறையிற் சுனைகாண்டி
யிதுமலர்ப்பூம் பராக மேடா
மிதுவானந் தொடுமினிய சந்தனக்கா
ணிதுப்ரிதிச் சிலையம் பாறை
யிதுமேகந் துயில்கூருங் கணியடவி
குங்குமக்கா டிதுவேல் வேந்த
விதுமாதின் மந்திரம்பா ரெனப்பாங்க
னுரைத்தேகு மேல்வை தன்னில். 3

**னைக்கரையில் பல மகளிரை வசுவேந்தன் கண்ணுறுதல்**

மலைமகளை நனிகாணு மிச்சைபிடித்
திழுக்கநறு வழிக்க ணேகுந்
தலைமதிய னுமிறைவன் விழிகுளிர
வவ்வரையின் றலைக்க ணேயோ

ரலேகடலி னகன்றுபல மலர்பொதுளுஞ்
சுனேக்கரையி னலர்வ னப்பால்
இலகுமல ரெடுத்துலவுங் கலவமயி
லனேயாரை யினிது கண்டான்.

### மகளிர் பலவாறு உரையாடுதலைப் பாங்கன் வசுவுக்குக் கூறுதல்

இந்தவிளங் கொடிக்கினிய ராசதில
கத்தினுற வினிதுண் டாகு
மிந்தமலர்க் கொம்பினுறு மளியரசு
பெருஞ்சுனேப்பா லினிது மேவு
மந்தநறுங் குவளேக்கண் மருவநில
விறைவருமென் றமுதன் ஞர்கூ
றந்தவுரை கேட்டனேகொ லெனநண்பன்
சொலமகிழ்ந்தா னரச ரேறு.

வேறு

### கிரிகையின் மாளிகைச் சிறப்பு

கனக பூரண கலசங்கண் முன்னுறக் கதிர்கொ
ளினிய சாமள மணிகளா லிழைத்திடு வாயில்
வனேயு மோர்பசுந் தோரண மாயெதிர் வயங்கப்
புனேயு மங்கலங் காட்டிய தரிவைபொற் கோயில்.

### வசுவேந்தன் அம்மாளிகையினுள் கிரிகையைக் காண்டல்

அந்த மாமணிக் கோயிலி னடுவுறு மணங்கைப்
புந்தி தான்மகிழ் பூங்கொடிச் சூழலிற் புகுந்து
கந்த மாரளி மென்சிறைக் காற்றிஞ லேலயும்
பைந்த ளிர்த்துணர் விழியிஞ லிறையவன் பார்த்தான்.

### வேந்தன் அடைந்த பேரானந்தம்

கண்ட கண்ணிணே களித்தன கண்ணினுங் களிப்புக்
கொண்ட துள்ளமுள் ளத்தினுங் குளிர்தரு பூரிப்
புண்ட தாகமா கத்தினு முயர்ந்தெழிற் கடலிற்
றண்ட லின்றிமூழ் கியதுவேற் றலேவன தறிவு.

விழி யிமைத்திடா திருக்கவு மானன விதுவி
னழிவி லாரமு தருந்தவு நோக்குதற் காகத்
துழியெ லாம்விழி யாகவு முளத்திடை மதிக்கு
மெழின்ம னர்க்குமேன் மேனுற நினேப்பதே யியற்கை.

### கிரிகையின் உருவச் சிறப்பு

அடித்த லத்திடை நின்றுபின் னூறுவந் தடைந்து
வடித்த காஞ்சியந் தேசமுட் கொண்டுபோய் மனன்க
ணடற்ப யோதரத் துருக்கமுங் கொளவுனு மதன்றே
விடுக்க ணின்றியே நேமிமேல் விளங்குசீ ரேய்தல். 10

உந்தி யாநில வரைப்புகுந் துதரமென் மடிப்பாஞ்
சந்த வேணிமேற் றவிரோ மாவலித் தனிநாண்
பந்த மாமுலைத் துருக்கமீ துற்றன பதிகண்
வந்து மேவமா முயற்சியுள் ளவர்க்கெது வலிதே. 11

நதிபெ றுங்கொடி முகமதி யடைந்துநன் னகையங்
கதிரி னாலொளிர் கபோலமா மதிக்கவி னழுக்கி
யதிக வாசமே பொருந்திய வளகமென் கொடியை
நிதிகொண் மன்னவன் பார்வைகள் பிடித்துநின் றனவே. 12

பாத மொண்டளிர் தனைத்தொடை யரம்பையைப் படியின்
மாது நுண்ணிடை விசும்பினை முலைகள்பொன் மலையை
யேதில் கண்டமோர் நிதிதனை யிகழ்ந்திடப் புரியுங்
காத லோடுகண் டருளிறை யிணையில்கண் களுக்கே. 13

அதர மிட்டமாம் பலத்தினை யடைந்திட வுளுற்றும்
வதன முற்றிடப் பண்ணுமக் குபேரமண் டலத்தைப்
புதுமை யார்கன வழகுபெற் றருந்திடப் புரியுந்
ததைம லர்க்குழ லிறையவன் பார்வைக டமக்கு. 14

மொழிக்கு நெஞ்சினுக் கணுகொணா முடிவிலத் துவிதமாப்
பழிக்கனு ராக வாரிதி யிடைப்ப டிந்து
விழிக்கு நல்விருந் திட்டவன் மிகவதி சயித்தே
யெழிற்கு நேரிலா மடமயி லினைத்துதிக் கின்றான். 15

### கிரிகையின் வடிவழகினைக்கண்டு அதிசயித்த வசுவேந்தன் பலபடியாகப் புகழ்தல்

முளரி மாமலர் தன்னைவென் றமையினான் முகத்தோ
டொளிரு மாமதி நண்புகொண் டதுகொலோ வுறவாய்க்
களிகொ ணேத்திரந் தனக்குமற் றெதிர்க்கருங் கலையோ
வளம டைந்தத னிதழ்க்கிணை விம்பமோ வகுக்கில். 16

நகிலி னுக்குற வானவோ வுயர்குல நகங்க
ணிகரி லாவிரு தோளினுக் கருந்தொடை நிகரோ
மகர கேதனன் செல்வமா மிவள்பத மலர்க்குத்
தகவு பெற்றசெந் தாமரை மலர்சகோ தரமோ. 17

இருபு ரூரவில் விழியெனு மம்புகொண் டெதிர்த்து
வருக லாமதி தனைவென்ற வதனவாண் மதிக்குப்
பெருகு தன்னுருக் குவிந்தறப் பயந்துபின் னடைந்த
கருகு பேரிருட் பிழம்புகொல் காரிகை யளகம். 18

உரந கத்தின்மேற் பொருந்திமின் னணிசிறந் தொளியே
விரவு சங்கையுங் கமுகையுங் கெடுத்துவிண் ணமுதின்
மருவு மோசையான் மூகையாய்க் குயிலுற மயக்கி
யரிவை கந்தரங் கந்தர மொத்ததோ டடைந்து. 19

எழில்கு லாமுலை மலைமிசைத் திமிர்ந்திடு மிளைப்பாங்
கொழிய மன்மத வாரண முந்திமேன் மடுவின்
முழுகு போதெழுந் திரைகொலோ முளரியை முருக்கும்
[illegible]வில் வாண்மதி முகத்தினள் வயிற்றினுண் மடிப்பு. 20

உந்தி யந்தடத் தாடுறு முயர்மத னெனுமோர்
தந்தி யின்கவுண் மதத்தினுக் காகவே சாருங்
கந்த மாரளி யொழுங்கென லாகுமாற் கவினே
நந்து பூங்கொடி யுரோமரே கைக்கொடி நலனே. 21

தனவ ரைப்பிறந் துந்திமேன் மடுவினிற் சார்ந்து
துனைவின் வண்கடி யணைமிசைப் பாய்ந்திரு தொடையென்
றினிமை யால்வரு மெழிலவே ளம்புக வலரேகை
புனையுங் கான்மிசைக் கருக்கொளும் புதுநெலோ கணைக்கால். 22

என்றி ளங்கொடி பேரெழிற் சலதியை யிலங்க
மன்ற வேதுதித் தினியதன் சிரமசை இ மதித்துத்
துன்று பேரழ கிப்படி வகுத்தரு டிய
வென்றி வேதனை வியந்தனன். சயந்திகழ் வேந்தன் 23

ிகையைக் கண்ணுற்ற படலம் முற்றும்.

ஆகத் ருவிருத்தம் 243.

## 9. யோகிசெல் படலம்

**பாங்கன் யோகிவேடந்தரித்துக் கிரிகையிருப்பிடஞ் சென்று,**
**அவள் வரலாற்றை அறிந்து வருவதாகக் கூறல்**

அந்த வேலையி லரசனை யடைந்து பேரன்ப
இந்து வாணுதன் மடந்தையைப் பார்த்தனை யிலங்க
முந்து மென்மொழி மெய்ம்மொழி யானதே முடுகிக்
கந்த டுந்திறற் புகர்முகக் கழைசுளி களிற்றேய்.

இனிம திக்கருந் தவவுரு வடைந்துநா னேகி
வணிதை யுற்பவ முதலிய தேர்ந்திவண் வருவ
னனிவி டுத்தரு ளென்றினி துரைத்தன னயங்கூர்
புனித மாகிய மகிழ்வெனுங் கடலினுட் புகுந்து. ௨

அவ்வாறே சென்று, தன்னை கிரிகை மணப்பதற்கு இணங்கும்படி பேசிவருக எனப் பாங்கனை வசு அனுப்புதல்

பொன்ன ருங்குடத் தேற்றிய விளக்கெனப் புதிய
மின்னை நெஞ்சகத் திருத்தினே னவடனை மிகவும்
பன்னி நின்றிடு பண்பினாற் பகருதற் கரிய
வன்ன நண்பனை பார்த்தன னதிசய முறவே. 3

வேறு

செய்ய யோகியாய் மங்கை
பாற்சென் றுளக்கருத் தோர்ந்து
மய்யு ருதவுன் சாதுரி
யத்தினுன் மனங்குழை தரப்பேசி
அய்ய யெவ்விதத் தாயினு
மிணங்குமா ருக்கிநெஞ் சமும்யானு
முய்யு மாறுமீள் கெனவிடுத்
தருளினன் னுலகுடைத் தனிவேந்தன். 4

பாங்கன் யோகிவேடம் கொள்ளல்

பொன்னி றக்கொடி வார்சடை
மலர்ப்பொடி புனைபொடி தளிர்தூசு
வன்ன வோரகனி கமண்டலத்
தொடுபல வழைமுகை செபமாலை
யுன்ன ருந்தனி வற்கலை
மார்புறும் யோகபட் டமதாகி
மன்ன வங்கையிற் றண்டுகொண்
டாயிடை வனப்புறு மெதியானுன். 5

ஒருவு ருச்செப வடந்திருப்
பங்குலி யொடுதிரு வுறுகோயில்
அருகு சென்றன னவன்றனை
நோக்கிய வன்னமென் னடையார்கள்
முருகு வார்குழ லிசைக்குள
முருகியோர் முனியிவ ணுறுகின்ருன்
றெரிதி ரென்றலு மமயமிங்
கிதுவெனச் சிந்தைசெய் தனனம்மா. 6

### யோகி மகளிர் இருக்குமிடம் அடைதல்

நாரி மாமணி பாடிய
நல்லிசை நயந்தனக் குருகார்யார்
சீரி லங்குசங் கீதவா
ரமுதினைத் தெவிட்டவுண் டவர்வந்திப்
பாரி லன்பொடு வாழ்கென
வாசிகள் பகர்ந்தக லாரோவென்
றேர ணங்கனு ரெழுமுனம்
வந்தன னிலகவஞ் சனையோகி.

### யோகியைக்கண்ட மகளிர் கூற்று

முனிவந் தானென் றெழுந்துமின்
றருளிய மொய்குழற் கதிர்வேற்கண்
வனிதை தன்னிரு குங்குமக்
கொங்கைமா மலைசுமந் தாற்று து
நனியி ளைத்தநுண் ணிடையிடை
யுற்றது நாயக னிருபார்வை
யினிய பார்வையை வறியர்பால்
வைப்பது மேந்தலுக் கியல்பன்றே ! 8

### தன்னைக்கண்டு வணங்கிய கிரிகைக்கு யோகி வாழ்த்துரை கூறிப் பீடத்தில் அமர்தல்

பருத்த கொங்கையின் றடையினு
லெடுத்தொரு பக்கமாய்க் கரங்கூப்பு
மருத்தி மங்கையை மகிழ்ந்துநீ
வசுபதிக் கவனியெங் கணும்போற்றத்
திருந்து மாமணஞ் செயக்கட
வாயெனத் தெளிமுனி மிகவாழ்த்தி
யிருத்து மாதனத் திருந்துமின்
னுரையு மிருமினென் றுரைத்தானல். 9

### மஞ்சுவாணியென்ற மாது யோகியைப் புகழ்ந்து யாரென வினவுதல்

அஞ்ச மஞ்சமென் னடைபயில்
கூர்விழி யணங்கனை யவர்தம்முள்
மஞ்சு வாணியென் பவளெவர்
தம்மினும் வளந்திகழ் மொழிவல்லாள்
கஞ்ச மன்னகை தொழுதுபைந்
தேன்மழை கான்றென நயங்கூர
வஞ்ச நெஞ்சக மாதவ
னுடனொரு மாற்றமங் குரைக்கின்ருள். 10

தெய்வ யோகிநின் பாதவா
　　ணைகைமதித் தெரிசன மதனுனே
யெவ்வி தத்தினு மகன்றிடா
　　வகவிரு ளிரித்தனஞ் சிறிதின்றி
யவ்வி யந்தனை யகற்றுபே
　　ருணர்வொளி யடைந்தனம் புகலயாங்கள்
செவ்வி தாகமுன் செய்தவ
　　மென்கொலோ தேடிநீ வரப்பெற்றேம். 11

வேறு

பெருமநின் புகழை யென்றும் பேசுநா வேநா வாகும்
பொருவிலா வுன்னை யுன்னும் புந்தியே புந்தி யாகுங்
கருவகற் றுனையே காணுங் கண்களே கண்க ளாகுந்
திருவள ருனக்கி றைஞ்சுஞ் சென்னியே சென்னி யாமால். 12

அரிவைதன் வீணை நாத வமுதமுண் டுருகி வந்த
பெருகொளி யுடைய நாதப் பிரியனே பொருவி னீதான்
வருநினை வேத னந்த மணியனுய் மிகநல் வன்ன
மருவுமுன் பெயர்சொ லென்றாள் மகிழ்ந்திரு செவிக ளிக்க. 13

தாம் இன்னரென யோகி கூறுதல்

மங்கைநீ கேண்மோ சோதி மதியொடு பணிமு டித்த
கங்கைவே ணியனை யேத்துங் கவுதம முனிவ னென்போன்
பொங்குகோத் திரத்து தித்தேன் புகழ்கவு தமனென் பேரு
மங்கையி னெல்லி போல வனைத்தையு முணர்வன் யானே. 14

அடுகயன் மிதுனக் கண்ணு யகன்றவோ ராழி வைய
முடையவாள் வேந்தன் சேவை யுற்றுளே னவனன் பாகி
மடமிலா தெனக்க ளித்த மந்திரத் தன்மை தன்னுற்
றடையறு மனுதி யோகி யாயினேன் றரணி போற்ற. 15

அரியவவ் வேந்த னென்பா லடைந்தினி தகில லோக
பெருமைகள் யாவுங் காட்டக் கண்டனன் பிணைமா னன்ன
கரியகட் பெரிய கொங்கைக் காரிகாய் ககன மார்க்கத்
துரிமையி னவன்ற னோடு முற்றுளே னின்னுங் கேட்டி. 16

உயர்ந்தநா கத்தைச் சூழ்ந்து மொளிதரு காள கண்ட
நயந்தரு நிலையம் பார்த்து நல்லரம் பைகளைப் பார்த்தும்
புயம்புள கிக்க நீண்ட புட்கர தடங்கள் பார்த்தும்
வியந்தகின் னரநா தத்தை மேம்படக் கேட்டு நின்றும்; 17

திருச்சயி லத்தை யோங்கித் திகழ்தரு காஞ்சி தன்னைப்
பெருத்தசண் பகவ னத்தைப் பீடுற வதரிக் கானைக்
கருத்துறு சேது தன்னைக் கண்டுமீண் டடைந்தே னென்ற
னருத்திவாள் வேந்த னிந்த வசலமேல் வருத லானே. 18

நவையில்வா ளிறைவ னுக்கோர் காணிக்கை நல்க வேண்டித்
தவலரு மவற்கி தத்த தாமரை வாச மூள்ளீ
ருவமையி னும்பால் வந்தே னுய ரெழிற் கன்னி யைக்கண்
டிவணதி சயித்த துள்ள மியன்மதன் றிருவே யென்று. 19

கிரிகையின் பிறப்பு, குலம் இவற்றை அறிவிக்குமாறு
யோகி மஞ்சுவாணியைக் கேட்டல்

இவள்கிரி தனயைசிந்து நந்தனை யென்றென் னுள்ளங்
குவலய மதிக்க வீண்டு குறித்தது கண்டாய் கோதில்
பவளவாய்த் தவள மூரற் பாவைத னுற்ப வத்தை
நவமுறு குலத்தை மாதே நவிற்றுதி யென்றான் யோகி. 20

யோகிசெல் படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 263.

## 10. வரையெறி படலம்

கிரிகையின் வரலாற்றை மஞ்சுவாணி யோகிக்குக்
கூறத் தொடங்குதல்

எண்டகு மவனு ரைத்த வியல்பினுக் கிறும்பூ துற்றாங்
கொண்டொடி மகளிர் யாரு மொருவருக் கொருவர் நோக்கி
மண்டலத் திவன்போ லில்லை மாதவ ரென்றா ரன்பு
கொண்டுநன் மஞ்சு வாணி முனியொடு கூற லுற்றாள். 1

அளவறு தேசு பெற்ற வனகனை யடைந்து வந்தா
யுளமுற முழுதுங் காண்ப தரிதுகொ லுன்ற னக்குத்
தளரிடைச் சனன மெல்லாந் தாழ்வுற வுணர்ந்துங் கேட்ட
திளகுறு மெம்பால் வைத்த வீறிலாக் கருணை யன்றோ. 2

அன்னமென் னடைப்பூங் கிள்ளை யன்னசொற் கரிய கூந்தற்
பொன்னிக ரெங்கண் மங்கை புகரிலா வுற்ப வத்தை
யுன்னுடைக் கருணை தன்னை லுயர்தவ முடைய வைய
வென்னுடைப் புன்சொல் கொண்டெண் டியம்புவல் சிறிது
கேட்டி. 3

இதுமுதல் 38 பாடல்களில் கிரிகையின் பெற்றோர் வரலாறு கூறப்படுகின்றது

சென்றினி மைநா கத்தைச் சிறையறுத் திடலா மென்று
வென்றிவா னரசன் பேரி முழக்கியே வியக்க நீடு
தன்றிற லங்கி தன்னைற் சாகரஞ் சுவறப் பண்ணுந்
துன்றுசீர் வசுவென் றேதுந் தோன்றறன் மற் றொருவ
னுண்டால். 4

புரந்தரன் றனக்குச் சொர்க்க புரமதிட் டான மாகி
யிருந்தது போல வவ்வேல் வசுவெனு மேந்த லுக்குத்
திருந்ததிட் டான மாகிச் சிறந்தது வனம லர்த்தேன்
பொருந்துற தடநி ரம்பும் புகழதிட் டானப் பேரூர். 5

அப்பதித் திருவுக் கேய்ந்த வவிர்மணி மாலை யாகி
யெப்புவ னத்து ளோரு மியல்பொடும் புகழ்வ தாகித்
துப்புற நினைத்த யாவுந் தோய்ந்தவர்க் கருள்வ தாகி
யிப்புவிக் கமுத மாகி யிலங்குநன் னதியொன் றுண்டால். 6

இருபவக் குலங்க ளுக்கே யீகுவ தமுதந் தன்னை
யுரியதாஞ் செவ்வா யன்னைக் குதவுநன் முப்ப லத்தை
யரியநன் முத்த மீவ தடைந்தவர் தங்கட் கெல்லாந்
தரையிலந் நதிநன் னீரைச் சாற்றலாந் தகைமைத் தன்றால். 7

மென்னறுங் கமல மீது மேவலா வளங்கொ ணீராற்
பன்னரு மலைமேல் வந்த பண்பினு லரியைக் கூடி
யின்னிசை யுறலாற் கோதி லெழிற்றிரு மகளை யொத்து
மன்னுறு மதின்பேர் சுத்தி மதியெனு முலக மெல்லாம். 8

வாருதை வளைக்கை நல்க வாணிநன் னீரி னோடு
வேகமின் மொழிகள் பேச வேத்திர வதிமுன் சென்று
சேகிலொண் புகழி யம்ப நருமதை செல்லப் பாங்கில்
ஏகுவ ளயனைக் காண்பா னென்றுமந் நதிம டந்தை. 9

உயர்குண மதிநன் றூர முறுதலாற் பெரிய ளாகி
யயர்வறு மளியு மன்ன நடையும்வாய்ந் தனேக மான
பயனுறு நதிகள் சூழப் பதுமநான் முகனைக் கண்டு
மயலற வொருநாண் மீண்டு வரும்பொழு தோரி டத்தில்; 10

போதுசூழ் சிகையு மிட்ட திலகமும் புதுமை யேருந்
தீதில்கத் தூரி யாரந் திகழ்தரு முரமும் வாய்ந்த
மேதரு வாச மாண்பு மிக்கபூ வடிவ னப்பு
மோதரு மணிசி றந்த வுருவமு முடைய னாகி; 11

கனமக லாத கோலா கலவரை யரச னென்போன்
வனசநான் முகனைக் கண்டு வழிக்கொடு செல்லும் போழ்து
புனனதி வனிதை கண்டு பூங்கரங் கமலங் கூம்ப
வினமட மகளி ரோடு மேகினள் விலகி யாங்கு. 12

இமகிரி யரச னுக்கோ ரிதமுடைத் தனைய னாகி
யுமையவட் கிளவ லாகி யோதரும் பரம னுக்கு
விமலமைத் துனனு மாகி மேவிய வசல வேந்தி
னமைவிலாத் திண்மை யெல்லா மகற்றினள் சென்றாண் மாது. 13

ஆமையுங் கதலி விம்ப மானவும் புளினக் குன்றுந்
தோமறு சுழியு நேமித் துணையுமம் புயமு நீலுங்
காமர்சை வலமும் வாசங் கமழுறுப் பாகக் கொண்ட
வாமநன் னதிம டந்தை வடிவையுட் கொண்டு வந்தான். 14

கதியுறு நதிய ணங்கைக் கண்டநாண் முதல தாக
வெதிரில்சீ ரிமய வெற்ப னீன்றரு ளசல வேந்து
மதனரும் போது தன்மே லுதிர்ந்திட மால்ப ரக்க
மதியின்மீ தெழுந்த சோகம் வளர்ந்திட நின்றான் மன்னோ. 15

தனையனை யமரக் கொம்பு தருமலர் தூற்ற நின்று
புனமயி லன்ன ளேங்கப் போகிநெட் டுயிர்ப்புக் கொள்ள
நனிதலை வல்லி சாய்க்க நதிமட மானைத் தேடி
வனமயிர் சிலிர்ப்பக் கண்ணீர் வழிந்திட நின்றான் வெற்பன். 16

நதிக்குமால் கொண்ட போதே நதியில்வா ழனமுஞ் சேலும்
புதுக்கடி வனசப் போதும் புரையிலுற் பலமும் வண்டு
மதித்துவெம் படையு றுப்பாய் மதனவே டான்கைக் கொண்டா
னெதிர்த்துநீ டசலன் மீதே யிகல்செயக் கருதி மாதோ. 17

வருபனி நீரி னானு மதிமணிப் புனலி னானுந்
திருமிகு சந்த னத்தின் சீதள நறையி னானும்
விரைவரை யிறைக்கு மோக வெம்மையோர் சிறிதுந் தீரா
தரியவந் நதிமா மங்கை யமுததா ரையினா லன்றி. 18

மதனவேள் விடுத்த கஞ்ச வாளியென் பதுபுள் ளோசை
யதிர்வரை யுள்ளந் தன்னைத் துளைத்திட லரிதோ வன்ன
தெதிரிலா வரையை யீரும் புனலிடை யெழுந்த தன்றோ
சதமுனைப் படைய தன்றோ சாற்றிடுங் காலை யம்மா. 19

கோகிலங் கிளிவண் டார்ப்பக் கொளுந்திய விரக தாப
மோகிவேள் கணையின் வாதை முடிந்துநன் னதியின் மீதே
யோகையாற் றோயி னன்றி யுற்றிடா சுகமென் றெண்ணி
யீகையா ரசல வேந்த னேகுமா றுள்ளம் வைத்தான். 20

குளிர்மணி யாரம் பூண்டு கோதிலா வெழில்பெற் றுள்ள
களிமத னிகர்மெய் கொண்டு கனமுடை யசல வேந்தன்
புளினமால் வரையி னேறிப் பொலிகமஞ் சூலு ளாந்து
வளையின மலறுஞ் சுத்தி மதிநதிப் பாங்கர் வந்தான். 21

வந்தபோ தெழுந்து சுத்தி மதியொரு வனிதை யாகிச்
சந்தவால் வளையொண் பாணி தனில்வன சக்க லங்கொண்
டந்தமார் தாதுக் கந்த மாகநற் கேச ரங்கண்
முந்துமக் கதையு மாக முன்கொடுத் திறைஞ்சி னாளால். 22

அந்நதி யிட்ட பீடத் தசலவேந் திருந்து கண்ணுன்,
மன்னிய வெழிலை நோக்கி வளநிதி கண்ட தேர்ந்தான்
பொன்னலை கொழிக்குஞ் சுத்தி மதியெனும் புனித மங்கை
மின்னிடை நுணங்க நின்று வேந்தெதிர் மொழிய லுற்ருள். 23

நதிகளைத் தருமு னக்கு நான்றரு மருக்கி யாதி
புதியகற் பகப்பூ வாசம் பொருந்திய வுனக்கென் போது
துதியுறு பெருமை சான்ற சுரமணித் தான மாகிச்
சிதைவிலா துறுமு னக்கென் மணிதரல் சிறப்போ வையா! 24

அனைத்தையு முதவு கின்ற தருக்களு மமுத மான
சுனைத்தொகை பலவுந் தேவ தொகுதியுஞ் சுரமின் ருரு
மினத்தொடு மருவி நாளு மிடைவிடா திலக வைகு
முனக்கென திடத்தி னல்கும் பொருளுமொன் றுளதோ
[சொல்லாய். 25

மைத்தொகை தவழுங் கோட்டு மலையிறை கேட்டி யோங்கல்
அத்தனை தேவுக் கோங்க லத்தனை பூசை செய்வார்
முத்திற வுலகி லுண்டோ மொழியும்யா னன்பி னீந்த
பத்திரம் பூநீர் கொண்டு பழிப்பிலுன் கருணை நல்காய். 26

என்னிடை வந்தா யைய வியல்பனு ராக சம்பத்
துன்னியன் றேவென் றுண்மெய் யுரைத்தனை புவனஞ் சாரு
மின்னதி நீவி வேகி யல்லையோ வென்று வெற்பன்
றன்முகக் குகையுட் டந்த வச்சிரந் தயங்க நக்கான். 27

அன்பொரு நதியின் ருேரா டயனை நீ கண்டு மீள்போ
துன்புனி தமுமுன் ருழ்ந்த வுள்ளமு முனது நீரு
மின்பொடு மோதப் பட்ட வியல்புமுன் னிறைவுங் கண்டே
னென்புது மதியா லுன்னை மதிப்பல்யா னெந்தெப் போதும். 28

நல்லயற் காணக் கண்டு நதியின்ருர் போக மீள
வில்லையோ வவரைக் காண்க வில்லையோ வெவர்க்கண் டாலும்
வல்லிகே ளுன்னைக் கண்ட வளமென விருந்த தில்லைப்
பல்லுரை சொல்வ தேனென் பாக்கியங் காட்டிற் றன்றே. 29

எனதுள நினைவ றிந்தே யெனையணை யாதி ருத்தி
யெனிலுனை யெவ்வி தத்தி னிணங்குவே னமுத மான
வுனதுசொ லெவ்வி தத்தி னுற்றிடுஞ் செவிக்கென் றேர்வேன்
றனைநிக ரறத்தின் சார்வாய்ச் சார்ந்தரு ணதிம டந்தாய். 30

மதுரமுந் தூய்மை தானு மனேகர நடையு முள்ள
புதியரைச் சேரெண ணுது போய்பெரு நண்பு கொள்வர்
மதியின ராத லால்யான் மகிழ்வொடு தூரம் பாரா
ததிகமா முனைய டைந்தே னருந்தாபந் தீர்க்க வல்லாய். 31

என்னிடத் துறுப யங்கள் யாவையு மினிதி னல்கி
யுன்னுருப் பூரித் தோங்கப் புரிகுவ லுலவா தென்னை
யன்னிய ஞக்கி நீக்கா தழகுடை நேமிக் கொங்கை
யன்னமே யென்னைத் தாவ மாற்றுவேந் தாக்கு கென்ருன். 32

ஓங்கலந் தலைவன் சொன்ன வுயர்........ன வொலியைக் கேட்டுப்
பூங்கர பங்க யங்கள் கூம்பிடப் புந்தி துண்ணென்
றேங்கியே பொருவில் சுத்தி மதியெனு மினிய நங்கை
பாங்கரி னின்று மெல்ல நலனுரை பகர்த லுற்ருள். 33

வேறு

எனதுள முழுதும் பங்கமே யங்கம்
புற்புத மிரும்பய முடையேன்
வனமுறு கதியுங் குடிலமே யுதய
மையுறு தினந்தனி லதலால்
அனுதின மலைபட் டிரங்குதல் குணமே
யறைதரிற் றிண்மையொன் றில்லே
னுனவரு மென்பாற் றிரமிலை யென்னு
லுனக்கித மெவ்வகை யுறுமே. 34

திரமுனை யுலவாத் திண்ணிமை யுளையோர்த்
தீதிலாக் கன்முனை யோங்கு
வரமுனை பங்க மென்பதொன் றில்லாய்
மாறிலா வுன்னுட னெனக்கு
மருவுத லியல்போ நீபெருங் கிரியான்
வனநதி வுயர்ந்தவுன் னிடத்தே
விரவியென் பயனன் கேறுமோ வென்ருண்
மெய்த்தவர் தோயுநீர் வனிதை. 35

புண்ணிய நதிசொல் பணிமொழி கேட்டுப்
பொருவருஞ் சைவலக் குழலாய்!
எண்ணியுன் னழகு வாரியிற் புகுந்தே
னென்றனை யிங்ஙனஞ் சுழலப்
பண்ணுவை கொல்லோ வருளெனும் புணையைப்
பண்பொடு தருகுவை கொல்லோ
நண்ணரு முனது மனக்கருத் ததனை
நானறி கின்றில னென்ருன். 36

துங்கமுற் றிடுநீ யென்பயத் தடையிற்
சுகவரைக் குலத்துனக் கிழிவா
மங்குல வமர மாதர்க ளிருக்க
வறமுடைத் தலந்தொறு மடைந்து

பொங்குமா தவத்தி னுருமிக விளைத்துப்
பொலிவன ரர்சியிற் புகுந்து
தங்கெனை மருவத் தகுங்கொலோ வென்றாள்
தையலவ் வேந்திவை யுரைக்கும். 37

உரியநற் கிளையின் றெழிந்ததோ யமுனை
யுடன்மிகக் கலந்தகண் ணனுக்குப்
பரிவுறு வசுலா பத்தடைந் திலளோ
பகிரதி மணந்தசந் தனுக்கோன்
பெருநதி பதியா முத்திமா திருவைப்
பெற்றிட வில்லையோ நதிகூ
டரியவெம் பரமன் றலைமதி யுடைய
னாகியுற் றிலன்கொலோ புகலாய். 38

எனையினி தணைந்து புரந்தருண் மடவா
யென்னவங் கைபிடித் தனுமே
வனமலர்ப் பாசிக் குழல்விழுந் துழல
வனசமென் பாணியில் வளைக
ளினமொடு முரலக் கட்கயல் புரள
விலங்குகற் கடகமு மலையத்
தனைநிகர் வதன பங்கய மலந்து
தன்னுளே பரிந்தனள் வனிதை. 39

மாரவேள் விடுத்த கணையுளம் பிளந்து
வருத்துத லவன்பொரு ளாகி
யேருடை நதியை மறித்திடக் கருதி
யெழுந்துசே லாதிகள் குதிப்பக்
காரடை பொதும்பர் நிறையிரு புறத்தின்
கரைகளு மிடிந்திட வயங்கு
தாரகை யுலக மணவுகோ டுடைய
தன்வரைப் பேருரு வெடுத்தான். 40

மாலலைத் தலிவ்வீழ் சிலைகளான் மிதுன
கின்னர மயங்குற முடுக்கிச்
சாலநெட் டுயிர்ப்பாம் புகைமுகி லதனாற்
றாமரை யளிகளைத் துரத்திப்
பால்புரை தரள வொளிநில வதனாற்
பரிவுற நேமியை யகற்றிச்
சேல்பிறழ் நதிக்குப் பணிதலி லழுந்து
விழுந்தனன் றிரைப்புனல் பாக்கம். 41

கோலாகலவிறைவன் சுத்திமதியை யணைந்து இன்புறல்

குழலொடு மலரும் விழுந்தன மலருங்
குழுமிய பாசியு மலைய
விழைதரு தரளஞ் சிதறிடத் திவலை
மீதெழ வமுதமேற் குதிப்ப
வழகது பொலியங் கலைபுறத் தகல
வணிதரு பயோதரங் தொட்டாங்
கெழுதிரை நதியை யணைந்தது புவியில்
யாவரும் புகழ்வரை யரசு. 42

வசு அப்பொழுதேற்பட்ட ஒலியைப்பற்றிப் பலவாறு எண்ணல்

அலைபுனல் புவியிற் பரத்தலா னரு
மளவிலா விலங்கொடு குழுமி
நிலைபிரிந் தகனு முழக்கமஞ் செவியி
னோர்வர வரசனுங் குணர்ந்து
சலமெழு முகாந்த வொலிகொலோ வசலந்
தூவலைச் சிந்துவிற் புகுந்து
வலியொடு மதிக்கு மொலிகொலோ வென்று
மனத்திடை யெண்ணிய வளவில்; 43

அவ்வொலியைக் கேட்ட பூவுலகத்தவரும், வனசரரும்
வசுவேந்தனிடம் முறையிடல்

நிறைதரு சகத்தோர் வனசரர்த் தத்த
நிலைபிரிந் தொல்லெனக் குழுமி
யறமுடைப் புவன விந்திர பகைவர்க்
கசனியே கருணையங் கடலே
மறைநெறி தவரு மன்னவிவ் வுலகில்
வந்தவிவ் விடுக்கணை யகற்றி
முறையுறப் புரவா யென்றுவந் திறைஞ்சி
முன்னர்நின் றிவையிவை மொழிவார். 44

வெங்கன விதமுற் றளிப்பதே யன்றி
வெம்மையை விடுத்திடா தனிலம்
பொங்குதூள் பறக்க வடித்திடா துதித்த
புனிற்றிளந் தென்றல்போ லலது
செங்கதி ரொளியுண் டாக்குவ தன்றித்
தீவிர வெயிலெறித் திடாது
மங்கல்பே ரசனி யிடித்திடா தமுதம்
வழங்குவ தன்றியுன் முறையால். 45

இந்நெறி தகநீ புரந்திடு மூலகிற்
கிடுக்கணென் றுற்றதிங் கிறைவ
நன்னதி யிடையோர் மலையொலி யெழப்பூ
நடுங்கிட விழுந்தது புவனந்
தன்னைமுன் மறித்த விந்தமொத் துலகந்
தளர்ந்திட நதிப்புனல் பரந்த
துன்னரும் புனலில் வெளிநிழல் பரத்த
லுயர்ந்தவான் விழுந்தொத் ததுவே. 46

பரிவுறு புரங்கள் யாவுமோ தரிய
பங்கமே யானவெண் ணணிந்த
சரவுயி ரனைத்துஞ் சரித்திடன் மறந்த
தரணிதேர்க் கப்புறம் வளரு
மருதமாத் துடவை முழுதும்வெண் மணன்மே
டாயின வரையெலா முழுகி
யொருவின தரையிற் பொருவிலெப் பயனு
மொழிந்தன வொழிந்தன வரசே. 47

முறையீட்டைக்கேட்ட வசுவேந்தன் சினமுடன்
மலையரசன்மீது போர எழுதல்

ஆலய முழுது மாலைய மடைந்த
வளவறு புவனமும் புவன
சாலமாய் நினைந்த வுனைத்தொழும் விதியின்
றன்மையால் யாங்கள்வந் தடைந்தேம்
பாலனம் புரியா யென்றலுஞ் சினத்தீ
பரந்தது போல்விழி சேப்ப
வேலுமார்ப் பரிதன் கொடியினை யேய்ப்ப
விகல்வரை மிசைப்பொர வெழுந்தான். 48

கரவின்வா யடைந்த மும்மத நால்வாய்க்
கறையடித் தந்தியைப் புரக்க
வரியடைந் ததுபோற் கதிரொளி விரிக்கு
மாதவன் றேரினுங் கடிது
புரவலன் முடுகி நடந்தனன் கரையிற்
பொருதிரை வரையெனப் புரட்டி
யிரைகட லெனநா லங்கமுங் கடந்த
வெழுகிரி புவியொடு நடுங்க. 49

வேறு

வரைத்தொகை தகர்த்திடு வலக்குலிச மொத்த
திரத்தவன தந்தமுள திண்டிற லுவாவுங்
குரத்துக ளெழுந்தெழு குரைக்கட லடைப்பப்
பொருப்பலை யவாவிவரு பொங்குளைய மாவும்; 50

புரண்டவு பலத்தொடு பொருப்புகள் குலுங்க
வுருண்டிடு மணித்திகிரி யோசையுறு தேருந்
திரண்டவரை யுட்கவுயர் திண்புய மிசைத்தம்
இரண்டுகை புடைத்துலவு மெண்ணில்விற லோரும்; 51

நதியில் விழுந்த மலையை வசு கால்நகத்தினுல் எற்றுதல்

வென்றியொடு துன்றிவர வேகமொடு கூடிச்
சென்றுபுவ னம்புகழ் திறற்சூரிசி னேக்கி
மின்றிகழ் நதிக்கிடை விழுந்தவச லத்தை
நன்றுறு பதத்துகிரி னுன்மிக வெறிந்தான். 52

வெள்ள ஆரவாரம் அடங்கல்

மிக்கதொரு துந்துபியை விண்ணெழ வெறிந்த
தக்கவனை யொத்துயர் தருக்கினெ டடைந்தான்
அக்கண மதிற்சுர ரலர்த்தொகை சொரிந்தார்
தொக்கெழு நதிப்புனல் சுருங்கிய தடங்கி. 53

நதிக்கு அப்பால் மலை விழுந்துகிடத்தல்

மரங்கொடி விலங்குதடு மாறவு பலங்க
ளிரைந்துருள வன்சிறை முறிந்திட வெழுந்து
விரைந்துமுதிர் வெவ்விரக வெப்பொடும் விழுந்தவ்
வருங்கிரி கிடந்தது நதிக்கய லடைந்து. 54

அப்பொழுது துந்துபி முழங்கல்

நந்தெழில் சிறந்தம னகங்கொடு நகத்தைக்
கந்துக மெறிந்தென வெறிந்திடு கணத்திற்
றுந்துபி முழங்கியது தொல்லை மகமேரு
மந்தர முழங்கிய தெதிர்ந்தொலி வயங்க. 55

சுத்திமதி கூறியதைக் கேட்ட யோகி
மேலும் நடந்தவற்றைக் கூறெனல்

என்றுபணி மென்மொழி யெடுத்தினி திசைத்தாள்
மன்றநெடு வஞ்சனை யுளத்தவன் மதித்தே
துன்றதி சயத்தொடுகண் மூடிநனி தோகாய்
நன்றினு நிகழ்ந்தகதை நன்கொடுசொ லென்றான். 56

மேல் வரலாற்றை சுத்திமதி கூறத் தொடங்கல்

கோதம னெனும்பெரிய கோமுனி நீகர்க்கு
மாதவ! வொழிந்தனவு மற்றினிது கேளென்
றேதமில் செழுங்கமல மீமிசை யிருந்த
மேதகு மடந்தைநிகர் மென்மொழி யுரைக்கும். 57

வரையெறி படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 320.

## 11. விமானப் படலம்

வசுவின் திறனையறிந்து பரிசளிக்க இந்திரன் வருதல்

மூந்துமலர் மாரிசொரிந் திடுதலொடு முதலமர
துந்துபியு முழங்குதலத் தொல்வரையை யெறிந்தவிறை
மைந்துடைய விறல்புகழ வரைச்சிறைகொய் தவன்விரைவில்
வந்திடுதற் கடையாளங் காட்டுதல்போல் வயங்குமால். 1

கோத்திரத்தை நிலைநிறுத்து கொள்கையினன் சதகோடி
வாய்த்துடையன் கலியாண மந்திரத்தன் பகைவலனைச்
சாய்த்தவன மெனமுடித்த மலர்வாடாத் தன்மையின
னேத்தவனி தோய்புயத்தற் கிருந்துணைவ னுமரவோன். 2

தன்னுருவி லாயிரங்கண் டயங்கவிசை விஞ்சையர்கண்
முன்னர்புகழ்ந் திடவசுவின் பெருந்திறலை முன்னிமதித்
துன்னருமோர் பொருளுதவி யுளமகிழப் புரிவதற்கு
மன்னுபுகழ் திசைப்பால ரொடுவிரைவில் வந்தனனால். 3

எதிர்வந்து பணிவேந்தை யிதயமகிழ்ந் திடநோக்கி
வதியுநறுஞ் சருக்கரையம் பொருப்பின்மிசை மந்தாரப்
புதுமலர்த்தேன் மழைபொழிந்தாற் போலவிய னுலகளிக்கு
முதிர்தரும விண்ணவர்கண் முதல்வனனி மொழிகின்றான். 4

வசுவினை இந்திரன் பலவாறு புகழ்தல்

புவிமுழுதும் புரந்தளித்த புரவலரைக் கண்டதுமுண்
டவரொடுநட் புற்றதுமுண் டருந்திறல்கேட் டதுமுண்டா
னவபுவனந் தனிபுரக்கு நன்முதல்வ நின்னெழில்போற்
றவலருமுன் புயவலிபோற் றகக்கண்ட திலைக்காய. 5

பிருதுவெனுந் தொல்லோனைப் பேருலகிற் பெரியனெனக்
கருதுவலங் கவன்வலியுன் கழலுகிருக் கிணையன்று
பொருவருமென் கைப்படையுன் பொற்பதத்தி னிலக்கணத்தான்
மருவியிருந் ததுகண்டாய் வரையெறிந்த தாணகத்தோய்! 6

தமரொடுதெவ் வரையடக்க யுனதடியின் றயங்குகிரே
யமையுமுயர் சதகோடி யடையாள மேனெனக்கிங்
கிமையவர்தங் குழுவினெடு விளங்கினன்யா னின்றன்ரூ
வமுதமனை யாயுன்போ லன்புடையர் கிடைப்பரோ! 7

இந்திரன் வசுவுக்கு விமானமொன்று பரிசளிப்பதாகக் கூறல்

எனக்குமிய லமரருக்கு மிணையிலா விதஞ்செய்த
வுனக்குமணி மயமாகி யுதயகதி ரொருகோடி
யெனத்திகழும் விமானமிது தருகின்றே னிகன்மதனில்
வனப்புடையோ யிதன்பெருமை யுரகர்க்கும் வகுக்கரிதால். 8

விமானம் இந்திரனுக்குக் கிடைத்த வரலாறு

பிரமனுங்கண் டதிசயிக்கப் பீடுடைய மயன்ருதை
யரியதெனப் படைத்துமகிழ்ந் தரிக்குதவ வவ்வரியுந்
திருமகளை மிகுவதுவை செய்பொழுது வைகுண்டப்
பெருநகரை வலஞ்செய்தான் பிறழ்விது தனிலேறி. 9

மலர்மகளை மணஞ்செய்து மணிவண்ண னளவிலாப்
புலவர்தொழ வுறைபொழுது பொருவருமிவ் விமானத்தைக்
குலவுமுளத் தன்பினெடு நோக்கிடுமெற் குறிப்பையறிந்
தலகில்கரி பரியுடனீ தெனக்களித்தா னக்கடவுள். 10

விமானத்தின் சிறப்புக்களை இந்திரன் வசுவுக்கு உரைத்தல்

அடலரசர் பணிபதத்தோ யமரமணி பலவொளிருங்
கெடலரிய விதுபரிவிற் கேட்டபொருண் முழுதளிக்கும்
படைகளொடு தடுப்பரிய பலசேனை களைநினைத்த
விடமதனி லளித்திடுங்கா ணிதன்பெருமைக் களவுண்டோ. 11

கனலிநிகர் சோதியுறு மிதினுனே கருதரும்பு
வனமுழுதும் பார்க்கின்ற வளனுண்டா மருந்தோடங்
தனையகற்று மமிர்தளிக்குந் தனிக்காம ரூபுடைய
தினியகன வொலியுறலா விதற்குநிகர் வேறுண்டோ. 12

வாடாத வலங்கல்புனை மானவிறை யாதலினு
னீடாசி லளகேசன் புட்பகமு நிகரன்று
பீடாரு மனந்தமணி வெயிலெறிக்கும் பெற்றியினல்
வீடாத பனிக்காலந் தனிற்சுகத்தை விளைக்குமால். 13

விரும்பவொளி திகழ்வயிரக் கனவுபல மேடையெனத்
திருந்துதலைப் பெயல்சொரியுந் தினத்திலித மேயளிக்கும்
பொருந்துசுகம் பெரிதருளும் புதுவேனிற் பருவத்தில்
அரும்பவள மிகுங்கொடிவீ டாகிநெடுங் கதிர்வேலோய்! 14

நித்திலவெண் மணிகிடந்து நிலவெறிக்கும் பெற்றியினால்
உய்த்தபெரு வெயிற்காலத் துதவுங்கா ணினியசுக
மெத்தகைய காலத்து மிதமளிக்கு மொலிக்குமிதிற்
சித்திரங்க ளியனடன கீதவியங் களைச்சிறக்க. 15

இந்தமணி மானத்தி னியம்பரிய மூவரலாற்
சந்தமுட னேறுதற்குத் தரமல்ல ரெவரேனு
நந்தரிய வரைருளா னான்பெற்று நினக்களித்தே
னந்தமறு நீயளவில் குணமுடையை யாதலினால். 16

வசு விமானத்தைப் பெற்றுக்கொள்ளல்

இனியவித னியல்புவமா திவர்ந்துநீ கோமார்க்கந்
தனின்மிகவுஞ் சரித்திடுதி தவறில்லா யெம்மிடத்து
மனமகிழ்ந்து வரக்கடவை யெனக்கொடுத்தான் மகபதியக்
கனகமணி மானத்தைக் கைக்கொண்டான் கதிர்வேலோன். 17

வசு உபரிசரன் என்ற பெயர்பெறுதல்

நெறிதவரு வரசனுக்கு நெடியமணி மானமளித்
தறைவரிய வாசிபுகன் றகன்றனனம் மகவேந்த
னிறையவனுக் குபரிசர னெனுநாமந் தனையளித்து
மறைநெறியான் மிகவாழ்த்தி வந்தனர்மா முனித்தவர்கள். 18

வசு விமானத்தில் ஏறிப் பல்வேறிடங்கட்குச் சென்றுவரல்

அரியமணி மானத்தி னரசனிவர்ந் ததிட்டான
புரமதனில் வந்திருந்து பூசுரர்க ளவாக்கெடமற்
றுரியநிதி முதலளித்தொவ் வொருவேலை சுரருலகும்
வரைவனந்தீ வாதிகளும் போய்நோக்கி வந்திடுமால். 19

தத்துதிரை யிருகரைப்பாற் சங்கீன்ற முத்தொதுக்குஞ்
சுத்திமதி நீராடு மிடமாகத் தூயபுகழ்
வித்தியகோ லாகலந்தான் விளையாடு மகமாக
வைத்தருளி யினிதிருந்தான் வசுவென்னுந் திறல்வேந்தன். 20

விமானப் படலம் முற்றும்.

ஆகத் திருவிருத்தம் 340.

## 12. கிரிகை யுற்பவப் படலம்

சுத்திமதிக்குக் கருப்பச் சின்னங்கள் ஏற்படுதல்

புவனத்தை மறித்திடைவீழ் பொருப்பப்பா லகன்றவுடன்
கவலற்ற சுத்திமதி யெனுமங்கை கருவடைந்தா
ணவையற்ற நடுக்காண வந்ததுநற் றரங்கமடிப்
பவையற்ற வுதரத்தி னடைமந்த மாயிற்றால். 1

உன்னதமா கியதலத்தி னிவர்ந்திடுத லொழிந்ததரல்
இன்னினிய சுவையிச்சை யெழுந்தனவான் மிகமிகவும்
பன்னருஞ்சீ ருடையுருவம் விளர்த்ததாற் பயப்பயமற்
றன்னநடை பணிலமிடற் றரியகய னயணிக்கு. 2

மிளிருந்திச் சுழிபாசி மயிர்க்கொடிமேல் விளங்கினவால்
அளியொன்றும் புவிக்கமுகைக் கொங்கையமைந் தனவால்
வளையங்க ணகன்றதெரி்லி மந்தமே யாயினதா
னளிதுன்று மிணையில்லா நளினமுகம் வெளிர்த்ததால். 3

நல்லோரையில் சுதமதி, ஒரு மகனையும்,
பெண் மகவையும் ஈன்றமை

குலவன்ன மெனுமினிய கோதையர்கள் புரக்கவதிந்
தலர்துன்று நதிமங்கை யழகுறுசெம் முகைவிளக்காய்
மலரின்று துறுநீறாய் மலர்ப்பைந்தேன் றயிலமதா
யிலகும்பூங் கொடிமாடத் தெய்தியநல் லோரையினில், 4

ஒப்பிலோர் சுதனையுமோ ரொளிர்மகவை யும்பயந்தா
ளப்பொழுது கோணமுழுது முச்சமா யமைத்தனவால்
வைப்புடைய வுடுவினல மதியினல முரைப்பரிது
செப்பருங்கா லனகமதாய்த் திகழ்சுமுக மாயிருந்த. 5

மகப்பேறு அடைந்த கோலாகலவிறையின் மகிழ்ச்சி

மகப்பிறந்த நலங்கேட்டு வளமரு வரையரசன்
மிகப்பெரிய வரைகளுக்குள் விளங்கினே னெனமகிழ்ந்தா
னிகற்படைகொள் வசுவேந்த னிலகுமலர்த் தாணகத்தி
னகப்படுநா ளெழுந்துவிழுந் தடிபட்ட துயர்நீங்கி. 6

மகனுக்குப் பெயரிடுதல்

நலனெடிரு பவக்குலத்தி னரவஞ்சூழ் நதிவனிதை
சலமெதிரத் தனைமறித்த வரையகற்றித் தனதுருவ
மிலகியிடப் புரிந்ததியல் வசுபாத மெனக்கருதித்
தலமகிழும் வசுபாத னெனவுரைத்தா டன்சுதன்பேர். 7

வேறு

மகளுக்குப் பெயரிடல்

பணிவ ரைத்திரு மகணிக ரெழிலுடைப் பாவைக்
கனக ராந்தவ முனிவரர் தேர்ந்துளத் தருளால்
இனிமை யாம்பெயர் கிரிகையென் றிசைத்தன ரிணையில்
கனக ருங்கட லுலகெலாஞ் சிறப்பொடு கழற. 8

கிரிகையின் வளர்ச்சி

நீல மாமலர்த் தொட்டிலி னேற்றிநீ டளியின்
வால வோசையா லினியதா லாட்டிநல் வனசப்
பால டைப்பசுந் தேனினைப் புகட்டிவெண் பதுமக்
கோல மென்கலை போர்த்தன ளீன்றருள் குலத்தாய். 9

எகின நன்னடை மணங்கம ழிளங்கொடிச் சூழற்
சுகமி யம்புதல் சிறைவிரித் தாடுதுந் தோகைக்
ககமி லங்குகூத் தளியின மளிதரு கானம்
புகரி லாவகை பயிற்றிடப் பயின்றதப் பூவை. 10

மாச கன்றிடு மாதவப் பன்னியர் வாழ்த்த
வாச மேவிய வனத்துறு மணங்கியர் மணந்தாங்
காசை யாலருந் தாதிய ரிகுளைய ராகி
காசு ருவகை வளர்த்திட வளர்ந்தனள் கன்னி. 11

வேறு

கிரிகை பல்வகை விஞ்சைகளைக் கற்றல்

மணல்கு வித்தொரு மணியினை மங்கையர் மறைப்ப
விணையி லம்மணி யிலாவிடத் தினுமணி யெடுத்தா
டணிவி லன்புட னவர்களுன் றுய்மணி தனைவைத்
தணிய வுன்னையே வெல்குவித் தாளென வறைந்தார். 12

தந்தை சாரலிற் கற்பக மலர்ப்பொடி தன்னுல்
வந்து சிற்றிலங் கமைத்தலர் மதுக்கள்வார்த் திடுநெய்
நந்து றுமலர் சோறுமென் முகைநறுங் கறியாச்
சந்த மங்கையர்க் களித்தனள் பன்னபா சனத்தில். 13

சங்கை வென்றகந் தரத்திலோர் சங்கவெண் மணியை
மங்கை மாநதி தரிப்பதென் றருங்கிரி மணித்தார்
பொங்க மெல்லுறப் பூட்டலுங் கடினமப் பூணென்
றங்க ணன்னைநீத் தலர்களி னலலங் கரித்தாள். 14

அருமை யானதன் மகட்குநல் வாணியி னமுதா
மிருப வக்குழு முன்னிறீக் கனகமு மீந்து
பொருவில் விஞ்சைகள் பயிற்றுவித் தனணதிப் பூவை
யுரிமை யாயசெங் கரதலா மலகமா யொளிர. 15

வேறு

நகவிறை யான தந்தை நன்மணிக் கூட மீந்து
புகரில்விஞ் சையர்க டம்மைப் பொறபொடு நிறீஇசங் கீதத்
தகவுறு வீணை யாதித் தாழ்விலா விஞ்சை யெல்லாம்
பகரரு மெழின்ம கட்குப் பரிவொடு கற்பித் தானல். 16

பல்லியற் புகரில் கானந் தன்மகள் பாடும் போழ்து
மெல்லிய வனிலம் புக்கு விளக்கசை யாதி ருக்க
வொல்லையிற் குழுகு மென்னு மொலிநிரம் புறநல் லாடி
யெல்லென மணிகா லும்மோர் மனையமைத் தினிதி னீந்தான். 17

மஞ்சுவாணி கிரிகையின் வரலாற்றைக் கூறி முடித்தல்

அந்நதி வனிதை பெற்ற மகளிவ ளடவித் தெய்வ
கன்னிய ரிவர்கள் செங்கோற் காவல னடிநகத்தார்
முன்னெறி பட்ட வெற்பீ திதிற்குகை முதல்வ னங்கண்
மன்னிய சுனைக டாமிம் மயில்பயி லிடங்கள் கண்டாய். 18

அதைக் கேட்ட யோகியின் மகிழ்ச்சி

என்றுதன் மஞ்சுவாணி யெனுமவள் வசுவின் காதை
துன்றெழிற் கன்னி காதை யொடுமிக விரித்துச் சொன்னு
டன்றுணைச் செவிக்கு மிக்க தனியமு தென்னக் கேட்ட
வன்றிறற் கபட யோகி மகிழ்வெனுங் கடலு லாழ்ந்தான். 19

ஆங்குறை யிறைதன் சீர்கேட் டமைச்சன துணர்வுங் கன்னி
பாங்கிசொ லியல்பு மன்னுட் பயந்தகோத் திரத்தின் சீரு
மோங்குறப் புகழ்ந்தா றீன்ற வொளிருமிம் மணியெ னுது
நீங்கருஞ் செல்வ மாமென் றுளத்திடை நினைந்தி ருந்தான். 20

கிரிகை யுற்பவப் படலம் முற்றும்.

ஆகத் திருவிருத்தம் 360.

## 13. கிரிகைக் கருகுசெல் படலம்

கிரிகையும் வசுவும் மணந்துகொள்ளுதற்கு
ஏற்றவர் என்று யோகி கூறுதல்

தன்னிக ரில்லா வின்சொற் றனிமுனி சற்று நேர
முன்னுதல் போல வுன்னி யொண்டொடி கேண்மோ நந்தம்
பன்னரு மிதயக் கண்ணுற் பார்த்தன மிந்தக் கன்னி
மன்னநல் வசுவுக் கில்லா ளாவதற் கைய மின்றே.

இசைபெறு குடிஞை யீன்ற விம்மணி தன்னை வேதா
வசுவுடன் சேர்த்தி லானேல் வறிதவன் சிருட்டி விஞ்சை
யசிவிழி யரிற்சி றந்தா ளாயிவின் ஞரி தானே
வசையில்வாள் வேந்த ருக்கு ளதிகனவ் வசுவே கண்டாய். 2

தாவில்சீர் வசுவு மிந்த தையலு மேக மாகிப்
பூவுநன் மணமும் போலப் பொருந்துநா ளணித்தாய் நின்ற
தேவல்செய் நுங்கள் கண்ணுக் கின்பமும் வரைய வின்றே
மேவுறு மமுத மன்ன மென்மொழி மாதே யென்றான். 3

வசுவேந்தன் எப்பொழுது வருவான் என்று,
மஞ்சுவாணி யோகியை வினவுதல்

இக்கிரி பார்க்க வேந்த னெய்துவ தென்றோ சூழு
மிக்கொடிச் செறிவு தன்னின் மேவுவ தென்றோ கோதில்
இக்கணி மொழியி னூளக் காண்குவ தென்றோ மாறா
விக்குல மகளி ருள்ளங் களிப்பது மென்றோ வையா. 4

தூயமா தவநீ சொன்ன சொல்லொரு சிறிதுந் தப்பா
தாயினு மென்ற னுள்ளத் தையுற லகல வின்று
நீயுரை யுனது மாற்ற நிச்சய மன்றோ வென்றாண்
மேயமென் மொழிம டந்தை விரகினன் கருதிச் சொல்வான். 5

யோகி, மந்திரசக்தியால் வசுவை வரவழைப்பதாகக் கூறல்

தையல்கே ளிறையிம் மானைச் சார்வதற் கைய மின்றா
லையமுற் றனையே லந்த வரசையென் மந்தி ரத்தான்
மெய்யுற வழைப்ப லென்று விரகின்மந் திரிப்பான் போலப்
பையநாற் றிசையு நோக்கிப் பார்த்திப வருக வென்றான். 6

அப்பொழுது வசுவேந்தன் வெளிப்படல்

இதுமிக வேளை யென்றாங் கிறையவன் முகிலை நீத்து
விதுவரு மியல்பு போல மென்கொடி மாட நீங்கித்
துதியுறு மங்க ராக நறைக்குறுஞ் சுரும்பி னோசை
மதிகொளப் புகழ்வோர் பாடும் பாட்டென வயங்க வந்தான். 7

வேந்தனைக் கண்டு, மகளிர் இருக்கையைவிட்டு எழல்

நளனையொண் மதியை வேளை நல்லெழில் கொடுவென் றானை
வளரொளிப் பவளத் தோடு போர்செயும் வாயி னானை
யுளமகிழ் பதும ராக மொத்தநன் னகையு ளானை
இளமுலை மடவார் மோக மெய்துறும் பார்வை யானை, 8

அருளரி யெனத்த ரித்த வாடக வாடை யானை
வருகதி ரெனப்பி றங்கு மகுடகே யூர மாரம்
பொருவில்குண் டலம ணிந்த புதியனை யரசைக் கண்டு
திருநிகர் கிரிகை யாதித் தெரிவைய ரெழுந்து நின்றார். 9

### வசு பீடத்தில் அமர்தல்

மயலறு மவுனி வந்த மன்னனை நோக்கி மன்ன
வுயர்கலி யாண சித்தி யுறுகவென் றினிது வாழ்த்த
நயனுறு நகைபு ரிந்து நாரிய ரிட்ட பீடத்
தியலுட னிருந்தான் கஞ்சத் திருந்தருள் பிரம னேபோல். 10

### கிரிகை வசுவைக் காணல்

பகையிரு டெறுவாள் வேந்தைப் பரிவுறக் கண்ட போதே
நிகரிலாக் கன்னி யென்னு நிகரெழிற் கமல முள்ளே
தகவுறு மிராகம் பெற்றுத் தக்கவா சனைக லந்து
புகலரும் பார்வை யென்னு மளியொடு பொருந்திற் றன்றே. 11

பிறழ்தலா விமையி ரண்டு மலர்ந்திடப் பிறங்கு கன்னத்
துறைமணி குண்ட லப்பே ரொளியினின் றப்பு றம்போய்
நிறைமதி தன்னில் வீழு நிகரரு சகோரம் போல
விறலுடை யிறைவன் மீது வீழ்ந்தன மங்கை பார்வை. 12

அரும்பெற லுலகம் போற்று மரசன்மேல் வீழ்ந்து வீழ்ந்து
திரும்பவு மீண்டு மீண்டு திரிந்தன மங்கை கண்கள்
விரும்புறு தென்றற் றேர்மேல் மேவிய மதனே வாது
சுரும்பெனுங் குணவில் லூடு தொடுகணை போல மாதோ. 13

கன்னிதன் பார்வை சாலக் காவலன் மீது நிற்க
வன்னவன் பார்க்குங் காலை யணிமுகங் கவிழ்ந்து நாணிப்
பின்னரு நோக்கு தற்கே மதிக்குமுட் பெருகு மன்பாற்
றன்னிக ரில்லாக் காம தந்திர வளமீ தன்றே. 14

### மன்மதன் செயல்

உனலரு மன்பென் றேது முரியகங் கணமி சைத்தே
குனிசிலை யிறைவன் கண்ணுங் கோதைதன் கண்ணுங் கூடி
நனியுற வியற்றல் செய்தான் வின்மத னெனுமு பாத்தி
யினிவரு மங்க லத்திற் கீதடை யாள மென்ன. 15

தனுவினு லெழில்சி றந்த தனுமிகத் தளர்ந்து வாடக்
குனிதனுக் குனித்தி னனே குணங்கள்வே றுக மிக்க
வனசறு முளரி தன்னுன் மையன்மா முளரி மல்க
வுனலரும் வீர மார னுஞற்றின னிருவர் பாலும். 16

மாவினு லாவி தன்னை மயக்கிநற் சண்ப கத்தாற்
றுவமே யாக்கி வெய்ய தளவினுல் விளர்ப்பச் செய்து
தாவிய வசோகந் தன்னுற் சோகம துறுத்தி ராக
மோவறத் தளிர்வாள் கொண்டே யுளத்தினைத் துளைத்தான்
[வில்வேள். 17

மஞ்சுவாணி வசுவேந்தனைப் புகழல்

சிற்றிடைப் பெரிய கொங்கைச் சேயிதழ்க் கரிய வுண்கட்
பொற்றொடிச் செங்கை மங்கை புந்தியி னினைவும் வேலாற்
பற்றல ருரந்து ளைக்கும் பார்த்திப னினைவு மோர்ந்து
கற்றுணர் மஞ்சு வாணி காவல னோடு சொல்லும். 18

நலனுறு குவலை யேச நாடிநீ வந்த பண்பாற்
பலபல மெய்து நல்ல பருவமெய் தியதின் றன்றோ
வுலகமித் திரனே கேட்டி யுனையெதிர் கண்ட நன்கா
விலகுற வெங்க ளுள்ளத் திருளகன் றதுமின் றன்றோ. 19

வரநிதி பதியே யுன்றன் மாறில்சந் நிதியி னெங்கட்
கரியதா மேம ராசி யடைந்தது புவன வேந்த!
பொருவரு நீயே வந்திங் கருண்மொழி பொழியப் பெற்றேந்
திருநினைக் காண முன்செய் செழுந்தவம் புகல வற்றோ! 20

அண்ணனீ புரக்கப் பெற்றே மந்நிய ரல்லேங் கண்டா
யெண்ணரு முனது சீர்த்தி யினையிலுன் சற்கு ணங்க
டிண்ணிமை யனைத்தும் பாடி சிறந்தமர் வனப்பா லன்பு
நண்ணுசீ ரெங்கண் மங்கை நற்பொழு தாற்று வேமால். 21

மஞ்சுவாணி கிரிகையின் சிறப்பினை வசுவுக்குக் கூறல்

சேவினற் கிமய மன்பு சிறந்ததொத் துனக்கன் பாகி
மேவுமித் தனிப்பொ ருப்பும் வியன்மணி பலவி னோடு
மாவள முதவுஞ் சுத்தி மதியுமுற் றளித்த கன்னி
காவிநோக் குடைய விந்தக் கன்னிகாண் மன்ன ரேறே. 22

இலகிரி சந்த னப்பூ மிசையல திருத்தாள் செந்தாள்
மலர்புரை கையிற் பற்றாள் வல்லிசா தகத்தை யல்லால்
அலருமந் தாரப் பூவி னன்றிமென் னணைமெய் சேராள்
மலர்சுவை வாயில் வையாள் வான்றருக் கனியை யன்றி. 23

வியந்துமூ வுலகி லுள்ள மிக்கவர் யாரும் போற்ற
வுயர்ந்தகோத் திரத்தில் வந்தா ளொளிரிவ ளன்னை போல
நயந்தரு மமுத சீத நண்ணிய மேனி யுள்ளாள்
வயங்குகெம் பீர முள்ளாண் மானவே லாளன் கண்டி. 24

மலருறை திருவும் போற்றும் வாணுதல் பதமெ டுக்கில்
அலகில்சீர் வேழ மொப்பா ளத்தநன் னயமு முள்ளா
ளிலவித ழுசைக்குந் தோறு மிராகமே யுடையாள் பார்க்கி
னலவறு பதமே யாகி நண்ணுவ ளிவட்கு நேர்யார். 25

உன்னருள் பெற்ற சிந்து நந்தனை யுயர்சீ ரெல்லா
மன்னவிம் முனியன் பென்னு மந்தரா கத்தா லோங்கி
முன்னுற விளங்கிற் றென்ன மொய்குழால் கேண்மோ வென்று
பொன்னுல கரசன் போற்று புரவலன் கட்டு ரைக்கும். 26

வேறு

வசு யோகியைப் புகழ்தல்

சால மாமதன் மந்தி ரங்கொ டளித்த விந்த முனித்தவன்
போல மற்றொரு முனிவர் யாருளர் புகழு தற்கமை வன்கொலோ!
கோல மாகிய வணியி னுக்கணி தருசி றப்புள கோதையைக்
கால மிங்கிது தன்னி லன்பொடு காணு மாறருள் செய்தனன். 27

யோகி வசுவைப் பார்த்துக் கூறல்

இவனை யொத்திடு முயிரி னுக்குரி யார்க ளில்லை யெனக்கிவ
னுவமை யற்றிடு மந்தி ரத்தினி லொண்டொ டித்திரு மங்கைதன்
றவறில் பாவெழு லமுத முண்டு தருக்கி னேமெனு மன்னனை
நவம தாகிய முனிவ னேக்கி நகைத்து நல்லுரை கூறுமால். 28

வான மாகிய வகில மீன்றருள் வனச னுக்குயர் விப்படி
யான வொண்பொரு ளோடுவண்பொருள் கூட்டிலல்ல தடுக்குமோ
வூன மொன்றுமி விகுளை மேவுறு முரைத னக்குயர் பாயிரந்
தானி லங்க முடிந்த தேயறி சற்று மையமி லென்றுபின், 29

யோகி, கிரிகைக்கும் வசுவுக்கும் மணம் நடைபெறும்
எனக் கூறி மறைதல்

வைய கம்புகழ் மன்ன னுக்கு மணங்கி னுக்கும் வளங்கொள்சீர்
மெய்யு றுங்கலி யாண வைபவ மாக வென்று விளம்பிநீண்
மையு ருமணி மனைய கன்று மகிழ்ந்து சுற்றிட மேகியே
துய்ய வண்கனி பூவ ளந்திகழ் சோலை யூடு மறைந்தனன். 30

வேறு

யோகி பழைய உருவத்துடன் வெளிப்படல்

தீதறு காவின் மறைந்து சிறந்த
மாதவ மாகிய மாணுரு மாற்றி
மேதகு முன்னுள வேட முடன்று
னேதரு மன்னமு னெய்யென வந்தான். 31

பாங்கனைக் கண்டு மகளிர் கூறல்

வந்தவ னன்ன வண்மையி னனுஞ்
சந்த முலாவிய தண்மொழி யானும்
புந்தியி லோர்ந்து பொலங்குழை மின்னார்
முந்திவ னுற்ற முனித்தவ னென்றார். 32

நாயகி கான நயந்துறை மன்னன்
வேயென வேவர விட்டன னும்
மாயவ லான்றனை யென்று மனத்தி
னேயம டந்தையர் நிச்சய முற்றார். 33

மலைநிகர் தோளிறை வந்தமை யானே
கலைபயி லுங்கிரி கானன மேவு
நலன்மிக நோக்குமி னன்னுத லீரென்
றிலகுமின் னனவோ ரேந்திழை சொல்ல; 34

கிரிகை வசுவினைக் கண்டு மகிழல்

கனிதரு நாணொடு சென்னி கவிழ்ந்து
வனமுலை மேலணி மாமணி நிழலிற்
சனபதி யாமிறை தன்னுரு நோக்கி
வனிதை கலாமதி வதன மலர்ந்தாள். 35

அதனைக் கண்ட மங்கையொருத்தியின் கூற்று

அங்கவன் காண லறிந்து குயத்தே
தங்கணி நாயக மாமணி தானேற்
பொங்குதல் காணுமி னென்று புகன்றாண்
மங்கை யொருத்தி மகிழ்ந்தனர் மின்னார். 36

கிரிகை நாணமுற்றுச் சினமுடன் எழுதல்

வஞ்சியர் கூறிய மாற்ற முணர்ந்து
வெஞ்சின மோடுயர் நாண மிகுத்துச்
செஞ்சர ணங்கொள் சிலம்பு புலம்ப
மஞ்சுற ழுங்குழன் மங்கை யெழுந்தாள். 37

கிரிகைக் கருகுசெல் படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 397

## 14. கிரிகை நீங்கு படலம்

கிரிகை அவ்விடத்தினின்றும் அகலல்

துன்னு கோபமுற் றிடவெழுந் தோகையு நடிக்க
வுன்ன ரும்பயோ தரநிறை வாலிடை யொசிய
வன்ன மாழ்குறப் புடைசெறி குயிலின மஞ்சக்
கன்னி யென்னுமின் மறைந்தது கனதிரை மறைவில். 1

சிற்றி டைக்கொடி திரைதனின் மறைந்தபின் செயலற்
றுற்று நோக்குறும் விருப்பமே யுளத்திடை யோங்கும்
பற்றி னுலனு ராகநுட் பம்பல பயக்க
மற்று நேரிலாக் கலையுடை மன்னவன் வழங்கும். 2

வண்ண மாகிநெய்த் திருந்ததோர் வணரிருங் கூந்த
றண்ணு லாவுபே ரெழிலியாய்த் தயங்குற விலையோ
கண்ணெ னப்பெயர் பெற்றுலா வியசெழுங் கயலில்
உண்ண யந்தநீ லொளித்திரை யுற்றிட விலையோ. 3

வருந கைச்செழுங் கடலிடை வளங்கெழு நிலவாந்
திரைபி றழ்ந்திட வில்லையோ செழுந்தளி ரதனைவெல்
துருவ வில்லெனும் போற்றிரை யுற்றிட விலையோ
வரிவை போயவண் மறைந்ததே னென்றன னரசன். 4

கன்னி நாணொடு திரையுளே கரந்தனள் பார்க்க
மன்னன் பார்ப்பதற் கெழிற்கள நிமிர்த்தனன் வயங்க
வின்ன பான்மையைக் கூறிடில் வதுவையா யிலங்கி
மன்னு கின்றதென் றுரைத்தன ளாங்கொரு மடந்தை. 5

மதுர மானவிவ் வொலியுடை மடமினூர் தம்மை
விதுநு தற்சிறு கன்னிகை முனிந்தெழின் மிகுத்த
கதிகொ ளன்னைத னன்புறு பாங்கியென் கைத்தா
யெதிர்ந டந்துவந் தருள்வதெப் போதுகொ லெனலும்; 6

கிரிகையைச் செவிலித்தாய் அழைத்துச் செல்லல்

வந்து நின்றுனக் கருஞ்சுப மெய்துவான் மகிழ்வால்
அந்த வான்மல ரளித்தனர் முனிவரு னனைப்பாற்
புந்தி கொண்டினி தளிப்பதற் கழையெனப் புகன்றுள்
செந்த ளிர்க்கொடி வருகவென் றழைத்தனள் செவிலி. 7

வருக வென்றலு மெழுந்திரு கொங்கைமா மலையால்
அருகு நுண்ணிடை நுடங்கநன் னூபுர மலம்பச்
சொருகு மென்குழற் புயன்மலர் மாரியைச் சொரியப்
பொருவி லாவருங் கன்னிகை நடக்குமப் பொழுது; 8

மேய மங்கைய ரெழுந்தொளிர் மின்கரம் பிடியா
நேய மன்னவற் குரைத்தபி னேகென நிறீயித்
தூயை பாலருண் மறந்திடா துறையெனச் சொலித்தாம்
போயி னரெழிற் கன்னிகை தன்னொடு பொருந்தி. 9

வசு கிரிகையை நோக்கியபடியே இருத்தல்

அஞ்ச னத்தைநூற் றனையமெல் லளகமா முகிலைத்
தஞ்ச மென்றுபின் றொடர்ந்திடு சாதக மெனவு
மெஞ்சு றுதனி மலர்களுக் கேகளி யெனவும்
வஞ்சி பின்னரே தொடர்ந்தது மன்னவ னயனம். 10

மங்கை பின்றொடர் மன்னவன் பார்வையை வனத்திற்
றங்கு மென்கொடிக் குழுத்தடை செய்தில தணவாக்
கொங்கு தாழ்குழ லெழிலியென் றுடுறு குளப்புள்
அங்கண் வீசுறுஞ் சிறைவளிப் படப்பட வகன்று. 11

வடுத்த விர்ந்திடு காவினுண் மலர்மண மகற்றிக்
கடுத்த யங்கிய கண்ணிதன் கருங்குழன் மணத்தை
மடுத்த ருந்துதற் காகவே வண்டினந் தொடர்ந்த
வடுத்த டுத்துமன் பார்வைக ளினிதுசென் றுங்கு. 12

மாத ரத்தமே பற்றியுண் மகிழ்வொடு நடக்குங்
கோதில் கன்னியை வாளிறை விடாதுநோக் குகலான்
மேத கும்புனன் மழைசொரிந் திட்டன மிகவு
மாத லானட வாவகை நின்றதா லவன்கண். 13

அரசனைத் திரும்பிப் பார்த்தவாறே கிரிகை செல்லல்

நடையி னேடின மெனத்தொட ரனத்தினை நயந்து
படர்வ தென்னெனத் திரும்பியும் பரிவினுற் பிந்து
மடமி னார்தமை யழைத்திடத் திரும்பியு மதித்தாங்
கடவி னேதனை நோக்குறு நின்றுநின் றரிவை. 14

கேடி றன்கிளிக் களித்திடப் புடைகளிற் கிளர்ந்து
நீட ருக்கனி பறிப்பதற் காகவே நின்றுந்
தேட ளிக்குலம் படிதலாற் றிருப்பியு முகத்தை
யாடல் வேந்தனை நோக்குறு மேகுழி யரிவை. 15

கிரிகை நீங்கு படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 412.

## 15. அரசன் வருந்துறு படலம்

வசு, கிரிகையைப் பலவிடங்களிலும் தேடியலைதல்

இறைவ னுங்கணி யாதபே ராசையா லெழுந்து
நிறைம திக்குளிர் முகத்தியை மனத்துளே நிறுத்தி
யறைம ணிச்சுனை யிடத்தினு மளிவிடா மலர்சூழ்
நறைவ னத்திலும் பிறவினுந் தேடியே நடந்தான். 1

பிண்டி யொண்டளிர் மிகுந்தன விவ்வுழிப் பெரிதுங்
கெண்டை யுண்கணு ளடிச்சுவ டெவணெனக் கிளங்குங்
கண்டு கொங்கொடு துகிரிதழ்க் கன்னிபே சினளோ
வெண்ட யங்குதே ஞெழுகிய திவ்வுழி யெனுமால். 2

திலக வான்றரு மிசையளிக் குலமிகத் திகழ்ந்த
கலக வாட்கண்ணி நோக்கின ளோவெனக் கழறு
நலவ ழைக்குல மலர்ந்தன நகைத்தன ளோவென்
றுலவு மெங்கணுந் தேடுமுள் ளயர்ந்திடு முரவோன். 3

வல்லி நல்லிளந் தளிர்முகை நறுங்கனி மறிமற்
றெல்லு றும்பசுந் தோகைகூஞ் சிறுகுயி லிசைவண்
டொல்லு மவ்வனத் தாசையோ டுலவுபா ரிறைக்குச்
சொல்ல ருந்திரு வுருவமாய்த் தோற்றுமால் யாண்டும். 4

கண்ட னன்செலு மிளங்கொடி தனையெனக் கழறி
மண்டி யேகலுங் கொடிகொலோ வதுவென மயங்கும்
வண்டு வீழ்மலர்க் கொம்மைமின் னுமென மதித்துக்
கொண்டு போகலுஞ் சாகையோ வதுவெனக் குறிக்கும். 5

பூவை பேசுதல் கேட்டவ ணேகலும் பொருமி
யாவி சோருமெம் பூவையன் றென்வன மதனிற்
காவ லன்றனி மின்னுரு வெளிதனைக் கண்டு
பாவை யென்றெடு கோபமெ னுரையெனப் பகரும். 6

வேடொ டுங்கணை யாலளி யோசையான் மெலிந்து
பாடு சூழ்வன மெங்கணுந் தேடியே பரிவற்
றேடு லாந்தொடை யரசன்மீண் டேந்திழை யிருந்த
நாட ருங்கதிர் மனேக்கணுற் றயர்வொடு நவிலும். 7

வேறு

வசு கிரிகையை எண்ணிச் சஞ்சலம் அடைந்து
பாங்கனிடம் கூறல்

நண்பவிம் மணிய கந்தா னுரியின் மையினு லன்னுள்
வண்பெறு முருவந் தீட்டி வைத்தமை யானுங் கீதப்
பண்பல நிரம்ப லானும் பகரங்க ராக வாச
மென்படா துறுத லானு மென்னகம் போன்ற மாதோ. 8

எத்தனைக் காலந் தீர்த்த யாத்திரை புரிந்த வோநற்
சுத்தமோ டன்னங் கன்னித் தோகைபின் றிரியப் பெற்ற
வெத்தனை பலங்க ளுட்கொண் டிருந்தவோ பசுஞ்சு கங்கண்
முத்தமிட் டணையப் பெற்ற மொய்குழல் கையி னனே. 9

*அரிகண்மே லான மார்க்கத் தடைந்துபூ முழுதுஞ் சுற்றி*
*வருதலா லன்றோ மின்பான் மணங்கொளப் பெற்ற தோகை*
*விரியுமா தவத்தி ஊத்த மெய்ம்மையா லன்றோ கோதைக்*
*கருமுகி றனைக்கொண் டாடிக் களித்தன வென்று யிர்த்தான்.* 10

*பாடிய விடத்தைக் கண்டு பகரரு மிராகங் கொண்டா*
*னீடிறை மறைவிற் கன்னி நின்றுழித் தம்ம டைந்தான்*
*வாடுநுண் ணிடையா ரோடி மறித்திடு முழையை நோக்கி*
*யேடவி ழலங்கற் றோளா னெண்ணில்சஞ் சலத்தோ டுற்றான்.* 11

கிரிகை "உன்னை மணப்பாள்" என்று வசுவுக்குப்
பாங்கன் உறுதி கூறல்

*இப்படி யிறைவன் காம வாளியா லினையுங் காலை*
*வைப்பெனு மன்பன் சேர்ந்து மன்னநீ நைவ தென்னை*
*யொப்பிலங் கனையர்க் கெல்லா நீமத னுன்னைக் கண்ட*
*துப்பிதழ்க் கன்னி நெஞ்சை வெ...ள் வானோ சொல்லாய்.* 12

*கன்னிதன் தந்தை வீழ்ந்துன் கழல்பணி பவனன் றோமற்*
*றன்னையுன் றிறலி னீரா லானற்சீ வனமுண் டானேண்*
*மின்னனை யாருன் காதை விரியவா மின்னுன் சீரே*
*யுன்னுவ ளவளை மேவி யுறுவதற் கைய முண்டோ.* 13

பாங்கனால் ஆறுதல் பெற்ற வசுவேந்தன்
தன் அரண்மனையை அடைதல்

*பணிமொழி கமல பாணி பற்றுத லுண்மை தானே*
*துணிவொடு வாரா யென்று தோமிலா நண்பன் கூறத்*
*தணிவறு காம வாரி தன்னிலே சிந்தை மூழ்க*
*மணியுலம் புரையுந் தோளான் மயக்கமி லவணி னுற்றான்.* 14

*வரைமிசை நின்றி ரங்கி மதியுடைப் பாக னுய்த்த*
*கரிமிசை யிவர்ந்து மற்றக் கரிகரங் கும்பங் கன்னி*
*யிருதொடை கொங்கை யர்க்கண் டிலங்குவெண் கவரிக் கன்னந்*
*தருமிள வளியால் வேர்வை தணிந்துபா ரிறைவன் போனான்.* 15

*மின்னணி வாளுந் துங்க வேழநன் னடையும் வாய்ந்த*
*தன்னிகர் தானைச் சீருந் தார்புனை கூந்தன் மாவும்*
*பன்னரு முருவத் தேரும் பாரினுக் கிறைபு றத்து*
*நன்னிலை யகத்துங் கண்டு நகர்வயிற் சென்றான் மாதோ.* 16

*எண்டிசை யிபமும் போற்று மிபத்தனை யிரங்கி நின்று*
*மண்டலா திபரைச் சீர்சான் மந்திரத் தலைவர் தம்மைத்*
*திண்டிறல் வீரர் தம்மைத் திகழ்வுற நிறுத்தி மற்றோர்*
*தண்டரு சோதி வீசுந் தனிமணி மனைக்க ணுற்றான்.* 17

வசு கிரிகையைப் பற்றியே எண்ணியிருத்தல்

தகளியில் விளக்க மேந்து தையலர் தம்மைப் பாரான்
மகளிர்வந் தமுத மூண்க வருகென வழைப்ப வாரான்
புகராறு திவ்வி யாழ்க்கைப் பூவையர் பாடல் கேளா
னகமலர் தன்னிற் கன்னித் தேறல்பெற் றயர்த லானே. 18

நகமக ளோடு கூடி நயந்தேக மாகு லன்றிப்
பகைபுரி மதனை வெல்லப் படாதெனப் பாதி யாகு
மகிழ்வுறு சிந்து மின்னை மார்பின்மேல் வைத்தா லன்றி
யிகனிசா சரரை வேற லெளிதுகொ லெனமா லாகும். 19

மதுரவா ணியைமுன் கண்டா லன்றிமா மலரி னைக்கி
ழிதமுறப் படுத்த வற்றோ வென்றுநாற் றிசையு நோக்கு
முதிரிர வகலுங் கொல்லோ கன்னிகை மூண்ட கத்தை
யெதிர்கொளப் பிடித்தா லன்றி யென்றுதா பத்தை யெய்தும். 20

நதிமக ளவய வத்தி னன்கினை யுன்னி யுன்னிப்
புதியவந் நதிப்பி றந்த போதுமுத் தென்னி னம்மின்
வதனமு நகையு மென்று மகிழுவன் வதிந்து சற்றே
மதியைமற் றொன்றி னுந்தான் வைத்திலன் மன்னன் மன்னோ. 21

வஞ்சியே ரமுதந் தன்னை மலியவுட் கொண்ட வாற்றாற்
றஞ்சுத லின்றி வேந்தன் றாயகண் ணிருந்த வன்னு
னெஞ்சவள் கொங்கை மேரு கிரிமிசை நிலைத்த றன்னல்
அஞ்சொலி னுரைக்க வொண்ணு வணங்கொடு மேவிற் றன்றே. 22

மன்மத பாணத்தினுல் வசு பலவாறு துன்புறல்

விரிமல ரிறைத்த லானும் விழைதரு குணத்தி னானும்
வருசுக வாக்கி னானு மதன்றிருத் தொடர்ப ளித்துத்
தெரிந்தவ ரமுதங் காட்டித் தன்வசஞ் செய்து கொண்டா
னரசனு முறைவே றின்றி யதிற்பர வசனே யானான். 23

மதனுடைச் செங்கோ லுக்கு மனத்தினை யளித்து நின்ற
துதியுறு மரசர் கோமான் றுலைவிறன் சிந்தி போல
விதுநிக ரென்ன யார்க்கு மெழுதொணு வழகு டைத்தாம்
புதியதன் னங்க மெங்கும் விளர்த்தனன் பொலிவி னோடு. 24

வியனுறு மலையைக் காலான் மிகவெறிந் தவனைக் கன்னி
குயமலை யளித்த துன்பக் கொடுமையை யளக்க வற்றோ
வுயருமந் தரமார்க் கத்தி னுறுமவன் றனைநு டங்கி
யயரிடை விசும்ப ளித்த துயரினுக் கவதி யுண்டோ. 25

தரைவிரி வெங்கும் போர்த்த சலத்தினை யடக்கி னானே
விரைவொடு கன்னி யுந்தி மடுச்சுழ லவித்த தன்றே
விரவற வளவி லாப்பொன் னீந்தருள் வசுவை யந்த
வரைதரு மொருபொன் னுசை மருவுறப் புரிந்த தம்மா. 26

என்றறி சயித்து மிக்க விரைவனந் தரங்க மாகி
நின்றவேள் கன்னி தன்னை நிகரிலா விறைக ருத்தா
டொன்றிடப் புரிந்த பின்ன ரோங்குதன் கணையி னலத்
துன்றெறிற் கன்னி மீதும் போர்செயத் தொடங்கி னானல். 27

அரசன் வருந்துறு படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 439.

## 16. கிரிகை வருந்துறு படலம்

மதனன் கிரிகையை வருத்தல்

கன்னி மங்கையை நிலத்திடை யெடுத்திடக் கரைத்து
மன்னு மாமுறை யகத்துளை யாம்படி வரைவித்
துன்னு கேள்வியற் படுத்திமற் றுசையா முபாத்தி
துன்னு சித்தச சாந்திரம் பண்ணினன் றெருத்து. 1

பம்ப வேடொடு மாங்கனை யாலுளம் பதைத்துத்
தம்பி யென்றுமின் றுயிடத் துதித்ததா மரையை
நம்பிச் சார்தலுந் துரந்தது ஞாதியுள் ளவர்க்கு
வெம்பு தீப்பிறி துளதுகொல் வருத்திட விரைந்து. 2

மருவு நண்புனல் வாக்கொடு வளமையுஞ் சிறக்கப்
பொருவி றந்தைதா யிடத்திலெல் நேரமும் பொருந்து
மிருபி றப்புடை யினங்களை வெறுத்தன ளிருந்தா
ளரிய சீர்வசு மேலுறு மாசையா லரிவை. 3

வசையி லாதமென் னடைகொடு வருமிள வளிக்கு
மசைவி லாக்கிரி நந்தனை சாலவு மலைந்தா
ளிசையி லங்குதான் வரைமக ளெனவிருந் தாலும்
வசுவி ருப்புறி லற்பமன் றேமதி மயங்கி. 4

வினைக்கொ டுங்கன லவிக்குமா றெனமனை விரைந்து
மனத்தி னூடுபுக் குள்ளறிந் தேதனை மணந்த
கனத்த வெற்பினுக் குரைத்திடக் கருதியே வருதல்
எனக்க விழ்ந்தது மின்கணீர் கொங்கையி னிடையே. 5

கணைக்க ணுண்மயல் வெம்மையை கண்டரு ணதித்தா
யணைத்த லாலறல் சுவறின ளாமல திருந்தால்
இணர்ப்ப சுங்கொடி தாமரை யினியகற் பூர
மணற்கு லந்திரு மேனிமேற் செறிந்திட வருமோ. 6

வெய்ய தாதுவுட் படுத்தியொண் பாவனை விரித்து
மையில் வேளிர தத்தினை வலியுறப் புரிந்து
தையல் பால்வசுத் தருதலும் பேசில டனித்தாள்
செய்ய பூணுட னெவரையு மதித்திலள் சிறிதும். 7

உததி யுட்புகுந் தொருகிரி யொளித்திடப் புரிந்த
சதமு னைப்படை யெத்தனை யிலையெனச் சயத்தான்
மதன வேளொரு முனைப்படை மங்கைதன் முலையாங்
கதிர்கொண் மேருவை யழுத்திய துண்கணீர்க் கடலில். 8

கூர்வி டாதமை விழியெனு மிருகருங் குருவி
மார்பி னின்றிட லோர்ந்துளே வசுப்பொருந் துதல்கண்
டார்வ மோடொழி வற்றவெங் கருவிகொண் டகலாப்
போர்வ சந்தவே டன்கையாற் றுளைத்தனன் புகுந்து. 9

விரவி நாடொறு மோகவெங் கோடைதான் மிகலாற்
புரையி லாநதி கன்னிகை யிளைத்தது புகறற்
கரிது காணுரை யின்றியே யகன்றதங் கலையு
மருகி யேயருஞ் சீவன மற்பமா யினதால். 10

தளர கத்துவேள் விடுத்தலுந் தனிவிசைத் தெழுந்து
வளர்தென் காலென வந்தது வனிதைநெட் டுயிர்ப்புக்
கிளரு யிர்ப்பினுக் கஞ்சியோ கெழுந்தன மேரு
முளரி யங்கொடிப் பணியினுன் மூடிக்கொண் டதுவே. 11

மேருத் தீயினுற் கரைந்தொழு குதலென விரவும்
வேரித் தாதுட னொழுகிய தணிமுலை வெயர்வை
பாரக் கொங்கைமே லெழுந்துதிர் வெயர்வையம் பாவை
காரத் தாமரீ ருகியே யடைந்தது நுரையாய். 12

முத்து மாலையென் றுளிருடுச் சிதைதலு முடுகிச்
சித்த மோகமா திமிரம்வந் துறுதலுஞ் சிறந்த
சுத்த மாகுமெய்த் தளி[ர்]க்கொடி வரிவிழித் துணையா
மெய்த்த தாமரை யலர்ந்தல ராமலே யிருந்த. 13

வேறு

கன்னியோர் வனத்தில் வேட்டை யாடினன் கலக்கி நீரை
வன்னியை யெங்கு மூட்டி வான்கலை சோர யானை
யின்னடை பொழிய வெய்ய சித்திர காய மேங்கி
யங்கிலை சாய வேட னம்பினைச் சொரிந்து மாதோ. 14

பதிகுண சாலந் தன்னை யாசையிற் பரப்பி வீரம்
பொதிசிலை வேடன் வாளி பொழிந்தனன் மரைக லங்க
வதிகுரு கோடக் கான மாக்கண மெழுந்து வீழ
வெதிரில்கோ ளரிது வண்டாங் கெய்ப்பமான் மயங்கி நின்றே. 15

இளநறுந் தீவ ளிக்கு மிகுளையென் கோம ளிக்கும்
வளர்மதி தருமொ ளிக்கும் விடநிகர் வரிய ளிக்குங்
கிளர்மத னிவர்கி ளிக்குங் கெழுமிம சலத்து ளிக்கு
முளமொடு வடிவு சோர்வுற் றெண்டொடித் தையல் கூறும். 16

மன்மத பாணத்தினுல் வருந்தும் கிரிகை கூற்று

நிலைதள ராத தந்தை நெறியொடு சிறிது மில்லே
னலைபடு தாயைப் போல நிலை[யிலி] யானே னந்தோ
குலமுறு மீன்ற தந்தை குலம்பெறு மகளிர் தம்மைப்
புலமையோர் சொல்வ ரன்றோ புண்ணிய வதிக ளென்று. 17

என்னுடன் பிறந்த முத்தி னிலங்கலந் தூசி மேனின்
றுன்னருந் தவஞ்செய் தண்ண லுரத்தினிற் சேர்ந்த தாராய்
மன்னுமப் படியா னெய்த மாதவஞ் செய்தே னில்லை
யின்னலுஞ் சுகமு மெய்த லூழின தியற்கை யன்றோ! 18

சிந்தையி னினைத்த வெல்லாந் திகழ்வுற முடித்து நல்கு
தந்தைதா யிடத்து வந்து சலித்திலே னலைகின் றேனுல்
அந்தமில் பங்க முற்றே யலைபடு புனல்யாற் றுக்குஞ்
சந்ததங் கடின மான கல்லுக்குஞ் சனித்திவ் வாறு. 19

மாயைமா முனியேன் வந்தான் வந்திருந் தாலென் றுய்ய
மேயசீர் வசுவின் பேரேன் விளம்பினன் விளம்பி னுலென்
னேயபொய் மந்தி ரங்கொண் டேனழைத் தனன ழைத்தால்
நேயமுற் றயர்வ தேன்யா னென்றுதன் னிலைத ளர்ந்தாள். 20

என்னைமற் றீன்ற வன்னை குடிலம தென்று தீரு
முன்னறி தாமென் றந்தை யுள்ளமென் றிளகு மென்பால்
மன்னிய வெய்ய மோக வாரியென் றகலு மென்று
தன்னிடை யெனமெ லிந்து தளர்ந்தன ளங்க மெங்கும். 21

கிரிகை வருந்துறு படலம் முற்றும்.

ஆகத் திருவிருத்தம் 460.

## 17. பொழில்புகு படலம்

கிரிகை துயராற்றுதற்குப் பொழிலில் புகுதல்

இத்துய ரீண்டிருந்தா லிகந்திடா தென்று சாலப்
பொய்த்தநுண் ணிடையாள் சூழும் பூவையர் தமக்கொ ளித்து
மைத்தவிழ் காவிற் புக்காண் மதனவே ளளியி னேறு
முத்தம துரக தங்க ளுளக்கதி சயம் விளைக்க.

வேறு

விரகவேதனை பொறுக்காத கிரிகையின் நினைவு

கயிரவப்பூம் பொடியுருவிற் புனைகோ செய்ய
கமலத்தேன் கொடுகண்ணீர் துடைக்கோ வேளின்
சயநிகர்மாந் தளிரனலைப் பார்க்கோ போதிற்
றவழ்தென்ற லுடனுயிர்ப்பை விடுகோ கூவுங்
குயிலொலியைச் செவிமடுத்துக் கேட்கோ வென்று
கூறருமைம் பூதத்தை யைம்பூ தத்தோ
டியல்புபடப் பொருத்துதற்கு நினைத்தாள் காம
னெனும்பூதம் பிடித்துவருத் துதலாற் றூது.

பாங்கியர் சோலையில் கிரிகையைக் காணல்

இப்படிதன் னுளத்துன்னி வல்லி சூழு
மிளஞ்சூத மலரிணைமோந் திருந்தாள் வாடி
மைப்படுகட் பாங்கியர்கள் யாருஞ் சோதி
மணிமனையின் மங்கைதனைக் காணா ராகித்
தப்பினள்போ யினளெங்கோ வென்று சாலத்
தளர்ந்துதனித் தனித்தேடிக் கண்டார் காமன்
செப்பருமா யுதசால சாலை யாகி
செறியுமணந் திசைதோறுங் கமழுங் காவில்.

கிரிகையைக் கண்ட பாங்கியர் கூற்று

எங்களைநீ கணப்பொழுதும் பிரிவா யல்லை
யெப்படிவந் தாய்மலர்த்தே னொழுகு மாற்றிற்
பொங்குமலர்த் தாதுறுத்த மென்மை யாமுன்
பொற்பாதம் பொறுத்தனவோ வறியாக் கன்னி
யங்கனையா தலில்வந்தாய் வளர்த்த வன்னைக்
காகாத கணத்தொடுபல் லவக்க ணங்கள்
பங்கமுறு மலர்க்கூட்டங் கள்ளுண் கூட்டம்
பரவியவிவ் வனத்துறுத லியல்போ பாவாய்.

பலபங்கஞ் செயுங்கிளிக்குச் சினத்தீ மூக்கிற்
பயின்றிருக்கு மாகாள மூர்த்தி யாகி
யுலவுங்கோ கிலங்களுக்குச் சினத்தி யென்று
மொழிவின்றி வழிகாட்டுஞ் செறிபூங் கொம்பின்
மலர்வாசங் களைக்கவர்ந்து கள்ளுண் டாடும்
வரியளிகட் குடன்முழுதும் மலினம் போகா
விலகதரக் கோவையுங்கைத் தளிரு மொன்ற
வெழில்வதன வனசமுங்கொண் டெய்த லாமே. 5

மிக்ககுரு வுக்ககிதஞ் செய்தோ னுக்கு
மிகத்தணித்த வேதமொழி நல்லார்க் கொல்லு
மிக்கனித னவன்படைபூப் பொருளை யெல்லா
மெழுந்துகவர் தென்றலுங்கள் ளருந்து வண்டுந்
தக்கவிவற் றொடுமஞ்சா மிசைகொள் புள்ளுஞ்
சாருமிவ ணுறலாமோ தூய நல்லார்
மைக்கருங்கட் பவளவிதழ்க் கோதாய் கல்லின்
மகளாத லால்வந்தாய் தனியே யந்தோ. 6

வேறு

பாங்கியர் கிரிகையின் துயரை மாற்றத்
தேறுதல் கூறல்

என்று கனிவாய் மின்னனையர்
யாருங் கூடி நனிதூற்றி
மன்றல் கமழோர் வெண்கமலக்
கலத்தி னறைதாழ் மலரென்னுஞ்
சொன்றி சொரிந்து றவரும்பை
விளக்கா யேற்றித் துடியிடைமுன்
சென்று சுற்றி யசிரி
சேனைக் கனித்தார் செறிவோடும். 7

அப்போ தொருமென் மொழியாள்வந்
தளிக்குங் கிளிக்கும் பயந்தனைகொல்
செப்போ டுறழு முலையாய்நீ
தெளிவா யொன்றும் பேசுகிலை
யெப்போ தும்போற் பார்த்தருள்கின்
றிலைநின் னமுத மொழிதனக்கு
மைப்போர் விழிக்குந் தோற்றனமற்
றவைகா ணென்றாள் மகிழ்வோடும். 8

சுருதி யிசைக்குந் தொழின்மேவி
யரியென் றுரைக்குந் தொல்பெயரின்
மருவு மாது காகுலமு
மாசில் பதுமா தனத்திருந்து

அரிய பிரம யோகமுறு
மஞ்ச கணமும் பூநீருண்
டுரிய தவஞ்செய் தனபிறரை
வருத்தா வென்று ளொருமாது. 9

திருந்து வன்னி யாகியுறுஞ்
சுகசந் ததியுந் திகழ்ந்தாயைப்
பரிந்து பெருமா தவவரத்தாற்
பெற்று வாக்கு வனப்பிரியம்
பொருந்து கனமு மெதிர்கண்ட
புரையில் கனிக ளிளந்தளிர்க
ளருந்தி மேலா நெறியடைந்த
வஞ்சே லென்று ளொருமாது. 10

மரைக்கு மதியுற் பலந்தனக்குப்
பரிதி மதிக்குந் தென்றலுக்குந்
தருக்கு பணிக்கொள் கரியகுயி
றனக்குக் கொடிய கோவசனி
விருத்த மனங்கற் குயர்சோதி
விடுபே ரங்க ராகவயிர
முரைக்கி லொழியா தளரேலென்
றுரைத்தா ளொருத்தி மின்னனையாள். 11

கலைமா தனைய வனிதாயுன்
கண்ணு ளேக்கு வதனமெடுத்
துலவா வரங்க ளினைத்தபடிக்
குதவிப் புரத்தி யெனத்துதித்து
சிலைவேள் பாத நறுமலரிற்
செந்தா மரைப்பூ முதலாய
மலரா லருச்சித் திறைஞ்சுதும்யாம்
வருகென் றெடுத்தா ளொருமாது. 12

ஒளிர்பைங் கோதை மறுமாற்ற
மொன்று முரையா தணைத்துவரு
நளின முகமேற் சாய்த்தெழுந்து
நவிற்றற் கரிய வுயிர்ப்பெறிந்து
மளியி னிருபா னெருங்கிவரு
மன்ன மனையார் தமைப்பார்த்தும்
வெளிநுண் மருங்கு றுவண்டொசிய
மெல்ல நடந்து வந்தனளால். 13

வதன மதிசெந் தாமரையை
வகுத்த விரகா னலந்தளிர்வாய்க்
கதிரை யொழிக்க நெட்டுயிர்ப்பே
கரிய வரியை துரத்தவடி

வதனி வியற்கை நானமண
மலகில் கிளியை யொதுக்கமதன்
புதியே மயலே துணையாகப்
பொழின்மா மருகி னடந்தனளால். 14

கிரிகைக்குப் பாங்கியர் பொழில்வளங் கூறல்

காதங் கமழு மிளஞ்சோலைக்
கடிமா மலரின் வளமனைத்து
மேதந் தவிர்ந்த வெழில்வனிதைக்
கினிமை பொருந்தக் காட்டிநயந்
தோதும் பொழுது போமென[வே]
[யருகிற்] றுன்னி யொளிர்மகளிர்
தாதொன் றியகா வலங்காரத்
தன்மை முழுதுஞ் சாற்றுவரால். 15

உருவ மில்லார்க் கொளிர்கரண
முலவு முமைக்கு யாவர்க்குப்
பொருவி லத்தார் வெறியுடைய
புண்ட ரீகக் கினியகுணம்
விரவு சிறைமே வினத்தினுக்கு
வேண்டு பலங்கள் கொடுத்தருளு
மருமா தவசந் நதிப்பொழிலி
னெழிலைப் பாரா யமுதன்னாய்! 16

பூவா திருந்த கொம்புகடாம்
பூத்த வளமு மகிழ்வினுட
னேவா தினிய கால்வரமற்
றறுகா லினங்க ளுலவியல்புங்
காவா யுவந்தே னன்மாவிற்
செழுந்தேன் கலந்த பொலிவுமெழிற்
பாவா யன்னத் தொடுகீரம்
பயின்ற நலமும் பார்த்தியால். 17

வேறு

செந்தளிர்த் துவசஞ் சூழ்வேள் சேகரத் தேரிற் பூந்தா
ணந்தமா வடபீ ணித்த னறுங்கொடி யின்னார் நாடி
யந்தமா யெறிந்து நின்று நனிவிளை யாடு கின்ற
பைந்தளிர் மருப்பந் தென்னப் பசுங்கிளி யுலவல் பாராய். 18

வரமத னமைச்சாந் தென்றல் மலர்வன தேச நல்கு
பொருவில்சண் பகப்போ தான புகலரும் பொன்னை மாறுப்
பரிமள வணிகனைக் கொண் டெண்ணவே படுமிப் போதங்
கரியெனு மலினர் தம்மை யகற்றுதல் பாராய் மின்னே. 19

மலர்வனந் தன்னிற் பன்னாண் மவுனமா யிருந்து நோற்றுங்
கலகிலம் மாத வன்ற னருளினால் வாக்குப் பெற்றுத்
தொலைவிலாக் குயில்க ளஞ்சாஞ் சுருதியி னோடு மங்க
ணிலகிய செயலை மாறா வெழிற்பசுங் கொடியே பாராய். 20

மருவலர் நகத்த டைந்து வைகுறப் புரிதென் காலை
முருகவிழ் சண்ப கப்போ தெனும்பொனின் மூழ்கப் பண்ணிக்
கரியநன் னாக மேற்றிக் கருங்குயிற் காள மார்ப்பப்
பரிவுறு வசந்தன் காவில் வலம்புரி வித்தல் பாராய். 21

வேறு

அனங்கவே டனது காரிய கருத்தா
வாகிய வசந்தன்மெல் லியரை
யினைந்திடப் புரிவுந் தூர்த்தர்பா லுள்ள
விரும்பொருள் கவர்ந்துமுத் திரைமேற்
புனைந்திடக் கருதி விளக்கினிற் பிடித்த
புத்தரக் குருகிவீழ் வதுபோல்
வனம்பெறு மளிசெம் மலரிடை நுகர்ந்த
மதுத்தனை யுமிழ்தல்பார் மயிலே. 22

வண்டெனும் விடன்மே லரிசன நிறந்தான்
வனசமெல் மலரினை யணைந்த
தண்டலில் குறிபோ லிருத்தலு மதைப்பூந்
தாதெனுங் கலையினான் மறைத்துக்
கொண்டுவந் தூடு பேடுநம் பிக்கை
கொள்ளவேள் கணைகளைத் தொடுதல்
கண்டனை கொல்லோ பலகொடி களைப்போய்க்
கலப்பவ னீதறி கிலனோ. 23

தரையிடை புதைத்த திருவுள வனசந்
தாமரைக் கனவன மதனில்
உருமெலி பொழுது வாளிறை கரமுத்
திரைதனை யொல்லெனக் காட்டி
விரிதர விளக்கம் புரிந்தபின் கொடுத்த
மேதகு வனசரா கத்தை
வரைபுரை பெருமன் மாத்தளிர்க் கையிலே
வளிமக வளித்தல்பார் மயிலே. 24

வாய்ந்தகற் பூரக் கதலியின் மடலாம்
வங்கமென் மதுகர வணிகர்
பூந்துகட் டவின் மதுக்கட னீந்திப்
புகுந்திடப் பாளிதந் தனைக்கொண்

டாய்ந்தபுன் ஞக வரும்பெனுந் தரள
    மாதிய ராசியை நிரம்ப
வீந்துசிற் றனில மெனும்பெயர்த் தரக
    னிசைப்பதை யிளங்கொடி பாராய். 25

பார்பசுங் கிளியுன் மொழிக்கிணை யாகும்
    படிக்குமா துளங்கனிக் கனவி
னேர்பெற முகம்வைத் தருந்தவம் புரிந்து
    நின்றது நிலையினெப் படிதா
ஞேர்தலை கீழாய் நிற்பினு மதனுக்
    குன்மொழி கவர்மதி யுளதோ
சார்தரு மதுசெங் கோவையங் கனியைத்
    தனதுவாய் வைப்பதா தலினல். 26

சங்கரன் றனைமுன் னீத்தது தவிர்க்கத்
    தன்பொடி நீறுமேற் றரித்துப்
பொங்கிசை யளியா மூ[ரு]த்திர மணியும்
    புனைந்துவெங் கடுமிசை யிருந்து
திங்கணன் னுதலாய் கைதைநோன் பியற்று
    செயலினைக் கண்டுயிர்க் குயிரா
யெங்கணு முறையெண் மூர்த்திமா விடையி
    னெழுந்தரு டன்மைநீ பாராய். 27

அளவில்பூம் படைகள் காமவே டனக்குண்
    டவற்றினுட் கேதகைப் படையின்
கிளர்தரு மனிலம் படினுமம் மதனைக்
    கேடுபட் டிடவிழித் தெரித்த
வளர்திறற் பரம சிவன்றலை நடுக்க
    முற்றிடுங் காணதின் வலியைத்
தளரிடைக் கொடியே யுரைத்திடுந் தகைத்தோ
    தையலர் தம்மையென் செய்தே. 28

நோக்கிட வுதைக்கப் பாடமே லணைக்க
    நுவன்றிட முத்தமிட் டருள
தேக்குநீ ருமிழ மோந்திடத் தொடமுன்
    சிரித்திட மலர்களைத் தருங்கா
ஞக்கமார் திலகஞ் செயலைமா தவியே
    யருங்குராக் கோங்குசண் பகமே
மேக்குயர் வகுள நொச்சின்மா வமைநீ
    மென்மலர் கொய்திடாய் மயிலே. 29

மகளிர் பல்வேறு மலர்களைக் கொய்தல்

என்றுமென் மொழியார் மென்மொழி தனக்காங்
இளவனத் தணிபல காட்டித்
தென்றல்வந் துடற்று வகைதமிற் கருதித்
திகழ்தரு கரியபன் னகத்தை
யொன்றிடும் படிபின் னிறுத்திய வியல்போ
லுயர்குழல் வேணிகள் பிறழ
மன்றலம் பலபூக் கொய்திட முயன்றார்
மணிவளை கலின்கலி னெனவே. 30

வேறு

மன்னு வாசத் தளவின் மலரையோர்
கன்னி நின்றுதன் கைகொடு கொய்குதல்
என்ன கைக்குநீ ரீண்டெதி ரோவெனு
வுன்னி மற்றவை கொய்திட லொக்குமால். 31

திலக மானதை நோக்கவோர் செய்யிழை
மலர்நி றைந்தது கண்டொரு வாணுதல்
இலக வேநகைத் தெய்தலு முன்னுறு
நலவ ழைக்குலம் பூத்தது நாண்மலர். 32

மாதொ ருத்தி மதுநிறை சண்பகப்
போது கொய்ததை மோந்தனள் பொற்புறக்
கோதின் மூக்கொடு கூடிப் பகைபிரித்
தேத மில்லுற வாக்குத லென்னவே. 33

மல்லி கைத்துணர் கொய்தொரு வாணுதன்
மெல்ல ருங்குழன் மீது செறித்தன
ளல்லி னூடு பெயர்கில வாயுறு
மெல்லு டுக்கண மென்ன விளங்கவே. 34

பொழில்புகு படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 494.

## 18. தடாகப் படலம்

இவ்வகை மலர்கொய் தெழில்பழுத் தொழுகு
மிலவிதழ் பணைமுலைக் கரிய
மைவரு குழலார் குழுமிவண் டுளர்ந்த
மலருமொண் மருவிலா மலரும்

பெய்வடி பசுந்தா தின்றிய மரும
கற்றியோர் பெறுமலர் சிறந்த
செவ்விதி னெடுத்துக் கொண்டனர் மதனைத்
திகழுருச் சனைபுரி வதற்கே. 1

மகளிர் மதனபூசை செய்தற்குக்
கிரிகையை யழைத்துச் செல்லல்

மலர்மணங் களைக்கூட் டுண்டனம் பசிய
வல்லியை யறுத்தனங் கனிக
ளலகில பறித்தேம் பிரசமுற் றினமா
லரிவைமீர் தென்றலுங் குயிலும்
பலபல கிளியு மளியும்வந் தணங்கு
படுத்துமிங் கினியிலா தணங்கைப்
புலனுற வழைத்துப் போதுமவ் வனங்க
பூசனை புரிகவென் றகன்றார். 2

செல்லும் வழியில் ஒரு பொய்கையைக் காணுதல்

ஆயிடை யகன்ற கனிமொழித் துவர்வா
யரிவையர் கண்டனர் கமலத்
தூயசெம் மலர்வீழ் தேமியங் குருகின்
றோகைமேற் பறந்தெழு மளியுங்
காயனன் மிசையே யுகுத்திடு பொருளுங்
கடிதெழப் புகையுமாய்த் திகழ்ந்து
நேயவெண் மகஞ்செய் குண்டமொத் தளகை
நெடுந்தட மொத்ததண் டடத்தை. 3

வேறு

மகளிர் கண்ட பொய்கைக் காட்சிகள்

அறமுடைத் திம்ம யன்ற னறிவெனப் புனித மாகி
பெறலரு மன்னேன் கல்விப் பீடுபோ னிறைந்த வன்கொண்
மறுவிலொண் பாடல் போல மலரலங் காரம் பெற்று
நறைகமழ்ந் திலங்கும் பொய்கை நலம்பல நாடி நின்றார். 4

விரவுசூர் மகளிர் தங்கள் மெய்யெழில் காண வாவிப்
பொருவில்சீ ராடி தன்னை விளக்குறப் பொடியு திர்த்தாங்
குரியகூ லத்த ருக்க ணுறுமல ருகுத்த தாதுத்
திரையினு லெங்கும் போர்த்த சிறப்பினை மகிழ்ந்து கண்டார். 5

விரிபொழி லிடைச்ச ரித்த மெய்யிளைப் பொழியக் கூலத்
தருநறுந் தளிரால் வீசிக் கொடுமிளிர் தம்மு கங்கள்
வருமதி யென்று சோம மணிப்படி யுகுத்த வாரி
கரைபுரண் டொழுகுந் தன்மை கண்டனர் நின்று ராங்கு. 6

புள்ளொலி யியங்க ளார்ப்ப புகலளி கீதம் பாட
முள்ளரை முளரிச் செங்கேழ் முகமலர்ந் தலைமென் கையால்
வள்ளுறைப் பொறியி றைத்து வாவியென் றேது மாது
மெள்ளவொண் கரைமேல் வந்து வியந்தெதிர் கோடல் கண்டார்.7

கரைத்தரு வுகுத்த போதாற் கமழ்தரு நறைமி குத்த
திரைத்தட நன்னீர் பாய்ந்து செழுத்தமல் லிகையொண் முல்லை
விரைத்தண்மா தவிசெவ் வந்தி விதுமணி யால வாலத்
துரைக்கரு மலரோ டோங்கி யுறுமெழில் பார்த்து நின்றார். 8

நடுவினிற் பொகுடு தட்டாய் நறும்பொடிப் புனைசெம் பட்டாய்
ஒடிவில்சீ ருளைப்பொற் றூணு யுடைமரைத் திருத்தே ரின்கீழ்க்
கொடியெனு நெடிய வச்சிற் கோதிலா விருபு றத்தும்
வடிவுடை யிரண்டு நேமி நேமியாய் வயங்கல் கண்டார். 9

விரகம தெவர்க்கு நல்கு வேளெனு வேதா வேற
விரசதக் கலினம் பூட்டு மிவுளிபோற் களமேற் றந்து
மருவுற மரைமுட் டாளை வாயினிற் கவர்ந்து கொண்டு
பொருவற வைகுந் துங்கப் பொலிவுடை யெகினங் கண்டார். 10

கனலிதன் சகாயந் தன்னாற் கமலவா தனத்திற் செம்மை
யனன்மிசை யிருத்த றானே யங்கமா மலின நீங்கி
யுனலறு மினிய பொற்றே சுற்றதொத் ததனின் மேவு
தனைநிகர் தாது மூழ்கி வருமளி தன்னைக் கண்டார். 11

சுழியரு கினிய கெண்டை துளவலை வனசப் போதி
னெழிலளி வீழ்ந்து வீழ்ந்தாங் கெழுதலைத் தடமென் மங்கை
விழைதரு பொன்னோ லைப்பால் விழிக்கடை புரளக் கையாற்
பொழிகதிர் மணியம் மானை யாடல்போல் பொலியக் கண்டார். 12

தடமக ணன்னீர் வாழ்வு தணந்திடா துறைவான் முன்னிக்
கொடுதிரு நோன்பி யற்றக் குமுதமென் கனலு மோசை
யடையளிப் புகையும் பாசிச் சமிதையு மான்ற பைந்தே
னுடைமரைக் குடமும் வைத்தாங் கிருத்தல்போ லொளிரக் கண்
[டார். 13

அரிவிளை யாடுந் தான மாதலா லரிமீ னாகி
யுருவுபொன் வீடு நேமி யொடுவளை பிறழ்வ தாகி
யொருவிலா தமுத மன்ன முறுதலா லறவோர் செய்யுந்
தருமநற் சாலை யாகித் தனித்தடந் திகழ்தல் கண்டார். 14

குமுதநன் னீல நீண்ட வம்புய வலிகு லாவி
யமைவிலா வரிக ளாட லடைந்திசை பெற்ற சீரால்
இமையவர் புகழி ராம கதையென விலங்கா நின்ற
தமரவார் திரைபு ரட்டு தடத்தெழில் பார்த்து நின்றார். 15

*செயிரின்மா விசய வீரஞ் சேர்ந்திசை பொருந்தி நன்காங்*
*கயநல மொடுக லந்து காசில்பூ வுடைய பாண்டு*
*வியன்மிகு செம்மை யுற்று விளங்கலாற் பார தம்போல்*
*இயல்படைத் திடுத டாகத் தெழில்பல பார்த்து நின்றார்.* 16

மகளிர் பொய்கையில் நீராடக் கருதல்

*வியனுறு மான தத்தை வென்றகத் திருந்து கஞ்ச*
*முயர்தரு மளிநா தத்தான் [உயர்ந்த]நல் யோகி போலப்*
*பயனுற விளங்கும் வாவிப் பண்புகண் டமுத வின்சொற்*
*கயல்விழி மடவா ராடக் கருதினர் புளக முற்று.* 17

*மரைமல ரிருத்த லானே மலர்மகள் கோயில் காமன்*
*பொருபடைச் சாலை தென்றல் விடக்கனல் போக்குஞ் சார்வு*
*வருநில வரசைச் சேர்ந்துற் பலமகள் வாழ வீடான்*
*முருகுலாந் தடநன் னீரின் மூழ்குதும் வம்மி னென்றார்.* 18

மகளிர் நீராடப் புகுதல்

*இத்தடந் தன்னின் மூழ்கி யெழிலரி மனத்தா லீன்ற*
*புத்திரன் றன்னைப் பூசை புரிந்திடி னினைத்த வெல்லாஞ்*
*சித்தியா மென்று மாதர் செறிபணி கழற்றி வைத்துக்*
*கைத்தலத் தண்டை யேந்திப் புகுந்தனர் கலைபு னைந்து.* 19

மகளிர் நீராடுதலின் வருணனை

*புயங்களிற் கைபோ கட்டுப் பூவையர் வட்ட மாகி*
*யயர்தனி லுதர மூழ்க நிற்றலு மழகு வாய்ந்த*
*குயம்பல சூழுந் தோற்றங் கோநில்கா மனைப்பூ சிப்பத்*
*தயங்குபூ ரணகும் பங்க ளூட்டிய தன்மை போலும்.* 20

*நிரைபெற நின்று மாதர் நிரைவளைக் கரத்தால் விண்மேற்*
*குரைபுனன் முகந்தி றைப்ப குடங்கைநீ ரெழுதல் கொங்கை*
*வரையினு லடிபட் டேமென் றேலிகொடு வாவி யோடு*
*திருமல ரிரவி தன்பான் முறையிடச் சேறல் போலும்.* 21

*பெறுந்தளி ரண்டை கொண்டோர் பெண்மரைத் தேன்மு*
*நறுங்கொடி முகத்தி றைப்ப நளிமுகந் திருப்ப லோடுஞ் [கந்தோர்*
*சிறந்தமென் குழல்வி ரிந்து நிமிர்ந்தநத் தேனை யெல்லா*
*மறும்படி பருகச் செல்லு மளிக்கண மொத்து மாதோ.* 22

*சிலமடந் தையர்வ ளைந்தோர் செய்யிழை யான னத்தை*
*யலைபுன றன்னிற் பற்றி யழுத்தின ரெழிற்க ரத்தான்*
*மலர்கம லங்க டான வலியினுன் மதியைச் சூழ்ந்து*
*நிலைபெறக் கவர்ந்த தேசை நீகொடென் றழுத்தல் போலும்.* 23

மெல்லிய லொருத்தி தோற்றுட் போதர மிதந்து நீரிற்
செல்லுமொண் குழலும் பின்னே செறிவொடு தொடருகின்ற
வல்லியர் முகமுங் காணின் மறக்கரும் பணிய தொன்றைச்
சொல்லரு மனேகந் திங்கள் கூடியே தொடர்தல் போலும். 24

தண்ணறுங் கமல மேய தடத்திடை யாடு மாதர்
கண்ணிணை பிறழுந் தன்மை கண்டுதா னுணுட் கொண்டு
துண்ணென வதனுள் வைகு மீனர சொன்று துள்ளி
விண்ணின்மேற் புகலா லின்னு மீனமென் றிருந்த தம்மா. 25

கதிர்நிதிக் கொம்பு கொண்டோர் காரிகை யிறைப்ப வோர்மின்
எதிர்முக மதியா நீர்பெய் கொம்புகொண் டிறைத்து வென்று
டுதியுறு குவலை யேச மணியுடைத் துணையும் பெற்றுச்
சிதைவறு மொழியர் வம்பு பெற்றுளார் திறல்கொ ளாரோ. 26

நகைநில வாற்கு விந்த நளினம்பின் விளங்க வைப்பொண்
மகிழ்திரு வன்றே வென்றோர் மதிமுக மடந்தை மூடு
மகவிதழ் பலவு நீக்கிப் பொகுட்டினை யங்கை கொண்டாள்
புகும்வள ரரத னத்தைப் போக்கிய செய்கை போல. 27

ஒருதிரு முழுகிக் கஞ்சத் தொளிர்வலை யங்க வர்ந்து
விரைவுட னெழுந்தா ளங்கண் மிக்கநீர் வேந்து சேரும்
பொருகயல் விழித்த டக்கைப் பூண்முலைக் கனிவாய் மாதர்
கருதரும் புகழை யெல்லாங் கவர்ந்துகொண் டெழுதல்போலும்.

தேமலி கமலப் போது செங்கையிற் பிடித்தொ ருத்தி
காமரு கடலில் வந்த காரிகை போன்றாள் செய்ய
தாமரை மணித்தா ரென்று தன்மலர்க் கையி னேந்திப்
பாமக ளென்ன நின்றாள் பணிமொழி யொருத்தி மாதோ. 29

தலைமிசை யொருத்தி யோர்வெண் டாமரை யிதழை வைத்துக்
கலைமதி புனைந்த கேச கன்னிகை போன்றா ணீலக்
குலமலர்ப் பொடியு திர்த்து நின்றவோர் கோதை மாரன்
பலகொலைக் கணைவி ளக்கும் பணிமொழி யிரதி யொத்தாள். 30

தடநெடுங் கடலிற் றோன்றித் தாமரைக் கனக கும்பத்
தடைதரு பிரச மென்னு மமுதத்தை நுகர வந்த
தடையறு மளியொ ழுங்காந் தமம்புடைத் தொருத்தி நின்றா
ளுடையசீ ரமுதை விண்ணோர்க் குதவுமோ கினியை யொத்து. 31

அப்பொழுது தடாகத்தின் தோற்றம்

மங்கைய ரணிந்த சந்தும் வாள்விழி யிடைத்த ரித்த
பொங்குமஞ் சனமு மன்பாற் புனையரி சனமு நீங்கா
தங்கொளக் கரைந்து வீற்று வீற்றுநின் றமைத லானே
கங்கைவா ளுந்தி வாணி போன்றது கமம்க டாகம். 32

மகளிர் நீராடியபின் கரை சேர்தல்

அடுகண்மங் கையர்தங் கூந்த லாகிய நீல மேகம்
படுதட வேலை நன்னீர் பருகியே மீண்டு போகிப்
புடவியின் மாரி யெய்தல் போலெழுந் துறைநீர் சிந்த
வுடைநனைந் தல்கு றோன்ற வுயர்கரை யேறி னூரால். 33

மகளிர் மதனபூசை செய்ய விரும்புதல்

கற்பகங் கொடுத்த பட்டுக் கலைதனைக் கிரிகைக் கீந்து
பொற்பொடு குழனீ ராற்றிப் பூமுடித் தணிய ணிந்தா
ரப்படி மாதர் தாமு மாடையா திகள்பு னைந்து
விற்பொலி மதன பூசை புரிந்திட விரும்பி னூரால். 34

தடாகப் படலம் முற்றும்.

ஆகத் திருவிருத்தம் 528.

## 19. மதன பூசைப் படலம்

மகளிர் மதனபூசை செய்வதற்குரிய
இடத்தை அடைதல்

குங்குமநன் மலர்மணமு மளிநாத
மந்திரமுங் குருகு நல்கு
பொங்கியபுட் பாஞ்சலியுஞ் சண்பகமா
மலர்ச்சுடரும் பொலிந்த மாவின்
றங்குதளி ரார்த்தியும்பா ளிதவாழைப்
பொடியில்வரு தண்கா லென்னுந்
துங்கநறுந் தூபமுமுந் திரிகைபடா
மந்திரஞ்சேர் சூழ லுற்றூர். 1

மன்மதன் உருவத்தைஎழுதி நிறுத்தல்

பனிநீரிற் கூட்டியபூம் பொடித்தேற்றி
யமைத்துநறை பரந்த வேரால்
இனிதாய பந்தர்புரிந் தலங்கல்புடை
தூங்கநிறைத் தசைத்த கோயி
றனிநாறுங் கத்தூரி தோய்த்ததொரு
தூரிகையாற் றனிப டாத்திற்
குனிசாப மதனுருவ மெழுதினூர்
மதிவதனக் கோதை மாதர். 2

*அவனியிய விடத்தொடையி னிரதியையு*
*மிருபுறத்தி னழகு வாய்ந்த*
*குவலயநா தனையுமொளிர் வசந்தனையு*
*மெழுதியணி சூலவ வெங்கும்*
*பவனவிளங் குழவிமயில் குயிலெகினங்*
*கிளியளிகள் பயிலத் தீட்டி*
*நவமிலகப் பட்நந்தன்னை நிறுத்தினர்*
*தமதுளத்தி னயந்து மாதர்.* 3

மகளிர் மதனனுக்கு
அபிடேக அருச்சனைகள் புரிதல்

*நெஞ்சினுறை கின்றவனை யிதயத்தி*
*னினைந்தெங்கு நிறைந்தோன் தன்னை*
*யெஞ்சலிலா வாகனஞ்செய் தருக்கியமீந்*
*தாழியின னீன்ற சேய்க்கு*
*விஞ்சுத்தி மதிபிள்ளைக் கபிடேகம்*
*புரிந்துமலர் வில்லி னற்கு*
*வஞ்சியிடைக் கிஞ்சுகவாய் மங்கையர்புட்*
*பாஞ்சலியு மதித்துச் செய்தார்.* 4

தூபதீப உபசாரங்கள் செய்தல்

*தென்றலைமந் தரனுக வுடையனுக்கு*
*நறையாரத் தேய்வை பூசி*
*வென்றிவிற லங்கியுளாற் கிருளச்ச*
*மரிவற்கு வேரித் தூபந்*
*துன்றுமொளித் தூபமொடு பணிமாறி*
*யருங்கணியுந் தூய தேனு*
*மொன்றுமளி யுங்கிளியும் படைத்தவனுக்*
*கர்ப்பித்தா ருவகை யோடும்.* 5

மகளிர் செய்த மதனன் துதி

மதனாய வணங்காய மாராய
காமாய மன்ம தாய
விதமோக னயநமோ நமோவென்று
*செங்கைமுகிழ்த் திணையில் வீர*
*புதுவாசங் கமழ்கமல சாயகநா*
*யகவரிதன் புதல்வ தேவ*
*முதிர்சோமக் குடைமுதல்வ வெனத்துதித்தா*
*ரிளங்குயில்போன் முன்னர் நின்று.* 6

மகளிர் மன்மதனைப் பலவாறு போற்றி,
கிரிகையைக் காக்குமாறு வேண்டல்

தென்றலினு லலைகின்ற சந்தனபா
    தங்கண்மிசைத் திகழ்போ தோடு
துன்றுகொடி வனங்களெல்லா நீவிளையாட்
    டயருமிடஞ் சுகவ சந்த
னுன்றனடற் சேவகனு முனக்கிந்த
    வனப்பொருள்கொண் டுவந்து பூசை
யின்றுபுரிந் தனமமுத மதிக்கமுதா
    லுபசரிக்கு மியல்பு போல. 7

மகமேரு வெனுந்தனுவுங் கொடியவரிக்
    கணமுமுடை வலியோன் றன்னைப்
பகர்வாச முடைத்தருளிக் கழையுங்கொண்
    டுரும்பையொரு பாதி யாக்கி
நிகர்திரு மடல்பெற்று யுளத்தினிடை
    நீசிறிது நிறுத்த போதே
தொகையாய தளிர்வயிர மாகாதோ
    மேருவும்போய்த் துரும்பா காதோ. 8

ஒருகனக மலைவில்லா யாயிரஞ்சே
    கரமுடைய வுரக னாணும்
பொருவிலரி முனையம்பாம் வெளிப்புரமி
    ரண்டொன்றும் புனிதன் வென்ற
தரியமுழு வாண்டகைமை யோவதுநீ
    மூவுலகு மமுதக் கன்னல்
வரிசிலையாற் றொடிற்குழையு மலரால்வென்
    றனையுன்சீர் வழுத்தற் பாற்றே. 9

வயமதன வுன்கணையி லகப்பட்ட
    பிரமனுக்கும் வலிய வுன்றன்
சயமதனுக் குடைந்துபெரு வரைகுரத்
    துறுமாற்குச் சாற்றொ ணானன்
வியன்மருவு சத்திதனை யுரத்தினிடை
    யிருத்துபுயன் மேனி யாற்கு
முயருமிரா சதகுணமுந் தமகுணமு
    மிதகுணமு மொழியா தன்றே. 10

வேறு

உன்னருந் திறலினை யொசிம ருங்குலெங்
கன்னிகை முன்னரே காட்ட லேதுவோ
பன்னரு மதிமுடிப் பரன்கொ லோவிவண்
மன்னவுன் கருணையை வழங்கல் வேண்டுமால். 11

விரைவின்மூ வுலகையும் வென்ற வுன்கொடி
யரியுடை முதல்வ தார மாகுமால்
ஒருவுரு திரண்டினை யொருமை யாக்குமுன்
சரவலிக் குமையவள் பாகன் சான்றரோ. 12

மரையக லாவிதி மருவி ஞானுன
தரியமுத் திரையுன தாணை நீங்கலாத்
திருமலர் நாயகன் செய்ய மேனெறி
விரவின னிவளைநீ மெலிவு செய்தியோ. 13

காரளிக் குழவியைக் கமலக் கண்ணியைப்
பூரண மதிமுகப் பொன்னம் பாவையை
நேரிலா வஞ்சுக மொழியை நீபுரந்
தேரினுக் கிணையிலா யின்ப மீதியால். 14

அப்பொழுது தென்றல் வீசுதல்

காப்பதுன் பரமருட் கடைக்கண் வைத்தெனப்
பூப்புனை குழலியர் வேளைப் போற்றலும்
வாப்புறு மெழின்மலர் தூவ வான்குயில்
கூப்பிட வந்தது கொடிய தென்றலே. 15

தென்றல் காற்று பட்டவுடன் கிரிகை மூர்ச்சித்து விழுதல்

தென்றல்வந் திடுதலுஞ் சிறந்த வோர்கொடி
யொன்றிய தளிரொடு மொசிந்து வீழ்தல்போன்
மென்றளிர்ப் பாயலின் மெலிந்து வீழ்ந்தனள்
மன்றலங் கோதைய ரழுது மாழ்கவே. 16

அதனைக்கண்ட மகளிர் பலபடக் கூறி வருந்துதல்

மறத்தொடு மோகவென் றிமிரம் வந்ததான்
முறைப்படு விழிமரை முகிழ்த்த தாதவி
னிறத்திடு தண்பனி நீரை யன்புபோல்
இறைக்கொணு தென்றன ரிளமி ஞர்சிலர். 17

சுருக்கமில் வெயர்வையந் துளியென் றூரகை
பொருக்கென வுதித்தலாற் புழுங்கு கின்றமென்
குருக்கணு நேமியங் குருகின் மேற்சசி
தரிக்கொணு தென்றனர் தைய லார்சிலர். 18

விழைவெனு மங்கியால் வெந்த பொன்னையீண்
டழகிய தளிரின்மேற் கிடத்த லாகுமோ
நழுவல்செய் யாவியந் துணரி னுரிமீ
ரெழில்பெற விசிறலு மியல்பன் றென்றனர். 19

களிப்பறு காமவெவ் வழலிற் காய்ந்திடு
முளப்பெருங் கலையமீ துற்ற நேயமே
யளப்பறப் பொங்குமிப் போதி லாரநீர்
தெளிக்கொணு தென்றனர் தெரிவை மார்சிலர். 20

என்னசெய் வேமினி யென்ன கூறுவே
மென்னபே ருளமருந் தீண்டு தேடுவே
மென்னவிப் படியணங் கெய்து காரண
மென்னமின் னுரெலா மிணங்கி மாழ்கினர். 21

வேறு

மகளிர் கிரிகையின் மூர்ச்சை தெளியப் பலவித
பரிகாரங்கள் செய்து, மதனனை வேண்டல்

துய்ய வாழையி னுயிரினைத் தொடையின்மேற் றளிரைச்
செய்ய தாளின்மேற் கொங்கைமென் முகையினைச் சிவந்த
கய்யில் வாரிச மலர்களைக் குவளையைக் கண்மேல்
அய்ய கூந்தலி னறியவேர்க் கற்றையை யமைத்தார். 22

இந்த வோவிய மன்னமி னிங்ஙன முயிர்பெற்
றுய்ந்து நல்லவ சுலாபமும் பெறுகவென் றுரைத்துச்
சிந்தி யாமதிக் குடையுடைச் சிலைவிறன் மதனை
வந்து பூசனை செய்தனர் பின்னரு மடவார். 23

கிரிகை மூர்ச்சை தெளிந்து கண் விழித்தல்

ஓவி யம்புரை மங்கைய ருரைத்சொற் களிற்றன்
னுவி நாயகன் பெயரெழுந் தடைதலா லயர்ந்த
காவி மெல்லலர் நிலவினுன் மலர்ந்தது கடுப்ப
நாவி யங்குழற் கன்னிகை திறந்தன ணயனம். 24

மகளிர் கிரிகையைத் தேற்றி, அரண்மனைக்கு
அழைத்துச் செல்லுதல்

துன்ப மேனினி மாரனீண் டுவந்தனன் றேகாய்
வன்பு செய்கலன் குயின்மிக வதிந்துகூ வியது
முன்பு நாண்மலர் பெய்தது முடிவிலா தடையு
மின்ப வேதுநீ யஞ்சலென் றுரைத்தன ரெவரும். 25

நஞ்ச மன்னகட் பூவைய ரிவ்வகை நவிற்ற
விஞ்சு துன்பமோர் சிறிதகன் றிருந்தனள் விரும்பி
யஞ்சு கங்குயி லளியொலி யருப்பொழி லகன்றவ்
வஞ்சி யைக்கொடு சென்றனர் வரமணி மனைக்கு. 26

மதன பூசைப் படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 554.

## 20. மாலைப் படலம்

வசு வந்து சென்ற இடங்களைக் கண்டு கிரிகை வருந்தல்

இறையவ னொளித்தி ருந்த விடமுமம் முனிய மைக்க
மறைவகன் றெழுந்து வந்த மலரடிச் சுவடும் வைகு
கறைதவிர் தவிசும் விம்பங் கதுவிடத் தவஞ்செய் சோதி
யுறுசுவர்த் தலமும் யாவு மொண்டொடி நோக்கி நோக்கி; 1

முற்பொழு திருந்த பூமி முதல்வனைக் கண்ட தொத்து
விற்பொலி நுதல ணங்கு மெய்யெலாம் புலர்ந்து மிக்க
பொற்புறு தளிர்ப்ப டுத்த பூவணை மீது சாய்ந்து
பற்பல துயரின் மூழ்கிப் பரிவுறு கின்ற காலை; 2

அப்பொழுது சூரியன் மேலைக்கடலருகிற் சேர்தல்

உன்றனி யிளவல் மின்னை யுயர்வசு வேந்து நாளை
மன்றல்செய் தருள்வான் மேவு வச்சிரப் படைக்க னுங்கல்
என்றுமை நாக வெற்புக் கியம்பமற் றேகு மாபோல்
மின்றிக ழிரத வெய்யோன் வேலையி னருகு சென்றான். 3

மாலை வெயிலின் தோற்றமும் நிழலின் தன்மையும்

மேற்றிசைக் கிரிக்கோர் கால வசத்தினன் மேவுங் காலைப்
போற்றுதன் கரத்தாற் சோதி பொலிதுருக் கங்க டோறு
மேற்றின னினத்தை யென்ன விளவெயி லெறித்து நின்ற
தோற்றவற் றடியி னீழ லெனுமிருள் சூழ்ந்த தன்றே. 4

தாமரை மலர்கள் குவிதல்

மறுவின்மேற் றிசைய ணங்கை மருவிய வங்க ராகக்
குறியின னிடத்திற் கண்டு குலநறுங் கமல மென்னுஞ்
செறிமட மின்னார் தங்க டிகழ்முகஞ் சுருங்கி நின்றா
ருறுமொரு சாயை மாது நின்றன ளுரும லங்கு. 5

செவ்வானத் தோற்றம்

நீங்குநா யகனைத் தேடி நின்றதண் கமல ராக
மாங்குல மகளோ மாக பாத்திர மதனி னல்லாந்
தேங்குமைப் பற்ற வைத்த தீபமோ வெனவி ளங்கி
யோங்கிய திரவி சென்ற வுயர்திசைச் செக்கர் வானம். 6

செவ்வந்தி பரவுதல்

இருபிறப் புடையி னங்க ளியம்பலா லினிய கேள்வன்
வருகுவ தறிந்து கங்குன் மங்கைதந் நுதலிற் றீட்டு
பொருவில்செந் திலகந் தானோ புகநிசிக் கரிமு கத்தா
ரரியசிந் தூரந் தானோ வெனப்பரந் ததுசெவ் வந்தி. 7

அந்திவானத் தோற்றம்

காலமென் றுரைக்கு மானுற் கதிரெனு மிராமன் போகச்
சீலமார் காந்தி யென்னுஞ் சீதையை யிருள ரக்கன்
மாலுறப் பிடியா வண்ணம் வானவர் மறைத்து வைத்த
கோலமா மாயை மின்போற் குலவிய தந்தி வானம். 8

முண்டக மெனுமின் கேள்வ னீங்கலான் முகஞ்சு ருங்கி
வண்டெனும் புகையு யிர்த்து வாடுத றன்னை நேமி
கண்டினற் குரைத்து மென்றே பெடைதுயர் கண்டுஞ் சென்ற
கொண்டமித் திரர்க்கன் புள்ளார் தந்துயர் பார்ப்பர் கொல்லோ! 9

பரிவின்வா யொடுவாய் வைத்துப் பக்கத்தி னுலை ணைத்தாங்
கரியதா மரையைப் பேடைக் களித்துநல் விழியா னோக்கி
வரியுடற் சக்க ரப்புள் வருத்தமுற் றகன்ற தம்ம
பொருவரு மினர கன்று விருப்பரோ புரிவு பெற்றோர். 10

சூரியன் மறைய இரவு தோன்றலின் வருணனை

நடமிடு மிறைவன் சென்னி முடிமிசை நழுவி வீழ்ந்த
படரொளி மாணிக் கம்போற் பரிதிபோய்க் கடலில் வீழ்ந்தா
னிடமுற வீழ்ந்த போழ்தி லெழுபெருந் துளியை யொத்த
வுடுகணஞ் செக்கர்த் தீயிற் புகையினை யொத்த தெல்லி. 11

வேறு

எங்கும் இருள் பரவுதல்

கதிரவன்சோ தரமூர்த்தி வெயிலின் காலங்
கழிந்திடலுங் கடகமல முகிழ்த்தோ னுகி
யதிர்திரைசூழ் கடலிடையிற் புகுதுங் காலை
யந்தியென்னு மின்னுடனே கங்கு லென்னும்
புதியமுகில் பொழிந்திடலாற் பயம்பு மேடு
புகன்றிடுதற் கின்றிமுக மெங்கு மாகி
முதிர்பெரிய விருள்வெள்ளம் பரந்த தம்ம
மொழிக்கரிய பேரண்ட முகடு தோறும். 12

புலவர்பதி யிபமதத்தை யடக்கி யங்கி
போநெறியிற் றொடர்ந்தியம னிருதி நீர்க்கோ
னொலிதனத னர்கதைமெய்ம் மனைவன் றூளி
யுயர்த்தனமுத் திரைவெரிநிற் போர்த்த தூசின்
பலபடுதிண் மையைக்கவர்ந் தாதித்த ரோடு
பகைத்தண்ட முகட்டளவும் வளர்ந்த தோங்கி
வலியவிருள் செக்கரெனு மோமத் தீயில்
வந்தெழுந்த விருத்திரனு மென்ன மன்னோ. 13

அகலியைபா லடைந்தவரிக் கினிய நீல
வணியாய்மற் றொருத்தியரைக் கூடுங் கண்ணன்
றகவொடுகூ டியமயிலி னிறகாய் மிக்க
தவமுனிவர் பன்னியர்கண் ணடைந்த வீசன்
புகரில்களத் தணிபணியாய் தாரை தன்னைப்
புணர்ந்தமதிக் குரத்துறுமுத் திரையாய் மன்னி
பகரருஞ்சித் தாஞ்சனமாய்த் திகழ்ந்த தென்று
பரரையனை பவர்புகழ வந்த தெல்லி. 14

வேறு

மனைகளெங்கும் தீபவொளி திகழ்தல்

இருளினனைத் துரத்தியவ னெழின்மகவு களைக்கவர்ந்து
பொருவருமென் முத்திரையைத் தலைமீது புனைமினெனப்
பரிவினொடு தரித்தாங்குப் பகர்சிகையிற் கருமையுறத்
திருமருவு மனைகடொறுந் தீபங்கள் விளங்கினவால். 15

வானத்தில் நட்சத்திரங்கள் ஒளியுடன் விளங்குதல்

விசயநடப் பானகையால் வெடித்தபிர மாண்டத்திற்
பொசிதருதண் புனற்றிவலை போன்றுமுக முடிவில்வரு
மிசைப்படுநீத் தத்தினிடை யெழுந்தகுமிழ் கள்போன்று
நிசியினிடை வானகத்தி னிறைந்தனவெண் டாரகையே. 16

இனனையெதி ரமர்ந்தேகாத் தடியவரு மியற்பனவர்
புனிதமனு வன்னமணி போன்றுமுய ரரவணிந்த
தனிமுதல்வன் கேசத்திற் சாத்தியவெண் மல்லிகைப்போ
தெனவுமிட மறநெருங்கி யிலங்கினவா லுடுக்கணங்கள். 17

அத்தமன கிரியென்னு மருஞ்சேர்ப்ப னலைபுரட்டு
நத்தினொலி மாறுத நரலையிலா யிரங்கரங்கொள்
வித்தகனை மூழ்கவிடுத் தெடுப்பித்து விரித்தபல
நித்திலவெண் மணியென்ன நிகழுடுக்கள் விளங்கினவால். 18

மாலைப் படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 572.

## 21. சந்திரோதயப் படலம்

சந்திரன் தோன்றுமுன் கீழ்த்திசை வெளுத்தல்

மன்னுமிருள் வெள்ளத்தில் மறைந்தபெரு மண்டலத்தை
தன்னருண வருணமெனு மிராசதத்தாற் றனிபடைப்பான்
முன்னிமறை கீழ்ப்படவான் முதல்வனெனு மதியமுற
மென்னறுவெண் கமலத்தை விரித்தெனக்கீழ் வெளுத்ததால். 1

சந்திரன் உருவம் சிறிது சிறிதாக வெளிப்படல்

ஆசைமட வார்ககன மாமவையி னிருட்டிரையை
நேசமுற விடுத்திடலா னிகழுமிர வெனுங்கூத்தி
தேசறுவெண் மணிப்பட்ட நெற்றிமுகந் திகழ்ந்ததுபோன்
மாசறுவெண் மதியுருவம் பயப்பயமுன் வயங்கியதால். 2

வெண்ணிலவினுல் இருள் அகன்றமை

திருவளர்தென் மடுவைநகர்த் திம்மயன்றன் புகழ்வெள்ளம்
பெருகியது போல்யாண்டும் பிறங்கியதால் வெண்ணிலவு
புரிவினுட னவனளிக்கும் பொருளேற்ற விரவலர்பான்
மருவியநல் குரவகன்ற வாறுபோ லகன்றதிருள். 3

தனைப்பெற்ற கடல்சுவற்று தனியனலைத் தானருண
வனத்தையுற வெடுத்தரியென் வனப்புளகத் திடைபோகட்
டுனற்கரும்வெண் புகழுடைந்த துயர்மதிய மெனிற்களங்கே
தெனிற்பொறுக்கொ ணுவதனை யெடுத்ததனுல் வந்ததே. 4

நிலவென்னு மலைபூட்டி நெடுங்ககனப் பெருங்காட்டி
னிலகுகுணக் கெனும்வேட னிகல்வேட்டை யாடுங்காற்
பலகரிகள் பலகுழியிற் படுவனபோ லிருட்பிழம்பில்
உலகினருங் குகரங்க ளிடத்தடங்கி யொடுங்கிற்றே. 5

உதயமெனு முரலேறி யுயர்மாக வுறிபற்றிக்
கதிர்மதியா மலிகறையங் கண்ணனொடு சாய்த்தலில்வீழ்
புதியவொளிப் பாலைவிளை யுளெனுஞ்சிற் றுய்காகண
மெதிர்கவரப் பாலினக மெங்குமொலி யெழுந்ததால். 6

நிலவொளியில் நட்சத்திரங்களின் தோற்றம்

வானிலவு தன்பதியிற் பொங்கியவான் கங்கையெனத்
தானவயி ராவதமாய் தண்மதிபுக் குழக்கவதான்
மேனிமமுங் கியவுடுக்க ளடிபட்ட வெண்கமலம்
போனளிகொ டுகினமதின் விலாழியெனப் பொழிந்ததே. 7

### சந்திரோதய வருணனை

மித்திரன்ற னதிகாரம் விலக்கவொணு தென்றிரவை
வைத்த[த]லாற் பகலாக்க மாட்டாதோ தருநிழலை
யெய்த்துமடி யொடுங்கிடப்ப தெனக்கருதி விட்டதால்
உய்த்தகற்ற விதற்கரிதோ வெனவந்த திளந்திங்கள். 8

வடவைதனைச் செருத்திடல்வெம் பாவமென வைத்தலால்
அடலரிதோ தன்சிலைக ளலவென்று விடுத்ததலாற்
கடலுலகிற் சிலைமுழுதுங் கரங்கொடுமற் றெளிதுகுழைத்
திடுதலரி தோவிதனுக் கெனவந்த தொளிர்திங்கள். 9

மரைமீது செலுத்தாமல் வரிவண்டை வனத்தினூறு
வரையாம்பல் மிசையேவி விளங்குதிரைப் பாலுத்தி
தரைமீது பரந்ததெனத் தண்ணிலவை விரித்தினிய
பரைப்பாகன் சிரத்தேறு பனிமதிய மெழுந்ததால். 10

### சகோரப் பறவைகளின் செயல்

மதியெனவாங் கியசிலையின் மவ்வற்கோன் மதன்றேருடலு
முதிர்பொடிபோற் பரந்துநறு மல்லிகைத்தே னொடுநெய்தற்
பொதிபொடியஞ் சருக்கரையோ டளைந்துவரு புதுநிலவை
யெதிரில்சகோ ரங்கொடிறு புடைப்பவயின் றெழுந்தனவால். 11

### சந்திரகாந்தக்கல் நீரைப் பெருக்குதல்

நிலவுநுகர் களிப்பேடு நிகழ்சேவ லினைத்தேடிச்
சலநதிமேல் வருங்காலைத் தண்ணிழலொண் சேவலெனக்
குலவிமகிழ்ந் துறலுமுருக் கொள்கையினி லுயிர்ப்பெறிந்து
மெலிகுதலுக் குருகுதல்போல் விதுச்சிலைநீ ரொழுக்கினவால். 12

### வேறு

### நிலவொளியில் மகிழ்ந்த ஆடவர் பெண்டிர் ஆகியோர் செயல்கள்

மகிழ்வு செய்திட வொளிதிகழ் மரகத வள்ளத்
தொகையில் வெண்மதி யொழுக்கிய தூநிலா நிரம்ப
நிகரி லாதநந் தேறலென் றளியொடு நிகழ்த்தித்
திகழ்ந கத்தினைத் தோய்த்ததைத் தரைமிசை தெறிப்பார். 13

மதுநி றைத்தபொற் கடத்திடை மதிநிழ லுறக்கண்
டிதுசெ ழுஞ்சுதைக் கும்பமென் றுண்மல ரிடுவார்
கதிர்கொள் வாய்நகை கொளவரிக் கடத்துடு நிழலைப்
புதுமை யாயமுந் திரிகையொண் கனியெனப் புகன்று. 14

வாயெ னுந்தம தாமரைக் கலத்துறு மதுவை
நாய கர்க்களித் திடவிதழ் நறைகொளப் புகுத்து
சேய மாந்தளி ரென்றுபல் லழுத்தலுஞ் செழும்பொன்
மேய மாமணி வளையொலித் திடக்கரம் விதிர்ப்பார். 15

அன்பர் பற்குளி யளித்தலு மத்தநோக் குளராய்
நன்கு லாவுசீ றகாரமு மிடற்றெலி நயமும்
பொங்க மாமலர்ப் பந்தரைப் புரைத்துவீழ் நிலவை
மங்கை மாரெடுத் தெறிவர்வெண் ணிலவென மதித்து. 16

உண்ட தேறலான் மகிழ்ந்தியாம் பலகவி யுரைத்துக்
கொண்டு நாடகம் புரிதல்கண் டொளிர்மதி கொடுத்த
வெண்டு கிற்குல மெனமணி வேதிகை யிடத்தே
மண்டு கின்றதண் ணிலவினை யெடுத்துமேல் வனைவார். 17

நறவ ருந்திய களிப்பினுன் மகிழ்ந்தியா நடத்தற்
குறவி ரித்திடு கலையென நிலவினை யுன்னி
யறிகி லார்மலர்ப் பொடிமணி யுறுத்துத லனம்போன்
மறிவி ழிச்சிய ரரமியப் புறத்துலா வருவார். 18

தரள வாள்வடம் புரளமா விகைக்குழல் சரிய
வருகு நுண்ணிடை துவளநீ டணிமுலை குலுங்க
மருந ருநுகர் களியினுன் மகிழ்நரொ டுபரி
சுரத லீலைசெய் தருள்வரான் மடந்தையர் தொடர்ந்து. 19

உய்யு மாறரு ளுபரியஞ் சுரதத்தி னெல்கி
வெய்ய கண்ணிணை முகி[ழ்]தங் கொளமுகம் வெயர்ப்ப
வைய கொங்கைதம் மார்புற மேல்விழு மவடன்
செய்ய வாயமு துண்பவ ரினுமெவர் சிறந்தார். 20

ஆர வில்லினை யடக்குதிந் நிலவென வகத்துட்
சாரு மங்கையர் தூண்புடைச் சார்தலுந் துணைவர்
பேருங்கலை யிழுத்திடப் பின்விழு மளவி
னேரு நாணுடன் விழுதலா லோடிமேல் வீழ்வார். 21

நிகரில் சாளரத் திடைதொறுங் காணுநன் னிலவை
யிகுளை மாதரார் நோக்குமா னனமென வெண்ணு
மகிழ்நர் மார்புறத் தழுவிய மலர்க்கரம் வாங்கி
மிகவு நாணொடு கலையினை மெய்கொளப் புனைவார். 22

இந்து நும்முக வொளியினைக் கவருவா னெழுந்து
வந்த தென்றுயர் விரகினல் வாய்புதைத் துயிர்க்கு
மந்த நாயகர்ப் புடைப்பமெல் லியர்கள்சா ளரத்தூ
டுந்து சோதியைக் கதையென வெடுப்பரா லோடி. 23

வேறு

மகிழ்ந ருரைத்த குறிவிடுத்து
மற்றோ ரிடத்தி னுறமதிநேர்
முகமெல் லியவர்வந் தவணேடி
முளரி விழிநீ ருகுத்திடலு
நகையி னொடுசேர்ந் தணைத்துவிழி
நாரந் துடைப்ப மனங்களித்துப்
புகலக் கொடிசூழ் கற்பூரக்
கதலி நிழலிற் புணர்குவரால். 24

களத்தி னோசை யெழப்பிறழுங்
கண்கள் சேப்ப வளையார்ப்பத்
திளைத்த கூந்தற் கருமாக்கள்
சேர வெழுந்து தடுமாற
விளைத்த பொருவில் கலவிப்போர்
மிக்க விளைஞ ருடனேசெய்
திளைத்த மடவா ரரமியத்தி
னிருந்து சால வயாவுயிர்ப்பார். 25

வெண்ணிலவின் சிறப்பு

மதிய மெனுமோர் வணிகன்றன்
காந்தி காட்ட வதனத்தின்
புதிய காந்தி தனைக்கவர்வான்
வந்தான் போது மெனவிளைஞர்
விதியின் மறித்தும் புணர்வதற்கு
விளிப்ப வருமெல் லியர்குழனின்
றுதிர்வெண் மலருக் கினியநில
வுறவோ வென்ன விளங்கியதால். 26

புனித வருணப் பிரமமெனப்
பொருந்த லான்மற் றியாவரையு
மினிதி னுலகத் துளபொருளை
யெல்லா முணர்கின் றவராக்கி
யுனுதற் கரிய தாரத்தை
யடக்கு முயர்வால் வரையெல்லா
மனக ருறையும் வெள்ளிமலை
யாக்கி விளங்கிற் றியனிலவு. 27

கருதி னேமக் கலையுடையோன்
காலிற் பிறந்து நிகரின்றிப்
பெருகு வெள்ள மாதலினாற்
பெரிய புவன களங்களைத்து
மொருவப் புரிந்திவ் வகிலத்தைச்
சுதையிட் டதுபோ லுறவிளக்கி
யரிய நிலவு பரந்துமதன்
புகழ்போற் றிகழு மமையத்தில். 28

சந்திரோதயப் படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 600.

## 22. சந்திரோபாலம்பனப் படலம்

நிலவின் தோற்றத்தைக் கண்ட
கிரிகையின் தோழியர் வருந்தல்

*நிலவை யுலகில் வீசிமிக*
*நிகரின் மதிவந் தனுநறிய*
*மலய பவன மெழுந்ததுபோர்*
*மதனுங் கொடிய கணைதெரிந்தான்*
*கலக மிடுமித் தீமூன்று*
*மொருங்கு கூடிக் கனன்றிடினந்*
*தலைவி பொறுப்ப தெவ்வாறென்*
*றுயிர்த்து மடவார் தளர்காலை,* 1

கிரிகையின் துயரை வசுவேந்தனுக்கு
அறிவித்து வருவதாகக் கூறி
மஞ்சுவாணி செல்லுதல்

*சயவேள் கணைவெண் மதிகுயிலே*
*தண்கால் களிமற் றளிர்மீன*
*நயன மறல்சிந் திடவதனங்*
*கருக மொழிக ணணிதளர*
*வுயிருங் குலைய வெதிர்பேச*
*வளகஞ் சோர வுறுவதுவண்*
*டயர வருத்தா முனமிறைவற்*
*கறைவ லெனமின் மொழியெழுந்தாள்.* 2

*எழுந்து நின்று கரந்தனின்மற்*
*றொருகாழ் முத்த மெடுத்தினிய*
*செழுந்தண் மடவீ ரிறைவன்பாற்*
*சென்று மீண்டு வருமளவு*
*மழுந்து துயர மகற்றியெழி*
*லரிவை தனைக்காத் தருண்மினென*
*மொழிந்து சிறிதுந் தாழாது*
*முடுகி நடந்தாள் வெளியாற்றில்.* 3

விரக வேதனையால் வருந்தும் கிரிகை,
சந்திரனை வெறுத்துக் கூறல்

*அவளங் ககன்ற பினைமாடத்*
*தணிசா ளரத்தி னிடைநுழைந்து*
*தவள வொளிய மதிக்காந்தச்*
*சிலையைக் கரைத்த தன்மையினற்*

பவள விதழி யாற்றுது
பகர்தற் கரிய மேனியெலாந்
துவளக் கொடுக்குந் தானவனை
நோக்கி வெறுக்கத் தொடங்கினள். 4

நன்னீர் வாச விழியாரை
நலிபா தகநீ நிலவரசோ
வுன்னு னேமி விளங்கிற்றோ
வொழித்தா யோமற் றரியபயங்
கொன்னே யருளந் தணர்க்கஇதம்
புரிந்தாய் கதிர்நூல் கண்டமையால்
என்னே பயன்வெண் மதியே!நீ
யெழுந்து தோடத் தடைந்தாயே. 5

படியின் மடவார் தமைவருத்து
பாவங் கனமாய்க் களங்கமாய்த்
தொடருந் தமமாய்க் கவற்றியுனைத்
துண்டம் பதினு றுக்காது
விடுமோ வினிய காதலரைக்
கொல்லுங் கொடிய வெண்டிங்காள் !
கடையி னுனக்கு வருஞ்சிறுமை
தனையு நீயே காண்டியால். 6

பரமன் களத்தைக் கருகியிடப்
புரிந்த தன்றிப் பரந்தவிட
மரிய தலைக்க ணேறிற்றோ
வடல்செய் வடவைக் கடல்சுவறப்
புரிவ தல்லாற் கொதித்தெழுமேற்
புரிந்த தோமற் றுனைப்போல
விரவி யெழுந்த வெண்டிங்காள் !
யாரே யுன்ற னெதிர்நிற்பார். 7

அந்த மாலுண் பொழுதுதர
மதனைக் கனற்றிப் புறப்பட்டு
வந்த தோவெவ் வனத்தனல்போர்
வயிரக் கதிர்வாள் வலிச்சிலையைக்
கந்து போல நிறுத்தியதோ
யன்றிக் கரைத்த தோவுனைப்போன்
முந்து மழல்செய் மதியே!யுன்
கொடுமை யுரைக்க முடியாதே. 8

உலகைக் கனற்று வடவையினுங்
கொடியை யான வுனக்குமிகக்
குலவு மாணி யாயிருக்குங்
குறைவி றவவத் திரிவிழிக்கு
மலரு மிருள்சீய்த் தொருதிகிரி
மணித்தே ருருட்டி வெயில்பரப்பிப்
பலருந் தொழவந் தருள்கதிரைப்
பார்ப்ப தரிதோ வெண்டிங்காள்! 9

ஆல ராசி தனிற்சனித்தா
யால விடத்து டன்வந்தா
யால வகிவா யிடைப்புக்கா
யால முகில்போ னெறிச்சென்று
யால மருந்து மான்சிரத்தி
னடைந்தாய் கொடிய வெண்மதிநீ
யால நயனத் தமுதனையா
ராவி கொள்வ தரிதேயோ. 10

உனது பகையாம் பணிமிசைமா
லேவச் சென்ற வுயர்திகிரி
தனது பெயர்பெற் றதைவருத்துந்
தன்மை யுன்பா லிருக்கையினு
லனைய பணியை வதைத்தும்வதை
யாதே வட்டத் துன்கனவல்
வினையின் வலிகா ணுழிவிடி
லுய்ந்தா ருளரோ வெண்டிங்காள்! 11

அடுதா னவனீ யுதரத்தி
னடங்கு புவனங் களைவருத்தி
விடுவா யென்றவ் வசுரரரி
யானே னட்டான் வியன்கமலை
யொடுநீ யுதித்த தன்மைதனை
யுணர்ந்து சோமா வதைமறந்தாய்
கெடுவாய் சுடுதி நிசிசரர்த
மிடத்திற் கேடி லறமுண்டோ. 12

சற்று நேர முனையகத்தில்
வைத்தன் றிருந்த தனிமாலுக்
குற்று விளைந்த பெண்கொலைக
ளநேக முன்றன் கொடுமைதனை
யிற்றென் றுரைக்கப் படுமோற்
றுன்னை முடித்த விரும்பரமன்
முற்று முலக மொருகணத்தின்
முடிப்ப தரிதோ வெண்டிங்காள்! 13

இலங்கு நீயும் புகல்யானு
 நீரிற் பிறந்தா மென் றுறவு
குலங்கொ டுரைக்க நாணன்றே
 கூறு மிடத்து னுடன்பிறந்த
வலங்க ளகத் திருமனேயைக்
 கெடுத்தாய் [பாவி ய]விர்திங்க
ணலங்கொள் பொன்னிற் களவுபுரி
 நவையு ளார்க்கு முறவுண்டோ. 14

உதயம் புரிந்து வருமதியே
 யுன்னைத் தனது திருக்கோயில்
சிதைய விரிஞ்ச னேன்படைத்தான்
 படைத்தா லென்ன திருந்துலகில்
பொதுசீ ரொடுவாழ் நாளுடையை
 யாகப் புரிந்த தேனந்தோ
விதமில் பாவிக் காயுண்மிகு
 மென்று புகறல் பிழையாமோ! 15

திரைத்தண் கடலிற் றுயின்றுனுஞ்
 சிரத்தி லுனேயே தரித்தோனு
நிரைத்தண் புவனம் படைத்தோனு
 நிமலத் தொடுவாழ் கதிரோனு
மிருக்க மதிநின் முதற்கலையை
 யெரிக்குக் கொடுத்து நண்புற்றாய்
வரைக்கொங் கையரை மிகவெதுப்ப
 வன்னி கவரும் படிக்கன்றே, 16

சந்திரோபாலம்பனப் படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 616.

## 23. மன்மதோபாலம்பனப் படலம்

இதுமுதல் 7 பாடல்கள் கிரிகை
மன்மதனே வெறுத்து வைதலைக் கூறும்

என்று கொடிய மொழிகளா
 லிலங்கு மதியை வைததற்பின்
மன்றல் கமழுங் கருங்கூந்தன்
 மதிந(த)ன் னுதற்பூங் கன்னியுளங்
கன்றி யகிலத் துயிர்மயங்கக்
 கனன்று சாபங் குனித்திடல்செய்
வென்றி யுடைத்திண் டிறல்மதனே
 வெறுத்து வையத் தொடங்கினள். 1

நானோர் சிறிய கன்னிகையுன்
னளின மெனுந்தீக் கணைதனையென்
பானோ யடைய விடலாமோ
பகைத்தா யாதி யோகெடுவாய்
ஊனோ டுயிரும் பதைக்கவடர்த்
துடற்று நின்று யனங்காநீ
யேனோ வருளை விடுத்தாய்நிற்
கினிய தோவிக் கொடுந்தொழிலே. 2

குயினேர் கோதைத் தனியிரதி
கொழுநா வுன்னைத் தொழுதுதொழு
தயில்வேற் கண்ணா ருடன்யானின்
றயர்ச்சி பலவு முரைத்தாலுஞ்
செயிர்தீர் பரம னுதற்கண்ணின்
செய்ய கனலா லுடம்பதுகெட்
டுயிர்மாத் திரமாய்ச் சரித்திடுமு
னுளத்திற் புகுமோ வுரையாயே. 3

அரற்குப் பகைநீ யரன்முடிமே
லமைந்தோ னவன்று மறைவாளி
கரத்திற் றரித்தாய் நீயதனைக்
கவற்றிக் கெடுத்து விடுவனவன்
வரைக்கு நிகர்தா னவர்பகைவன்
மகனீ யவனே தானவனற்
சரக்கை மதனா சந்திரனோ
டுறவேன் கொண்டாய் சாற்றாயே. 4

கடிமென் மலரிட் டுனைத்தொழுது
துதிசெய் தாலுங் காதலரைத்
தடியு மதனா மதுநுகருங்
குணங்கொண் டன்றோ தயவற்று
யடவிக் குருகாற் கருமங்க
ணடத்திக் கொண்டா யதுவன்றி
வடிவில் பவனத் திடையிவர்ந்தாய்
வாய்த்த வுடம்பை மறந்தாயே. 5

வன்னிக் குறவா கியதேரும்
வன்னிப் பரியு நேமிதனை
யின்னற் படுத்து கவிகையுங்கள்
ளேத்து காவின் னரியுங்கொண்

டென்னைப் பொருதாய் மதனுவீ
தென்ன ரதமீ தென்னசுக
முன்னப் படிவீ தென்னமதி
யென்ன குணமீ துரையாயே. 6

கரியைப் பிரக லாதனனைப்
பனவன் மகனைக் காரவுண
னரிதிற் கவர்ந்த சுருதியைக்காத்
தருள விலையே கழைச்சிலையோய் !
தெரிதற் குரிய பரமனுனைச்
சிதைத்த பொழுது விலக்காது
னுரிய தந்தை பார்த்திருந்தா
னுனது கொடுமை கண்டன்றோ. 7

தென்றலை வெறுத்தல்

விரைவில் வெடிக்குங் குவலயமவ்
விரிஞ்சன் பதமுஞ் சலனமுறு
மரிய புவன மலைபடுநீ
யமைந்து வருங்காற் சிறியையோ
வொருதென் மலயத் திடையுதித்த
மந்தா நிலமே யுயரெழிலிக்
கரிய வளகத் திருவனையார்
கருத்தை மலைக்க வேண்டாவே. 8

எரியு நீயு மருகிருக்கி
னுலகைச் சுடுவீ ரென்றுமலர்ப்
பிரமன் மூலை களில்வைத்தான்
பிரித்து நுமையிவ் வாறிருந்து
மரிதன் றிசையை மெல்லவடைந்
தரியைச் சேர்ந்தா யுலகத்தை
விரைவிற் சுடவோ விளந்தென்றல் !
விளம்பி லிதுமற் றறமேயோ. 9

வண்டுந் தேனுங் கலந்தகுழன்
மடவார் தமைநீ வருத்துதலாற்
புண்ட ரீக மலர்ப்பிரமன்
புயங்கங் களுக்கு நினைப்பகுவாய்
கொண்டு பருக வாயிரயாண்
டிருக்கு மாயுக் கொடுத்தானிவ்
வண்டத் துலவு மிளந்தென்றல்
விதனை யறிந்து மடங்காயே. 10

தாவின் மலயத் தொலியவுறு!
சாற்றக் கேணீ யுதித்தளவிற்
பூவி னுடைய வளங்கவர்ந்தாய்
நாக மனைத்தும் புகுந்தலைத்தாய்
மேவி யுனைமா லனந்தவுரு
வெடுத்தா லலது வெல்லரிது
பாவி மதனோ டடைந்தாயே
னுலகந் துகளாய்ப் பறவாதோ. 11

சலமார் பொழின்மா தனயன்பாற்
சார்ந்து கொடிய தமத்தலடைந்து
மலரு முயர்பூப் பராகமெழ
வந்த மந்த கதியுடையாய்
உலகி னல்லார் சிகியென்னு
மீனக் கொடிய னுடன்கூடி
நிலையி லென்னை நலிகின்று
யிந்தக் கொடுமை நிலையாதே. 12

துன்பமாற்றுது வருந்திய கிரிகையைத்
தோழியர் தேற்றல்

இன்ன வாறு வெண்மதியை
மதன வேளை யிளங்காலைக்
கன்னி வெறுத்து வைததற்பின்
கழிதன் விரக மாற்றுதங்
கின்ன லுழந்து நிலாக்கடலில்
விழுவ லெனமற் றேகமையத்
தன்ன நடைச்சிற் றிடைக்கனிவா
யமுத மனையார் மறித்தனரால். 13

தணிவெண் ணிலவுக் காற்றுது
தண்ணங் கமல மலர்முகத்தில்
வனமென் கதலித் தளிரனைய
கலையின் றலையை வைத்துமிக
வினிய வெழில்விஞ் சையர்மகளிர்
யாழி னிசைக்குங் காம்போசி
யெனவன் சிலையுங் கரைந்துருக
விளமென் கோதை யழுதனளால். 14

அமுத விளமென் கொடியையெடுத்
தணைத்துக் குவளை மதுத்துளித்தாங்
கொழுகு விழிநீர் தனைத்துடைத்து
நாளை யேயு னுயிரனையான்

விழைவி னுடன்வந் துனதுமலர்
மென்கை பிடிப்ப னுளங்குளிர
வெழுது மொருசித் திரமனையா
யிரங்கே லென்றார் மின்னனையார். 15

மன்மதோபாலம்பனப் படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 631.

## 24. தூதிவரு படலம்

மகளிர் மஞ்சுவாணியை எதிர்பார்க்கும்பொழுது
ஒரு சோதி தோன்றல்

மின்னே ரெல்லா மவணின்று
விரகான் மஞ்சு வாணியகன்
றன்னே நெடிய பொழுதாயிற்
றென்று நோக்கு மமையத்திற்
றன்னே ரில்லா ந(ப)[க]மகட்குத்
தரித்தா ராகத் தனிப்பட்டோ
வென்னே செக்கர் பனிவிசும்போ
வென்ன வெழுந்த தொருசோதி. 1

அச்சோதியைக் கண்ட மகளிர் கூற்று

இன்ன வொளிகன் னியைவருத்து
நிலவைத் துரத்த வெழுங்கதிரோ
மின்னி னுடனே பிறந்தமையால்
வெந்நோய் தீர்க்க வருமருந்தின்
மன்னு மொளியோ தந்தைமணிக்
குவடோ வன்னை மரைக்கலங்கொண்
டுன்னி விழியே றகற்றவரு
மொளியோ வெனநின் றுரைத்தனரால். 2

மஞ்சுவாணி வசுவின் மோதிரத்தைக் கொணர்ந்து
கிரிகை முன்பு வைத்தல்

உரைக்கு மமயத் திறைவனருள்
பதும ராக வொளியாழி
கரத்தி லேந்தி யதன்சோதி
யுலக மெல்லாங் கவர்ந்துகொள
விரைத்தண் கூந்தற் கனித்துவர்வாய்
மஞ்சு வாணி விரைவினில்வந்
திருக்குங் கிரிகை யெதிர்வைத்தாள்
யார்க்கு மிதயங் களிகூர. 3

வேறு

இதுமுதல் 77 பாடல்கள், மஞ்சுவாணி வசுவேந்தனிடம்
தூதுசென்று மீண்டு கூறியவற்றை உணர்த்தும்.

வைத்த வாழியைக் காண்டலுந் தனித்தனி மகிழ்ந்த
தத்தை யன்னவர் சூழ்ந்தனர் கேட்டிடத் தனிவேல்
வித்த கன்றன்முன் போய்வரு பரிசெலாம் விரித்துக்
கொத்து நாண்மலர்க் கருங்குழன் மென்மொழி கூறும். 4

கன்னி தன்னுள மயல்கெடும் படிக்கருங் கழற்கான்
மன்னன் முன்னெனை விடுத்தனிர் நுண்ணிடை மணிவாய்ப்
பொன்னு ரைத்தென மிளிர்சுணங் கணிமுலைப் புதிய
மின்ன னீர்விரைந் தேகினே னேகரும் விசும்பில். 5

கடலு டைப்பெரு வசுந்தரை கனவரைக் குலங்க
ளொடுப றந்துபின் வந்தது போன்றதா லுயர்ந்த
தடையில் விண்மிசைச் செலச்செல வொலியொலித் தது
படைநெ டுங்கணீ ரந்தர முழங்கிய பரிசின். [வாட் 6

நாட ருந்திரை நீத்தெதிர் வருபல நலங்கூர்
வேட தாரியொத் திருந்தது விட்புல வுலகங்
கேடின் மீமிசைச் செலச்செலக் கிளர்மதி யுருவ
மாடல் வேல்விழி மடநலீர் தோற்றிய தகன்று. 7

வரைக்கு லங்கழற் காயினை யொத்தன வளங்க
டரைக்க ணுறுறு செறுவினை யொத்தன தடங்க
டிருத்து மாடியொத் தனவன நதிகணித் திலத்தார்
வருக்க மொத்தன நோக்குழி வானிடை வதிந்து. 8

துருக்க வர்க்கமோ டணிபடு புறங்களின் ஞெருகுதி
பெருத்த பாடிகள் குவித்திடு குவையெனப் பிறங்கி
யிருத்த லால்வசு நகரியா தென்னநின் றகன்ற
தரைக்க ணேக்குழிக் கண்டனா னன்னநற் றனியூர். 9

கடிது செல்வுழித் தோற்றின கடிநகர் மகடன்
முடியின் மாலைபோ லணியொடு மொய்த்தபொற் கொடிகள்
வடுவி லாமணி மனையெனுந் தேவதை மகுடத்
திடுச ரோருக மொத்தன வெண்ணில்பொற் கலசம். 10

வீர மாமலர்த் தவிசென விரிநகர்ப் புடையே
சேரு மூதையிற் றலைமிசை சிறந்தன ஞாயி
னேரி லாதிலங் குற்றன நிலமகள் பருமத்
தாருரும் வச்சிர நிரையெனத் தோரண வணிகள். 11

பரியி னங்தொகு சாலைகள் பருமணி யரங்கங்
கரிகள் சேவக மினைதவிர் கனகமா மறுகு
தெரியல் சூழ்புயத் தரசர்தம் மாளிகைத் திரள்கள்
விரித ரும்பல விதத்தொடு தோற்றின விளங்க. 12

மகளிர் மைந்தரோ டுடியே நீத்ததார் மணமு
மகரு மான்மத முதற்பல வாசமு மடைந்த
பகர ருந்தமிழ் மாருதம் பையவந் திடலாற்
புகரி லாவகை யயாவுயிர்த் தேகினன் புரமேல். 13

புதிய நீழல்கண் டனமிதோ வதோவெனப் புகன்று
மதுகை யாலுயர் காவலர் மயங்குத லுணர்ந்தியான்
கதிகொ டேகையின் மயிற்குலங் கண்விழித் தகவப்
பதியி னோர்மணி மேடையின் பான்மறைந் திருந்தேன். 14

மதிற்க பாடமூ டியதுகண் முகிழ்த்ததாய் மதிதோய்
சுதைப்ப தாகைநா வாயணி தூப்பொடி நிலவாய்
விதுக்க ணீர்விழி நீரதாய் விளங்குமற் றெலியற்
றிதப்ப டுஞ்சிவ யோகிபோ லிருந்ததப் புரமே. 15

வேறு

சுரதவிதஞ் செய்தவிளைப் பொழியக் கொண்கர்
தோள்பற்றி நிலாமுற்றத் துறுவா ரொடு
மருவிறைவர் போய்நிற்ப வவர்முன் சேர்ந்த
மங்கையர்போ லெதிர்வருவார் தலைவர் மற்றோர்
அரிவையிடத் தேகளவிற் புருட ரூபத்
தடைந்துதடுப் பார்வளர்த்த புறவா திக்கு
விரகொடுவேள் கலையருத்தஞ் சொல்வா ராகும்
விலைமகளிர் மறுகினிமை விளைத்த தன்றே. 16

மையல்விளர்ப் பொடுநிலவு கலந்த தோரநன்
மதிச்சிலைக ளுமிழ்வாரி சுவறிற் றேதம்
வெய்யவிர கக்கனலின் மறுகு தோறும்
விரவுமணிச் சுடர்விரக வுயிர்ப்புத் தோய
வையவொளி மழுங்கிற்றே மதன வேந்த
ஞணைதனி லடங்கிற்றே விரவி னச்சந்
துய்யநிலா முதலிவற்றை யெண்ணு ராகித்
துணிந்துபோ யினர்சிலபூந் தோகை யன்னர். 17

இந்திரனத் தாணியென விருந்த கூடத்
தெழிலெல்லா மரகதத்தா லிழைப்ப வாய்ந்த
சுந்தரமே டைகளெல்லா முயர்விண் ணுற்றைத்
தோய்ந்துறைக ளுதிர்ந்தனபோற் கொடிக ளெல்லா

மந்தரமா முகடணவி நின்ற மாடத்
தணியெல்லா மிங்கிவற்றி லரசன் மேவு
சந்தமணிப் பெருங்கோயில் யாதோ வென்று
தையலீர் யான்மதித்து நிற்குங் காலை; 18

வேறு

ஒருமணிக் கோயி லுள்ளே யோதரு மியக்க மாதர்
பொருவில்சா ரணமின் னார்கள் புயங்கமென் மகளிர் விஞ்சைத்
திருவனார் முகிலி னேனை திகழுநல் வாக்குச் செய்ய
வெரிமணித் தீபங் கோதி லிசையுட னுலவக் கண்டேன். 19

நரபதி மனைய நாகு நாகமங் கையர்க ளாதித்
தெரிவைய ரிவர னந்தஞ் சிறப்புள விமானத் தோடு
சுரபதி யளித்தோ ரென்னத் தோற்றுளத் ததிச யித்துப்
பரிவொடு சென்றே னன்ன பார்த்திபன் கோயின் முன்னர். 20

அளவிரு னத்தை யெண்ணி யடைந்திடு மிராக மாக்கள்
வளமுறு மிசையி னுனே மகிழ்ந்துகண் படைகொ ளாது
தளர்வறு மரசு வாக்க டணிமணி மண்ட பத்திற்
புளகமுற் றிடவ கத்தும் புறத்தினு முறைதல் கண்டேன். 21

வேறு

வயிரவொளி சுதையாய்நல் நீலஞ் சாந்தாய்
மணித்தரள நிரையரங்கக் கொடியாய் மன்ன
வியனுமர கதவொளியோ மெழுக லேய்ப்ப
விந்துமணி புனலிறைப்பத் துகிரின் சோதி
பயில்வயி டூரியமே யெழினி யாகப்
பருவனச ராகமணி தீப மாக
வயில்விழியீர் புனையலங்கல் விதான மாக
வமையுமுயர் மண்டபத்தி னழகு பார்த்தேன். 22

வேறு

மரகத மாதி யான மணிகள்பற் பலவி ளங்கி
வருமுடுக் கணங்க ளுக்கு மாற்றருந் தங்கள் சோதி
விரவுற வுதவி நின்று மிளிருமம் மண்ட பத்தை
யரிவைமீர் கடந்துட் சென்றே னகத்ததி சயம டைந்து. 23

வயிரமா ளிகையுந் தந்த மாடமும் புருட ராக
வியன்மணி மேடை யுங்கோ மேதகத் தெற்றி யுஞ்சீர்
பயிறரு தரளக் கோவைப் பந்தரும் பிறவுங் கண்டு
மயிலிய லனையீ ரங்கண் மணிநிறத் திறங்கிப் புக்கேன். 24

ஓரிடை யுதக மென்றுங் குடையைமே லேற்றிச் சென்றே
னோரிடை யடையா வாயி லென்றுளத் துன்னிப் போந்தே
னோரிடை தெற்றி யென்றே ரொளிர்பதந் தூக்கி னேன்மற்
றோரிடை விலகப் புக்கே னோவியப் பித்தி யென்று. 25

இவ்வகை நிருபன் கோயி லென்னையு மிகம யக்கஞ்
செய்வள மனைத்து நோக்கிச் சிரகர கம்பி தஞ்செய்
தெவ்வுழி யேனுங் காணே னிவ்வணி போலென் றெண்ணி
யவ்வயி னரச னந்தப் புரத்தரு கருவ மானேன். 26

தனிமணி மேடை யென்னுந் தடத்திலோர் சிறிது சாய்ந்த
வனமுலை நேமி யோடு முகிழ்த்தபூ வனச வல்லி
யெனவிழி மூடித் தார்வே லிறையரு குறங்கு கின்ற
வனிதையர் தம்மைக் கண்டேன் மதனதே வதைக ளென்று. 27

முளரியங் கையில்யாழ் காலான் முழங்கலும் விழித்தொ ருத்தி
வெளியிடை விரலு ளர்ந்தாள் விரவிலோர் பெண்ணு யிர்ப்பால்
ஒளிர்மலர் விசிறி பைந்தே னுதிர்ப்பமெய் விதிர்த்தெ ழுந்து
தெளிவிலள் வீசி னளால் வெளியினித் திரைம யக்கால். 28

ஒருத்திதன் கரக்கற் பூரக் களாசியி னுறுசு ரும்பர்
இரைத்தலால் வெளிக்க ணீட்டி யெழுந்தன ளிந்து காந்த
விரைப்புனல் முகத்தி னூர வெள்ளிலைச் சுருளை யோர்பெண்
கருத்திலள் வெளிக்க ளித்தாள் கண்படை துறந்தெ ழுந்து. 29

இவ்வகைத் தொழிலை முன்செய் பயிற்சியா லெழின்மின் னார்கள்
செவ்விய துயின்ம யக்கந் தன்னினுஞ் செய்தி டக்கண்
டவ்வயி னிற்கு மேல்வை யரசன்பா னின்றி ரண்டு
மைவிழிப் பொருவின் மின்னார் வந்தனர் பேசிக் கொண்டு. 30

மன்னவன் பொழிற்க ணேகி வந்தநாண் முதல தாகத்
தன்னுளே படுவ ருத்தஞ் சாற்றரி துறங்கி லானென்
றன்னவர் தம்மிற் றுமே யறைதல்கேட் டின்ப முற்றுத்
தொன்னிலை யிறைவா ழில்லிற் புகுந்தனன் றுளக்க மின்றி. 31

மரகதப் பசுங்கி ளிக்காற் றரளமா மஞ்சத் தம்பொற்
றிரைபுடை சூழ மாலைச் சீதள விதானத் தின்கீ
ழிருநிலத் திறையி ருந்தா னெண்ணிலா மைய லோடுங்
கிரிகைபோ லினிது தீட்டுங் கிழிதனை நோக்கிக் கொண்டு. 32

சிகையவிழ்ந் திடமுன் வீழுஞ் செந்நிறக் குவளைத் தோடு
புகரருந் துயிலில் பார்வைப் பூங்கடை பொருவக் காதின்
மகிழ்வொடு தரித்த வொற்றைத் தரளமா மணியின் சோதி
மிகுமயல் கொளவெ ளுத்த கவுளிடை விரவிக் கூட; 33

வனசநூல் புரியுங் கொற்ற மார்பினூல் புரளுந் தோறும்
புனையுநித் திலத்தா ரோடு புரளமேற் றரித்த வாடை
யுனலரு மாரத் தேய்வை யொத்துறழ் முகத்தைத் தானை
நனைமலர் தளிர்மேல் வைத்து மெலிவதை நாடி நின்றேன். 34

தரைமுழு தாளுங் கொற்றத் தாரயில் வேந்த னுக்கெங்
கிரிகைபா லன்போ மற்றைக் கிள்ளையங் கிள்ளைச் செவ்வா
யரிவையர் தம்பா லன்போ வென்றென தகத்தி லெண்ணி
மருவுறு தயில தீப கம்பத்தின் மறைந்து பார்த்தேன். 35

உயிர்த்திடுங் கண்ணை மூடு மொளிர்முடித் தலைய சைக்கும்
வெயர்த்துநாற் றிசையு நோக்கு மெல்லென நகைக்கு மேங்கு
மயிர்த்தொகை சிலிர்ப்ப வாடு மலர்க்கர மறிக்கும் வீழு
மியற்படு மின்னே யென்னு மிரங்குமன் மதன்றன் கோலால். 36

இப்படி மதிம யங்கி யிகல்புரி படைத்தெவ் வேந்தர்
கைப்பது மங்கள் கூம்ப வருநில வரசன் காம
வெப்புறு தலினுற் றன்பான் மேவுமோ வியமா மின்னை
மெய்ப்பட நோக்கி நோக்கி விளம்பினன் விளித்து மாதோ. 37

மதியிடை யிருக்கு மாம்பன் மலர்ந்திடா திருப்ப தென்னோ
வதிகமென் சொர்க்க மீந்தா லமுதுபெற் றுயிருய் யேனோ
வெதிர்புரை களபப் பைந்தோள் மெல்லியு னுள்ளங் கல்லோ
முதிர்பிழை செய்த துண்டோ முறுவல்செய் தருணல் காயே. 38

அளியினஞ் சுழல்வ தற்கா யானனந் திருப்பல் போலுங்
களிதரு மின்னார் தம்மைக் கடிதழைத் திடுதல் போலுங்
கிளியுறக் கனிப றித்தல் போலுமென் கிலேசந் தீரக்
குளிரநோக் கினையன் றின்று கொடுத்தனை மதன்வா ளிக்கு. 39

வஞ்சிநி னீன்ற தந்தை வன்குணங் குயத்தி லன்றி
நெஞ்சிடை யிருத்த லாமோ நின்னனை குடிலந் தன்னை
யஞ்சன நிகருன் கோதைக் குழலிடத் தமைப்ப தன்றிச்
செஞ்சுரி தத்தில் வைத்தல் சீரிதோ வருள்செய் யாயே. 40

முதிரெழிற் குழல்கண் மூரல் முலைகடி தடங்க வானே
டெதிரிலொண் புறங்கா லாக மிந்திர நீலம் பாணஞ்
சிதைவறு வயிரம் வெற்புத் தேருயர் கரிக்கை யாமை
கதிர்மணிப் பாவை யர்முன் கடினமெவ் வாறு நீங்கும். 41

என்பன விறைசொ லக்கேட் டெழிலமு தோத திக்க
ணன்பொடு மிதந்தாற் போலு மனந்தநாட் புரிநன் னேன்பின்
மன்பலங் கிடைத்தாற் போலும் வளர்சக மூன்று மெய்தி
யின்பத மடைந்தாற் போலும் யானுளங் களித்து நின்றேன். 42

இன்னண முரைத்தி ருக்கு மேந்தலோ டினிது நந்தங்
கன்னித னியல்பை யெல்லாங் கழறிட வேண்டு மென்றுங்
குன்னியன் னவன்பொன் மஞ்சத் துறும்பல பாவை யோடு
நன்னிலைப் பாவை யாகி நின்றிவை நவிறல் செய்தேன். 43

நிருபநீ தூறு கின்றாய் நேரிழை தன்னைத் தானே
வருவள்கொல் சுதந்த ரந்தா னுளதுகொல் மாறி லாத
பெருமய லளித்தெண் ணுதி [ர]ங்குமுன் (கட்)பிழைய லாதெம்
மரிவைபா லுளதோ சொல்வா யலங்கலங் குவுவுத் தோளோய். 44

சாற்றரு மாயை வல்லர் தங்கடங் கருமம் பார்ப்போர்
மேற்றிக முளியி லாதோர் வேளைக்குத் தக்க செய்வோ
ராற்றலம் புருடர் கண்டா யவர்தமுண் மதாந்த ராகி
நாற்றிசை புரப்ப ரானு லவரையு நம்ப லாமோ. 45

என்றியா னுரைப்பக் கேட்ட விறையவ னதிச யித்து
மன்றலங் குழலும் வெய்ய மதனவங் கியிலென் போல்வே
கின்றனள் கொல்லோ வந்தோ வெனமனக் கிலேச மெய்தி
முன்றிகழ் வேள்தன் போரான் மெலிந்துளே முன்ன லுற்றான். 46

சேணுறு முலக மாதோ திரைக்கடற் புவனி மாதோ
வேணுறு பிலத்தின் மாதோ கிரிகைபா லிணங்க ணங்கோ
காணரு மன்னுள் செய்தி கழறவந் தருளோர் மஞ்சு
வாணியோ விந்த மங்கை மனக்கருத் தறிகி லேனால். 47

மனத்தினைக் கிரிகை யென்பால் வைத்தது கெட்டே னெண்ணே
னினிக்கழை வில்லி கோலை யிகந்திடுங் காமத் தீயும்
புனற்கட லுலகில் யான்செய் புண்ணியம் பலித்த தம்ம
வெனக்குளந் தளரேன் மங்கை யினைதலுக் குளதோ வின்றே. 48

மெலியுமெ னுளத்தி ருந்து மேனிகன் றினளோ வன்றி
வலியுறு மெனைத்த னெஞ்சில் வைத்தலால் வாடி னளோ
வலைவுறு யானே தானு யமைந்திடுந் தன்மை யானே
நிலைதளர்ந் தனளென் றெண்ணி யணைமிசை நெடிது சாய்ந்
[தான். 49

சாய்ந்தமன் னவனைக் கண்டு தருக்கியுட் டாப முற்றுந்
தீர்ந்திட வருள்வ தாரு வதிசயந் திகழ்வ திந்த
நாந்தக நிகர்கட் கன்னி நல்லடை யாள மாகி
வாய்ந்ததா மென்கை யார மாலையைக் களத்திற் சேர்த்தேன். 50

சேர்த்தவெண் டரள மாலைச் சிறப்பினை யிறைவன் கண்ணுற்
பார்த்திது நம்பால் வந்த பரிசெனோ விலையி லாத
தேத்தரு மிறும்பூ துள்ள தெவர்கொணர்ந் தனரோ தாபந்
தீர்த்திடுந் தருக்கி லென்று சிரமசைத் துவந்த பின்னர்; 51

இந்தநன் னித்தி லந்தண் மாலையு மிலங்கு நந்தஞ்
சந்தவோ வியமின் கொங்கைத் தனிமணித் தாரு நோக்கிச்
சிந்தைசெய் திடிலொப் பான செயலினற் கிரிகை கொங்கைச்
சுந்தரத் தாரே முன்னுங் கண்டதுண் டெனத்து ணிந்தான். 52

ஐயம தகன்ற பின்ன ரகத்தினிற் கண்ணி லொற்றுங்
கையகத் திருத்தும் பார்க்குங் கண்டபீ டத்தி லேற்று
மையிலம் மணித்தார் தன்னை மகிழ்ந்துட லெங்குஞ் சேர்க்குஞ்
செய்யகோன் மன்ன னங்கந் திகழ்குறு வேர்வ ரும்ப. 53

நான்றனக் களித்த முத்த மாலையை நன்னூல் வல்ல
சான்றவர் புகழ்தன் கையாற் றடவிரா கங்கொ டுத்துத்
தேன்றரு தோய றாங்கு முழவுறழ் திணிபொற் றோளா
னன்றரு ளொழுகுங் கண்ணா னோக்கியொன் றறைய லுற்றான். 54

அகக்களி யுதவுங் கோதி லாரமே கிரிகை நீடு
சுகத்துட னுறைகின் றாளோ சுகாதிகள் சுகமோ சூழ்ந்த
நகக்குய மடவர் யாரு நன்குட னிருக்கின் றாரோ
தொகைப்பட வுரையா யுன்னைத் துணைக்கரங் கூப்பு வேனால். 55

என்னரும் புண்ணி யத்தி னெழுத்தின திழுக்க மென்கோ
வென்னுடைத் தாபந் தீர்க்க வருசுவைத் தாரை யென்கோ
வென்னற மெனுந்த ருப்பா லிலங்கரும் பென்கோ வுன்னை
யென்னெனப் புகழ்வேன் கன்னி யிளமுலைத் தரளக் கோதாய். 56

கிரிகைதன் குயத்தின் மேவு கிளர்சுகத் தினைவிட் டென்பான்
மருவிய புன்கண் டீர்க்க வருமணி யார மேயுன்
விரிகுண முரைக்க வற்றோ மெலியரைப் புரக்குந் தூயோர்
பொருவிறஞ் சுகத்தை யெண்ணா ரென்பது புதுமைத் தன்றே. 57

மங்கையர்க் கடிந்து கன்னி மனையிலன் றான னத்திண்
பங்கயங் கவிழ்த்து நின்னைப் பார்த்ததொத் தென்னைப் பார்த்தா
ளங்கவள் கருத்தை யெல்லா மறிகுவை யொளியா தெற்குச்
சங்கையற் றிடவி ளங்குந் தரளவெண் கோதா யோதாய். 58

கன்னியைத் தழுவு தற்கோர் காரண மாகி வந்தாய்
பன்னரு மார மேயென் பாணியாற் றடவும் போழ்தில்
இன்னலை யுறுதி யன்று ளிளங்குயத் தணையுந் தோறு
முன்னையான் றுவளப் பண்ணே னென்றுமே யெண்ணு வேனால்.

இப்பிவன் குகையி னுற்று மினியமா தவத்தை நீத்தும்
வைப்புக ளூசி மீது வைகியு மார மேநீ
செப்பருங் கிரிகை கொங்கை சேர்ந்தனை யுனைப்போ லெற்கு
மெய்ப்பட வெய்து மோகாண் விடுத்தமா வனத்தி னேனே. 60

நயனுறு கிரிகை மாலாய் நகையென வெண்ணப் பெற்றாய்
கயல்விழித் துளியாய் நீயுங் கருகினை கொல்லோ சொல்லாய்
அயர்விலம் மின்னும் யானு மணைமிசை யணைந்து நின்னை
வெயர்வையால் விளங்கச் செய்வ தென்றுகொ லென்றான்
[வேந்தன். 61

வேந்தனீ துரைத்த பின்னர் மிகவெனை நோக்கி யேந்தாய்
வாய்ந்திடு மணித்தார் நல்கி மகிழ்வுநீ மறைத லென்னை
சாந்தமோ டென்மு னின்று சாற்றுதி தலைவன் வாழ்வ
தேய்ந்திடு தலைவி வாழ்வ திருவையா லன்றோ வென்றான். 62

என்றசொ லிறுக்கு முன்ன மிராமன்முன் கிடந்த கல்லோர்
மன்றலங் கோதை யான வாறுபோற் பாவை யாமென்
மின்றிகழ் வடிவு நீத்து வேந்தனைத் தொழுது நின்று
குன்றுறழ் புயத்தோய் கேட்டி யென்றிவை கூறி னாளால். 63

நின்னுரை தவறு மோயா னெடுங்கிரி மகடன் பாங்கி
தொன்னிலை மஞ்சு வாணி யாமவ டுயரு ரைக்க
வுன்னிடை வந்தேன் மற்றவ் வொண்டொடி தனைவே ளென்னு
மன்னுமா மறலிக் கீந்தாய் மறந்துபின் பாரா துற்றாய். 64

வாழிய வரச ருக்கு மறப்பதுண் டாயி னுஞ்சற்
றேழைக டமைம றக்க லாகுங்கொ லேந்தா லுன்னைக்
கோழிலை யரம்பை யன்ன செழுந்தொடைக் கொவ்வைச் செவ்வாய்
மாழையுண் கண்ணி சொன்ன வாறெலா மினிது கேண்மோ. 65

## வேறு

பிறங்க லெறிந்திடு நின்கதை மங்கையர் பேசும்போ
தறிந்தருள் கன்னி தளர்ந்தச லஞ்சொ லருந்திண்மை
யுறும்பரி சுள்ளத் தைச்சர ணங்கொ டுலைந்தோட
வெறிந்தவ னெஞ்சு கரைந்திடு மாறிலை யெனநொந்தாள். 66

ஏழைய ருக்கரி தாகுத லானு மிரும்போகத்
தாழுந ருக்கெய் துதலா னும்ம னைவோர்க்கும்
வாழிய நேயந் தருகுத லானும் வசுவென்றே
தாழ்வி லரும்பேர் பெற்ற தவற்குத் தருமென்றாள். 67

ஏவு மிடந்தொறு மேகுந் திருவையு மெண்ணுதா
னுவகை கின்ற படிக்கெளி தாய்வரு நல்வாணிப்
பாவையை யோரொரு சொல்லி னிவத்திய படைவேலா
னுவல் கெடுத்தெனை மேவுறு மோவென வழுதாளால். 68

நுவலரு மாமைத் தருவுறு தரணியை நொய்தாக
நவில்பவ னொருதன் கைப்பற் றியபுகழ் நன்மாதை
யவனிவி ணெண்டிசை தோறுஞ் செலவிடு மவன்வந்தென்
கவலைகெ டும்படி யணைவதி லென்று கலுழ்ந்தாளால். 69

இன்னு மனேகம் பெண்கள் விரும்ப விருக்கின்றே
னுன்னரு மாதவ மில்லே னுக்கெய் துறுவானோ
மின்னனை யீர்கிடை யாத பொருட்கு விருப்பாத
னன்னிலை யாகிய பேருணர் வோவென நைந்தாளால். 70

காணுதி யென்று மொழிந்திடு போதொண் கனிவாயில்
வாணகை வந்துற மெய்புள கங்கொடு மகிழ்வேந்தி
யேணுறு மாதுரி யம்பெற வென்னுள மிதமாகத்
தூணுறழ் தோளின னாதர வாலொரு சொற்சொன்னன். 71

அற்றமி லசலம் வன்மைத் தன்றோ வதுதன்னை
யெற்றிய வன்ற ளதினுந் திண்ணிய னெனன்மெய்யே
மற்றவன் வலியைக் கண்ணுற் போக்கி மயனல்கும்
பெற்றிய ளெத்திண் மையளோ பாராய் பிணையன்னாய். 72

ஆசைகொ.........து வசுவென் றோதுத லறிவன்றவ்
வீசொளி வசுவைத் தான்விலை யாக மிகக்கொண்டு
நாசமில் பாவப் பாக மகற்றோர் நதிதந்த
தேசுடை மணியொன் றங்க ணிருக்குஞ் செயலானே. 73

ஏதமி றிருவைத் தரணியை வாணியை யெண்ணேனென்
றோதுத லென்னே நித்திய மாகி யுறுசீரு
மேதில கண்ட வுருவமு மின்சொலு மிகவாத
மாதை யணைப்பவன் மற்றவர் தம்மை மதிப்பானோ. 74

சொல்லாய் மென்மொழி மாதே யென்றிறை சொல்லக்கேட்
டெல்லாம் வல்லை சொல்லரி தோநிற் கெம்மானைப்
பொல்லா வேள்கைக் குறல்செய் குதியோ போரேறுன்
மல்லார் தோளிற் சேர்க்குதி யோசொல் வாயென்றேன். 75

என்றலுன் சிந்தைக் காதலு மாகத் தினைவுந்தா
னுன்றன் கண்ணுற் கண்டனை தெளிவிங் குன்னாதே
யின்றிங் கையங் கொண்டொரு பயனு மிலாவெஞ்சொல்
ஒன்றுஞ் சொல்லே லினிமத னணையெ னுயிர் தந்தோய். 76

அன்னை பிதாமென் சொல்லினை மீறு தமைகின்ற
கன்னி கருத்தை யறிந்தனன் மோகக் கடனீந்த
நின்னரு ளென்னுந் தோணி கிடைத்தது நிலமின்னே
புன்னவை யில்லா வின்பக் கரையிற் புகுவேனல். 77

மயலற நெருநற் போதொரு தூதன் வந்தென்முன்
இயன்மக வானுன் னினைவை யறிந்தன னினிமேலோ
யுயர்தரு கோலா கலனிடை யும்ப ருடன்சென்றே
நயனொடு பெண்கேட் டருளுவ தென்று நவின்றானால். 78

அந்த வியன்சொற் கேட்டபின் மதவே ளணிவில்லால்
உந்திய கணைகட் கஞ்சா துயிர்கொண் டுறைகின்றே
னிந்தநன் மொழியைக் கன்னிகை பாற்போ யிப்போதே
புந்தி தெளிந்திட வோதுக வென்று புகன்றன்பால்; 79

என்கை யிடத்திவ் வாழி கொடுத்தா னிறைவன்றா
னன்குட னென்றோர் கன்னல் செலாமுன் னவைதீர்ந்த
மின்கொளு மிடையீர் வந்தன னென்றாள் வியன்மேவு
மின்கனி நிகர்வாய் மென்மொழி யெனுமோ ரியன்மாது. 80

வேறு

மஞ்சுவாணி, தன்முன்பு வைத்த ஆழியைக் கண்டு
கிரிகை மகிழ்ச்சியுறல்

ஆங்கவ ளிருந்து மிணைதவிர் மணிப்பொ
னாழியை யெடுத்துமென் குழலென்
றோங்கிய கரிய முகிலையும் விழியென்
றொளிர்சரோ ருகத்தையு நெருங்கு
பூங்குயத் திகிரிக் குருகையும் விளங்கப்
புரிந்தன ளன்னதை யுலகில்
வீங்கிருள் விரித்து வல்லிருள் பருகும்
விண்மணி யென்னவே குறித்து. 81

கன்னிகை யன்ன வாழிமீ திலங்கு
கண்கவர் வசுப்பெயர் தனைக்கண்
டுன்னரும் வசுவைத் தரிசனம் புரிந்தாங்
குளத்திடை மதித்துமெல் விரலில்
அன்னதைப் புனைந்தாள் புனைந்தவப் பொழுதே
யாடவர் திலகமா மரசன்
றன்னருங் கமலக் கரம்பிடித் ததுபோற்
றருக்கொடு புளகமுற் றனளால். 82

கிரிகை வசுவினை மணக்க விரும்பியிருத்தலைக்
கேட்டு அவள் பெற்றோர் மகிழ்தல்

அரசனை யொருநாட் கண்டுதன் பதியென்
றங்கனை மதித்துமான் மிகுத்த
விரகினை யொருத்தி போயுரைத் திடலும்
வேந்தடை யாளமொன் றளித்துப்

பெருமய லுடனுண் டிருந்தது மகவான்
பிறங்கியல் வதுவைசெய் விக்க
வருதனிச் செயலு மரிவைய ருரைப்ப
வாழ்ந்திரு குரவரு மகிழ்ந்தார். 83

விரகத்தால் கிரிகை அடைந்த மெய்விளர்ப்பு நீங்குதல்

மங்கைத னிதய கமலமுண் மலர
வந்தருள் வசுவெனு மிரவி
பொங்கொளிக் கரமுத் திரைதனைக் கண்டு
பூங்கொடி தனைமிக வருத்தா
தெங்கணும் பரந்த தாரகைக் குழுவோ
டெழுந்தொளிர் திங்களின் கிரண
மங்ககன் றதுபோ லகன்றது விரகத்
தான்மிகக் கலந்தமெய் விளர்ப்பு. 84

கோழிகள் கூவுதலின் வருணனை

மகபதி யெமதோ ருருக்கொடு கால
மயங்கமுற் கூவிய பொழுதி
னுகலரு மொருமா தவன்புக லுரையா
லுருவுகெட் டகன்றிட [லா]னே
[அகமதி லுணர்ந்]தே காலமுன் றினையுந்
திடப்பட வுணர்த்துவ தென்று
வகைபெறப் புகறல் போற்றலை நிமிர்த்து
வாரணத் தொகுதிகூ வியதால். 85

காலைக் காட்சியைத் தோழியர் கிரிகைக்குக் கூறல்

இந்துநல் விரவாம் வல்லியை மணந்தே
யுதிர்ந்திடு மிணையில்சந் திரிகைச்
சந்தனத் தொடுவிண் மனையைவிட் டகன்றுவத்
தக்கவவ் வமையமா மிருளை
முந்துமப் பொழுதற் றுதிருடுத் தொடைவெண்
முத்தினை விரைவினிற் பொறுக்கிப்
புந்தியி னினைத்துக் குவித்ததொத் தெழுந்த
புகரினைக் காட்டின ளொருத்தி. 86

இரவுதா ரகைநன் னீலமொண் கிழக்கா
மிவையென விருப்பலோ யானென்
றரியதண் ணிலவு தன்னுடை யிறைவற்
கபாயமொன் றுற்றிடு மளவில்

விரவியாங் கவனை யகன்றிடா தணைதல்
வேண்டிவன் னியிற்கலந் ததுபோல்
மருவிய கிழக்கு வெளுத்திடு மியல்பை
மகிழ்வொடு காட்டின ளொருத்தி. 87

தாரகைப் பயிர்வான் வயலிடை விளையத்
தண்ணிலாப் புனல்வறந் ததற்பின்
சீரிதா யறுத்து வைகறை யுழவன்
செழுமயன் றூற்றிய பொலிபோ
னேரறு மெழுவாய்த் திசைமிக வெளுத்து
[முறையு]றக் கிடந்தது பயனற்
றோருமொண் மதியந் தூற்றிய வமையத்
தொழிந்திடு படி[யை]யொத் ததுவே. 88

திருமனைக் குறுங்கா லிருபிறப் புடைய
திகழினத் தொலிமிகப் புனிதம்
புரிதரு மனுவாய்த் தடமெறி திவலை
பொலிவுறத் தெளித்திடு புனலாய்
மருவல்கண் டினிய நேமியென் றுரைக்கு
மாண்புடை யிருபவச் சாதி
விரைவினி லொற்றை யெதிர்வர வொணுதென்
றினைந்தெதிர் வந்தன விளங்க. 89

மதனெனும் புளின னேமியம் பெடையைத்
தீவக மாகவைத் திடலு
மிதமுற வொலிப்பக் கேட்டிடுஞ் சேவ
லென்பதங் கெளிதில்வந் தளவிற்
புதுமையா முடலோ டுடலினைப் பொருத்திப்
புண்டரீ கத்தில்வைத் திடாமற்
றுதுகல கலென முழங்கலாற் குடம்பைப்
புட்குல மகன்றன பறந்து. 90

இரதிதன் கொழுந னெருகடுங் கணையா
லிலகுமூ வுலகையும் விறல்கொண்
டரிய[ன] வான மலர்மா மழைசொரிந்
திடவந்தக் கணைநன் கொடுதன்
உரியமுத் திரையிட் டாங்குவைத் திடலொத்
திருந்ததா லொழுகிசை முரலுங்
கரியவண் டொடுசேர்ந் தசைவிலா திணையில்
காவிமென் மலர்குவிந் ததுவே. 91

வேறு

மரையெனும் பதங்க நற்பெண் மதித்தலில் வைத்த நன்கே
சரமெனுங் கருவை மூடிச் சார்தலான் மலரும் பேறு
வரவரி யென்னும் பிள்ளை மலினத்தோ டுதித்த தம்ம
வுரியகா தலரை யெல்லா முடற்றிய தோடத் தானே. 92

வேறு

காலமா கியநற் போதமா விருடி
கருதரு முதயவெற் பிறைக்குங்
கோலமார் குணக்கென் றிடுமக டனக்குங்
கோதினே மிக்கித முடைத்தாய்ச்
சீலவா னவர்த மஞ்சமே முழுதுந்
திரண்டவோர் மதலைவந் துதிப்பான்
றூலமொத் தத்தி வன்னியி லுடுவோ
தளமெனு குதிபுரிந் தனனால். 93

குமுதவா தார மாகியுற் றதனாற்
கோதில்பூந் திருமகள் பொரூது
கமலமா மனையை மூடிடத் திறக்குங்
கருமமொன் றியற்றுவ லெனவவ்
வமயமா முகுந்த னிடவிழி தனைமூ
யணவல நேத்திரந் திறந்தாங்
கிமகர னொளிகெட் டகன்றனன் பரிதி
யென்பவ னெழுந்துதித் தனனால். 94

பொன்னுரை கடுக்குஞ் சுணங்கணி முலையாய்
பொருவிலுன் றூதையை வினவி
யுன்னையவ் வசுவுக் கியன்மணம் புரிவா
னுறுமக பதிக்குமேற் பிடித்த
தன்னிகர் செழும்பட் டாதபத் திரம்போற்
றனிக்கதி ருதித்ததா லதனிற்
பன்னரு மணித்தார் கிரணமொத் தனநீ
பார்த்தியென் றுரைத்தன ளொருத்தி. 95

என்பன மடவா ருரைத்தலும் வினவி
யிணையில்சீர்க் கருங்குழற் கிரிகை
துன்பம தகன்று மலரணை யொருவி
தூயவா னனமலர் மலர்ந்தாங்
கன்பொடு கரும முடித்தருங் குருவைத்
தொழுதிருந் தனளவ டனக்கு
நன்பிதா வதுவை செய்திடக் கருதி
நவையற வுறையுமப் பொழுது. 96

தூதிவரு படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 727.

## 25. இந்திரன் வரு படலம்

இந்திரன், தேவர் முனிவர் முதலானோர்
புடைசூழக் கிரிகை யிருப்பிடம் வருதல்

முந்துற மந்தா ரத்தார் முருகெழுந் ததுபின் றேவ
துந்துபி திடுதி டென்று துவைத்தது பின்னோர் சோதி
வந்தது திகுதி கென்று மற்றதின் பின்னை மாதர்
தந்திரி யோசை வந்து சார்ந்தது குழுகு மென்ன. 1

பின்னரோர் கணத்தி லீது பேசரும் விமான பந்தி
மன்னரு மிவர்க டேவ ரிவையவர் படிவக் காந்தி
முன்னரு மிவர்ப டாமென் முலையர மகளி ராகு
மென்னவிங் கறிய லான யாவர்க டமக்கு மாதோ. 2

அரிமுத லெண்மர் தாமு மரியிவர் பரியுந் தூய
வரிபெருங் கரியு மான்ற வரிவிமா னங்க ளுங்கூர்
அரிவிழி மகளிர் யாரு மரிமுகர் முனோருஞ் சேர்ந்தார்
அரியவம் பரத்தின் மிக்க வகிலசித் திரங்க ளாகி. 3

கிரியிறை சிரத்தி லோசை கிளர்வுறக் குதித்தா ளென்று
தரைமுத லுரைக்குந் தூறு தவிர்க்கவோ கிரியி றைப்பால்
ஒருதிரு மெல்லி யாகி யொய்யென வந்தாள் கங்கை
விரிவிழி பான லுந்தாள் வனசமு முடைய ளாகி. 4

முற்பதந் தூக்கி வைக்கு முறையென விறங்கிற் றண்டா
பொற்பரி தன்கைத் தாக்காற் புவியிடை விழுகொண் மூவைத்
தற்பெருங் கொம்பாற் றாக்கத் தாழ்வது போலி றங்கிற்
றற்பொடு மகவா னேறு மடல்கொடு கரடக் குன்றம். 5

வனப்பத வுகிராற் சென்னி வளைந்துதா நிலத்தைக் கீறல்
எனத்தனி விண்ணின் மாத ரிறங்கினர் செங்கை வீசி
யினத்தொடேழ் முனிவர் தாந்த மிரேசிக முயற்சி போல
முனற்கருந் தண்டு கொண்டு முடிச்சடை யவிழ வந்தார். 6

அந்தர வுலகங் காக்கு மமரர்கள் யாருங் கூடி
வந்தனர் விமானத் தோடு மணிமய மான சோதிச்
சுந்தர விரத பந்தித் தொகையிறங் கினநி றைந்து
கந்தர நிமிர்த்து நின்று காசினி யோர்மே னோக்க. 7

தேவர்கள் வருகையினால் அங்கு ஏற்பட்ட நிகழ்ச்சிகள்

அரிக்குநல் லரிக ரிக்குக் கரிதிற லாளுக் காண்மின்
விரிக்குமொண் மணிக ளின்பால் விளங்குதல் கொண்டோ விந்த
வரைக்குவ டசைந்த தில்லை மகற்குநற் சேதி நாடன்
பொருட்புரை சரணந் தாக்கப் பொறுத்தது நடுங்கற் பாற்றோ! 8

வானவர் வரக்கண் டஞ்சி மாக்கள்குப் புறவெ ழுந்த
மேனிமிர் செங்கற் றாளும் விரவுபன் மணியி னெல்லுந்
தானவிண் ணெழுதல் விண்ணோர் தம்பதிக் கவன்சா பத்தைப்
பூநக நிறைகா ணிக்கை யாய்க்கொடு போதல் போலும். 9

முகிலிறை மேவத் தானே யவிந்தது முனிவ னத்தீ
மகிழ்வொடு வயிர வாளி வரக்குகைத் திமிர மாற்ற
சகமெலாம் புரந்து காக்குந் தன்மைய னுறக்க லந்த
பகர்விலங் காதி சாதி பகைதவிர்ந் தொன்றுக் கொன்று. 10

பருவமோ ராறுஞ் சேவை பணுமவன் வருத லானே
யொருவின மயிலின் கால மோதருங் குயிலின் காலம்
விரிதரு சராச ரங்கள் பணிபவன் மேவ லானே
மருவுறு தருக்கள் வல்லி மலர்கனி யுகுத்த மாதோ. 11

கோலாகல இறைவன், இந்திரன் முதலியோரை
வரவேற்று நல்லுரை கூறல்

விழுமொலி யருவி நீர்தாள் விளக்குநன் னீர தாகப்
பொழிமல ருதிர்வ தன்பு புரியருச் சனைய தாகப்
பழுதறு மணிக்கு வட்டைப் பார்ப்பது பூசை யாகத்
தொழுதுநின் றதுசி றந்த தொல்வரை மகப திக்கு. 12

பின்னரெம் நாவ னுதி யமரர்க்கு முகமன் பேசி
மன்னுமா முனிவர் பொற்றாள் வணங்கியொண் கங்கை தன்னை
முன்னுறப் புகழ்ந்து தெய்வ மொய்குழ லாரை நோக்கி
நன்னய மொழியி னனே விளித்தன னகக்கு லேசன். 13

கிரிகையை அழைத்து தேவர்களை வணங்கச் செய்தல்

என்குல தெய்வ மாதர்க் கியலரா சுயர்மே னைக்கு
நன்குறு மிமவா னுக்குஞ் செல்வமை நாகன் பிள்ளை
யன்புறு மருகி யீறி லாற்கென மடவார் போற்றத்
தன்புதல் வியைப்பொன் னுடர் தாள்பணி வித்தான் வெற்பன். 14

கிரிகையின் எழிலைக்கண்ட தேவர்கள் தன்மை

வெங்கட லமுத முண்ணும் விண்ணவ ரிமையாக் கண்ணு
மெங்கணும் புகழ்ப ரப்பு மிந்திர னனேகங் கண்ணு
மங்கிடா துற்ற பேறு பெற்றனர் மகிழ்வி னோடு
தங்கண்மு னின்ற வெற்பின் றனையைதன் னெழிலை நோக்கி. 15

கிரிகையின் வனப்பைக் கண்டு தேவமாதர்கள் அடைந்த நிலை

கன்னித னெழிலைக் கண்டு கழிதரு மெழில ரம்பை
சென்னிகீழ் வளைத்து நின்றாள் செறிவன வரிணி யாங்குப்
பன்னரு மருண்ட பார்வை படைத்தனள் குறைவு மாசு
மன்னின ளகன்று ளாண்டு வருசசி ரேகை யென்பாள். 16

உயர்புகழ் மஞ்சு கோடி யுரத்தசொ லாற்று ளெம்மை
வியனுறு தாபந் தன்னற் கரைந்தனள் விபுதர் யார்க்கு
மயலருள் இன்ற சானு மதியருங் கல்லாய் நின்றாள்
புயறவழ் வரையின் பிள்ளை பொற்பினுக் கழுக்கா றெய்தி. 17

நறையுரு விளர்ப்ப டைந்தா ணவிலரு மெழில்கொ டாரை
யறிவகன் றிருந்தாள் மிக்க மதாலசை முயற்சி யற்றாள்
மறிவிழிச் சித்திர ரேகை மதிமுகங் கருகி நின்று
ளுறுசுபா ணனைசி றந்த கிரிகைமு னுளமு டைந்து. 18

கங்காதேவி கிரிகைக்கு ஆசி கூறல்

இருவருந் தேடிக் கானு விறைசிரப் பணியாய் மிக்க
பரவரும் புனித மாய்வல் வினைக்கொரு பகையாய் வைகு
மொருதிருக் கங்கை மங்கை யோதருங் கிரிகை தன்பான்
மருவியே தழுவி நின்று மாற்றமொன் றுரைக்க லுற்றாள். 19

கன்னிநி னன்னை தூய காசினி நதிக ளுக்குட்
பன்னருஞ் சிறப்ப டைந்தாள் பரிவொடு நின்னை யீன்ற
நன்னிலைத் தாதை தானு நாகமன் னவர்த மக்கு
முன்னத மான தன்றி யாரினு முயர்வு பெற்றான். 20

அடியினிற் றாழ்ந்து நின்ற வசலமொன் றுடைய னாகித்
தடையில்கல் யாண ளுகித் தலைமதி யனுமாய் வைகு
முடையலை யரித னன்பாற் கைப்பிடித் துமையைப் போல
விடலரு மேக மாகி யுறையென விளம்பி னாளால். 21

கோலாகலவரசன் இந்திரனைப் புகழ்ந்துரைத்தல்

அழிவறு கங்கை யிவ்வா றறைதலுங் கேட்ட பின்னர்
விழைவெனுங் கடலு ளாழ்ந்து வியனுல கமரர் போற்றும்
பழையவன் றன்னை நோக்கிப் பாணிதன் சிரமேற் கூப்பி
யெழில்விசும் பணவு திண்கோட் டிமகிரி மைந்தன் கூறும். 22

வேறு

கனமுனது வாகனமொண் கற்பகக்கா
வுன்காநற் காம தேனு
வுனதுபசு மிளிர்சிந்தா மணியுனது
மணியாகு முனக்கி யானிங்
கினிதுதவு மருக்கியமு மென்றோடையு
மென்பொருளு மெழில்கு லாவு
புனிதமணி யஞ்சலியும் போதுமோ
வுலகுபுகழ் புலவ ரேறே! 23

செம்மைதரும் யோகவிருப் படைந்தாற்றி
ணிடைபடிந்துந் தெறுவாள் வேந்தன்
வெம்மைதனைப் பொறுத்துமுயர் பக்கமகன்
றிவண்வந்து விலகா துற்று
மம்மையருட் குரவனைவிட் டியற்கன்னி
வனந்தனைக்கண் டமைந்து மீண்டு
மெய்ம்மையொடும் யானிருத்த றவமாகக்
கருதினைகொல் விரைந்து வந்தாய். 24

ஏழைக்குத் துணையரிய தெய்வமே
யெனவுலக மியம்பன் மெய்யே
தாழ்வற்ற வசுபாத நகப்படையா
லடிபட்டுத் தாளி லாது
பீழைப்பட் டுறைவேன்மே லமரரொடு
சுரநதியைப் பெரிதுங் கொண்டு
வாழ்த்தாவந் தனைபேர்பெற் றனன்மக்கட்
செல்வமொடு மலைச்சா திக்குள். 25

இந்திரன் வரு படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 752.

## 26. மணம் பேசு படலம்

கிரிகைக்கு வசுவேந்தனே கணவனுதற்கு
ஏற்றவன் என்று இந்திரன் கூறல்

என்னுமுய ரசலனெடு நாற்றந்தக்
களிறுடைய விறைவன் கூறு
மன்னியர்போ விப்படிநீ சொல்லுவதெ
னுன்றந்தை யழல்வேள் விக்கண்
முன்னவிபா கம்பெறுவோ னுனக்குமலைக்
குலங்களுக்குண் முதன்மைப் பேறு
மன்னுவதிங் கரிதோநன் மேனையெனுஞ்
சுத்திதரு மறுத்தீர் முத்தே. 1

சேதிபர்கோ னடிநகத்தா லடிபட்ட
வுன்சிறுமை தீர்க்க வந்தா
ளோதருமிக் கிரிகையெழிற் றிருவையருள்
கடலெனவு முமையைப் பெற்ற

பூதரமென் னவுமிவளை யுலகுதொழ
வேற்றவொரு புருடற் கீந்து
தீதறுமா னந்தநலம் பெறக்கடவை
யெண்ணினிய செயலி ஞனே. 2

எழுதரிய சவுந்தரியம் பெற்றுறுமுன்
மகளாகு மிவளுக் கேற்ற
பழுதிலருந் தலைவனையொண் குணக்கடலை
யென்சகனைப் பகரு கேனுண்
மகிழ்வினொடு கேட்டிகுற மடமகளி
ரிறுகுதன வரையிற் பூசு
மகருமணந் தனைச்சுரர்க ளுசிமடுத்
தருந்துமுய ரசல வேந்தே. 3

மலரடியிற் ருழ்ந்தமலை யுடையனுமோர்
கலியாண மயனுஞ் சீர்சால்
இலகுதலை மதியனுநல் வசுவாகுந்
தரணியிறை யவனே கங்கை
சொலுமுறையுந் தவறுமோ கலியாணி
யாமிந்தத் தோகை தன்னை
யுல்குபுக ழுவனுக்கே யிந்தரிய
செல்வமெலா முறுதி மாதோ. 4

மூவுலகும் புகழ்ந்திடுநற் சரித்திரமுள்
ளவன்புவனி முழுதுங் காக்குங்
காவலவ னியன்மருக ளுகிவர
நீயுளத்திற் கருதி முன்னந்
தாவிலருந் தவமேது செய்தனைகொல்
வலியினொடு தளிர்பொற் ருளால்
ஓவெனநின் றுதைத்தவனே பணிகுவனென்
ருலிதினு முயர்வென் வேறு. 5

இந்திரன் சொற்களுக்கு உடன்பட்டுக்
கோலாகல விறைவன் கூறுதல்

என்பனவிந் திரனுரைப்ப மகிழ்ந்துபனி
வரைபுதல்வ னியம்பு மெம்பாற்
றுன்பமெனுங் கடல்கடக்கத் தோணியா
யுதித்தருளித் தோகை தன்னை
யன்பினொடு புவிபுரக்கும் வசுவுக்கே
கொடுத்திநிறைந் தமரர் போற்ற
வன்பகைஞ ருரந்துளைத்து நெடுங்குருதி
கொப்பளிக்கும் வயிர வாளோய்! 6

புவனியிலோர் தெய்வமெதிர் நின்றதுண்டே
லருஞ்செல்வம் பொருத்து மென்பர்
கவிஞரள வில்லாத தெய்வதம்போற்
றிடவெனது கண்முன் வந்தாய்
நவைமுழுது மகன்றனன்யா னினைத்தனமுற்
றுதலரிதோ நவில ருஞ்சீ
ரவிரிழைய புலோமிசைபொற் கொங்கைபொர
நறவூற்று மலங்கற் றோளாய்! 7

மகிழ்வுடனென் கன்னிகையை வேட்பவனோர்
கல்யாண மயனே யான
புகழ்வசுவாங் கேட்குதுமென் றமரகணம்
புடைசூழ்ந்து போற்று நீயே
யிகலறவந் தருளினையா மிக்கருமம்
யாவர்க்கு மிதமா மென்னின்
மிகைதருமிங் கிதினுமுயர் சுபமுளதோ
வேறெனக்கு விண்ணோர் கோவே. 8

என்னையொரு பொருளருளென் றுரைப்பதற்கன்
னியனலன்யா னினைதீ ரெந்தா
யுன்னடிமை யலனோமற் றென்பொருளுன்
பொருளேகா ணுரைக்குங் காலைப்
பொன்னிதொழுஞ் சுத்திமதி சுற்றமுடன்
வருகவெனப் புகன்ற ழைத்திக்
கன்னிதனை யவ்விறைவற் கருளென்று
னிமயகிரி கருதிப் பெற்றேன். 9

மணச்செய்தியைக் கேட்ட கிரிகையின் நிலை

தாதையிவை யுரைத்திடலு மருகுறையு
மொருகிரிகை தலைவ னைத்தாங்
கேதமிறன் கரத்தமரம் புயத்திதழைக்
கிள்ளிக்கொண் டிருந்தாண் மிக்க
மேதகுவச் சிரமனைய மாரனருங்
கணையையினி வெண்ண கத்தாற்
சேதமுறப் படுத்திடலா மரிதன்றென்
பதுகாட்டுஞ் செய்கை போல. 10

நதிமாதர் பலர் புடைசூழச் சுத்திமதி
அவ்விடத்தை யடைதல்

வாழியவிந் திரன்வந்து தன்கொழுந
னுடன்புகன்ற வாற னைத்துந்
தோழியர்சொற் றிடவினவிப் புண்ணியநன்
னதிகளொடு தூய்மை யான

*கேழிலருஞ் சுத்திமதி யெனுமங்கை*
*பிறையனைய விளர்வெண் கோட்டுச்*
*சூழியயி ராவதனைத் தொழக்கருதி*
*யானனம்பின் றொடர வந்தாள்.* 11

*மிகுமமுத மயமான பகிரதிவெங்*
*காலபயம் விடுவித் தோங்கு*
*புகரிலுருத் திரசரணி யிருளகற்று*
*மாவிசுதை பூவைத் தாங்கு*
*தகவுடைய வராகியரும் பவமகற்று*
*பிணகியுரை சாரும் வாணி*
*சுகநறைகொ....லையநதி முதலான*
*நதிமாதர் றொக்கு வந்தார்.* 12

குல் பருவதங்கள் வருதல்

*அருணகிக ளிவ்வாறு வரக்கன்றின்*
*பின்றொடரு மாக்கள் போலப்*
*பரியநெடுங் குலகிரிக ளினிமையொடு*
*வந்தனவாற் பழுதில் கோடுங்*
*கருதரிய வழுதொழுகு மடியுமுடை*
*யனவாகிக் கமழ்மந் தாரத்*
*தருநிழலில் வீற்றிருக்கு மிறைவனுரை*
*சிரமிசையே தாங்கி யாங்கு.* 13

வேறு

இமயவேந்தன் வருகை

*கோத்திரமி னுமையிவன்பா லுதித்து நல்ல*
*கோத்திரியா யினளென்று மைய மேற்றோ*
*னேத்துமிவன் மகளைமணஞ் செய்தி யார்க்கு*
*மீசனு யினனிவன்றன் சேடந் தின்ற*
*வாய்த்தகுலர் பெருமையொடு சிறந்தார் காந்தி*
*மழுங்குமின் னிவன்றிசையை யடைந்த பின்னர்*
*சீர்த்தியுடை வாள்வேந்த னுனென்று*
*தேவர்புகழ்ந் திடவந்தா னிமய வேந்தன்.* 14

மைநாகன் வருதல்

*வயிரநெடும் படைதடைய தாக வேலை*
*மருந்துபூ சிற்றேவன் றிரையாற் றன்மீ*
*துயரடவி விழுந்ததோ பணிகள் கவ்வா*
*தொளிர்கருட மணிக்கவச மணிந்த தோபொன்*

னியனுருவிற் புனற்கருமை யடைந்த தோமற்
றென்னமிகும் பாசிபட ருடம்பி னோடு
வியனுடைய மைநாக னெழுந்து வந்தான்
விரைந்திளவல் சுதைவதுவை காண்பா னெண்ணி. 15

வேறு

கிரிகை மணத்திற்கு மேனை வருகை

ஆக மனைத்து நடுக்கமுறு
மசல வேந்தன் றனக்களவில்
ஓகை யொடுசெங் கைகொடுத்தே
உரிய மேனை மிகவந்தாள்
சேகு தளிரா னனத்தினுறுந்
தெய்வ வன்ன மன்னநடைப்
பூக நிகர்கந் தரக்கனிவாய்ப்
புதல்வன் புதல்வி வதுவைக்கு. 16

மேரு முதலான மலையரசர் பலரும்
கிரிகையின் மணங்காண வருதல்

அமர ரிருக்குந் தன்மையினு
லஞ்சக் கரத்த ரெடுக்கையினல்
விமல மாகி யனந்தகுணம்
படைத்து விளங்கு மேன்மையினற்
றமிலோ ரிருவர் களுமொத்தோர்
தாவா மேரு மந்தரமென்
சிமைய விறைவர் மிகக்கூடி
வந்தார் சிந்தை களிகூர. 17

இனிய மணிரோ கணசயில
மென்ப தமர்கி ரிகளோடு
மனமு முடலும் புளகமுற
வந்த திந்த மணக்கருத்தா
வெனுமொண் மகவான் கிரியளித்த
விணையில் கிரிகைக் கிதுபரிசென்
றுனிமுன் குவித்த மணிராசி
யொத்துப் புவியில் விளங்கவே. 18

கவிக்கூற்று

மற்று முளபூ தரங்களெலாம்
வதுவை காண்பான் வந்தமையால்
அற்ற மகலிப் பெரும்புவன
மலைந்து சாயு மிடத்தனந்தன்

உற்ற படங்கள் கொடுத்தரிதிற்
சுமந்தா னன்றி வந்திலனல்
எற்றைப் பொழுதுஞ் சுமைசுமப்போர்க்
கிச்சைப் படிக்கு வரப்படுமோ! 19

மணம் பேசு படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 771.

## 27. நகர்புரி படலம்

மணத்திற்குரிய பலபொருள்களும் நிறைந்து விளங்கல்

* சோதி மித்திர காந்த வாலத்தியுந் துளங்கு
கோதில் பாவிகைக் குழுக்களும் குலவிய தொருபால்
ஏத மற்றகோ கிலமென விசைத்திடு மெழுவாய்ச்
சாதி மங்கையர் சோபனந் தயங்கிய தொருபால். 13

அங்க வெல்லையிற் கிரிகைத னிகுழைய ரடைந்து
துங்க வேந்திடத் திந்திரன் வைத்தரு டொடர்பின்
இங்கி தத்தனை மகிழ்ந்துநன் னதிகளோ டிலங்கும்
பொங்கு சீர்மனக் கிதத்தன புரியுமப் பொழுது, 14

திருமணத்திற்குரிய நல்லோரையைத் தேவகுரு கூறல்

தாவி லோரையொன் றயில்விழிக் கன்னிகை தனக்குங்
கோவி னுக்குமிங் கிதத்தன கூறுகென் றுரைத்த
தேவர் தம்பதி யானன நோக்கியே சிறந்த
பூவி னன்புரை யந்தண னன்பொடு புகலும். 15

அருக்க னுதிய ருடுக்கண மற்றவற் றதிதெய்வம்
பொருப்பு நன்னதி பலவொடு புகுந்துநீ யிருப்பத்
தருக்கி யான்புரி சடங்குவேந் தனுக்குமின் றனக்கு
முரைக்க ரும்பெருந் திருமகிழ் வளித்திடா துறுமோ. 16

அலவ னுளியொண் குடமெழி லேறுமை யடுவிற்
றுலைந லந்திகழ் கயலினை யுறப்பினுற் றுலைத்த
விலகு மாமக ரக்குழைக் கன்னியா மிவளுக்
குலவி லாதநன் மிதுனமே யிசைந்ததென் றுரைத்தான். 17

நகர்புரி படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 788.

---

* இங்கு இருக்கவேண்டிய முதல் பனிரண்டு செய்யுட்கள் மூலப்பிரதியில் இல்லை.

## 28. அரசன் வரு படலம்

### தேவகுரு கூறிய முகூர்த்த நல்லோரையை இந்திரன் வசுவுக்கு உரைத்தல்

பொன்ன வன்சொலு மோரையைப் பொருப்பிறைக் குரைத்து
மன்ன வன்றனக் குரைத்திட வந்தனன் மகவான்
துன்ன ரம்பையர் பாடலுந் தூரியத் தொலியு
மின்னெ டுங்கொடி யாடலு மன்பினை விளக்க. 1

அண்ண லிந்திரன் வருவதைத் தூதரா லறிந்து
தண்ண ளிக்கடற் படிந்தனன் றடவரை களத்தூள்
பண்ணு மோர்சத கோடியுள் ளவன்மிகு பரிவோ
டெண்ணி வந்தன னென்னிலின் பெய்துவ தரிதோ! 2

குறைவின் மேருமா மணிமுடி மிசையதன் குணத்தை
யறிகி லாதுற மிதித்தவா கண்டல னடிமேல்
அறைவ தற்கரி தானதன் னவிர்மணி முடியை
நிறைகு ணத்தொடு கூட்டின னுலகுடை நிருபன். 3

அன்பி னற்பணி வேந்தனை யருங்கலி யாணத்
தின்ப மெய்துக வென்றுரைத் தியல்புற வணைத்துத்
தன்பெ ருந்திரு நயனமா யிரங்களாற் றயங்க
முன்பு நோக்கினின் றமரர்கோ னிவைசில மொழியும். 4

நேற்றி ராவென தவையிடை நேரிழை மகளிர்
போற்றி யாடவொண் கின்னரர் பாடமுன் புரிவோ
டாற்றல் விண்ணவர் புகழ்ந்திட விருந்திடு மமையத்
தேற்ற மானவுன் றன்னையா னினைத்தன னிறைவ. 5

உனது ளத்தினிற் கருத்தினை யுணர்ந்துபி னுரவோ
யெனத கத்திடை மதித்தன னெழுந்தடுங் கொடிய
தனும தன்புதுக் கணையினுற் றனிமதித் தழலால்
இனிய கண்படை யின்றிநொந் தனைகொலோ வென்று. 6

நலமி லங்குமைந் தம்பகங் கைக்கொடு நடந்தன்
றுலக மேத்துமுன் றம்பக முடையனுக் குடைந்தோன்
மலரு மாயிர மம்பக முடையவன் மகிழக்
குலவு நண்பனை வெல்லுமோ வென்னவுங் குறித்தேன். 7

வந்து காலையி லிமகிரி மகளொடு வினவி
மைந்து சேர்குல கிரிகளை நதிகளை வருவித்
தந்த மின்றுயர் நகரியொன் றங்ஙன மமைத்து
முந்து சீர்புனை முகுர்த்தமு மின்றென மொழிந்து; 8

கங்கை யாதியர் கந்திரு வாதியர் கழறும்
பொங்கு நல்லிசைச் சோபனப் பாட்டொடு பொலியத்
துங்க வேதியர் வாழ்த்திட விரைவொடு தோன்றல்!
இங்கு வந்தன னுணமணக் கோலம தியற்ற. 9

வசு கோலாகலபுர மடைதல்

என்று வாசவ னுரைத்தலு மெழுந்துவா ளிறைவன்
துன்ற மைச்சரை யாதியா புரோகிதர் துவன்ற
வென்றி வேற்படை வீரர்க ளிருபுறம் விரவப்
பொன்ற யங்குகோ லாகல புரத்திடை யடைந்தான். 10

கோலாகலபுரம் அலங்கரிக்கப்படுதல்

வேன லானுரு வொளித்திடப் பேரெழில் விளங்கு
மான வேல்வசு வந்தன னென்றுள மகிழ்ந்து
மேன லந்திக ழிந்திர புரமென விளம்புந்
தான நாணுற வப்புரந் தனையலங் கரித்தார். 11

செயற்கை யாற்புரி கதிர்மதி யிருபுறந் திகழக்
குயிற்றி னாளவீற் றபொன் மேருவைக் கொடியோ
டுயர்த்த பந்தர்மேற் புறப்பட வரம்பைக ளுடனே
வியக்கு மாரமென் றருவையு நிறுத்தினர் விரைந்து. 12

வயிர மாமணி யழுத்திய விளிம்பொடு வயங்கச்
செயிரி லிந்திர மணிவிதா னத்தைமேற் செறித்தார்
இயல்ப டைத்தபொற் பாவைக ணிறுத்தின ரெங்கு
நயனு றும்படி தூக்கினர் குமுதநன் னளினம். 13

காவ ணத்திடை நிறுத்துபல் கதலியின் கனிக்காய்
மீவி ருப்பொடு வருகிளி யொழுங்கென விளங்க
வாவ ணத்திரு வீதிக டொறுந்தொறு மளவின்
மாவ ளப்படு மரகதத் தோரணம் வனைந்தார். 14

வேறு

பொன்னணி நிலைதேர்ப் பாவை பொலிவுநேர்க் கரமி னுரை
மின்னுறு கொடிக டம்மால் விளித்திலை பாக ளிக்க
நன்னகர் மங்கை நீட்டு மங்கைபோ லுக வல்லி
துன்னிய பசுங்காய்ப் பூக நாட்டினர் தொகையி லாது. 15

அரியதாந் துகின னன்னீ ராடிபொற் றூச ணிந்து
பொருவருங் களபந் தண்டார் புனைந்துநற் றூப தூமங்
கருமுகி லென்ன மஞ்ஞை யாடுதல் கண்டு மிக்க
புரமெனுந் தெய்வம் வாழ்ந்த தமரரும் புகழ மாதோ. 16

வசுவேந்தனின் மணவிதழ் பெற்று, அரசர் பலரும்
பரிசுப் பொருள்களுடன் வருதல்

திறலிறை தனிச்சு பத்தை யாட்க வேட்டிற் றீட்டி
யிறைவர்பா லுய்ப்ப வப்பா ரிறைவர்தந் தலைமே லேற்று
மறுவில்பொற் பட்ட மின்று வாய்த்தன வென்று வந்தார்
நிறைதரு பரிதேர் யானை நெடுங்கன காதி கொண்டு. 17

வேறு

அப்பொழு தேற்பட்ட பல்வகை யொலிகள்

யாழொலியைப் பாடுமொலி யடக்கப் பாடு
மியலொலியை வேயினொலி யடக்க வேயி
னூழொலியைத் தாளவொலி யடக்கத் தாள
வொலியையருங் கூத்தினொலி யடக்கக் கூத்தின்
பேழொலியைப் பேரிமுத லியங்க ளார்க்கும்
பேரொலிவந் தடக்கமுழங் கியது நின்று
கேழிலொரு தனிநாதப் பிரமம் போலக்
கிளர்ந்துகிளர்ந் தகண்டமாய்க் கெழுமி யெங்கும். 18

வேறு

ஸப்த ரிஷிகள் வருகை

அலர்தலை யுலகம் போற்று மமரர்கோ னுரையா லோரேழ்
குலமுனி வரர்தந் துய்ய கோதையர் விளங்கு செம்பொற்
கலனிடை யறுகு சந்தக் கந்தமக் கதைதாம் பூலம்
பலமிவை யிருத்தி யேந்தி வந்தனர் பரிவி னோடு. 19

மகளிர் மங்கள கீதம் இசைத்தல்

சீருட னமுத மார்ந்து திகழ்தரு மிராகம் பெற்றுக்
கூரிய வாகி மேன்மை கூடியே பிறழ்த லின்றி
நேரிலா தொளிர்தங் கண்க ணிகர்த்தமங் கலப்பாட் டங்க
ணேருறப் பாடி னாரா லினியகற் புடைய மின்னார். 20

சுரதரு நிரைக டேவ கணிகையர் சுதைக்கும் பங்கள்
இருபுடை நெருங்க வந்தா னெழிலரிக் குரிய வில்லாள்
ஒருகுடை நிழலி லெல்லா வுலகமும் புரக்கும் வேந்தன்
திருமணக் கவைப டைத்த தேவர்கோன் பரிவு கூற. 21

அரசன்வரு படலம் முற்றும்.

ஆகத் திருவிருத்தம் 809.

## 29. கோலஞ் செய் படலம்

வசுவுக்கு மணக்கோலஞ் செய்ய அரமகளிர் வருதல்

*வயிரவா ளேந்து செங்கை மகபதி வதுவைக் கேற்ற*
*செயல்புரி வித்தல் காணாத் திகழர மகளிர் யாரும்*
*புயணிகர் வசுவுக் கெண்ணெய் பூசுத லாதி செய்ய*
*நயனொடு வந்தார் தங்க ணன்மன மகிழ்ந்து மாதோ.* 1

*வேறு*

வசுவேந்தனுக்கு அரமகளிர் அக்கதை இடுதல்

*நிலவரசுக் குயர்தாரை வருடு பாத*
*நீதரணி யிறைக்குடம்பு பிடியொண் மேனை*
*யலகிலுயர் மங்களமுள் ளவன்றன் சென்னிக்*
*கன்பினொடு சேவைபுரி சசிரே காய்நீ*
*திலதயில மிடுவதற்கு மிகவும் வல்லை*
*திலோத்தமைநீ புகழ்வசுவை விளக்கஞ் செய்தற்*
*கிலகுமணி மஞ்சரிநீ விரைவில் வாரா*
*யென்றுமகிழ்ந் தக்கதையிட் டாரி றைக்கு.* 2

எண்ணெய் பூசுதல்

*உதரமென் மடிப்பு சற்றே நிமிரநல் லுயிர்ப்பி னானே*
*மதுகர மயங்க வெங்கு மாமணங் களபம் வீசக்*
*கதிர்விழி பிறழ முத்தக் கவின்றொடை நடிக்க நின்றே*
*றெதிரிலா ரணங்கு மன்னற் கெண்ணெய்பூ சினள்சி றக்க.* 3

*வேறு*

*வளர்தனத்தை மறைத்திடுதி யென்னப் பேதாய்*
*வளர்தனத்தை மறைத்திடுத லறமோ வென்று*
*மொளிரன்னந் தனையகற்று கென்ன மின்னே*
*யொளிரன்னந் தனையகற்ற லெளிதோ வென்று*
*மளிவந்து புடைசூழ்தல் பாரா யென்ன*
*வளியுறுத லுயிர்க்குநிலை யன்றோ வென்று*
*மிளமுலையார் விநோதமிவை கூறி வேந்தன்*
*மயிர்கோதி யெழுந்தருணீ ராட வென்றார்.* 4

*வேறு*

வசுவுக்கு மங்கல நீராட்டுச் செய்தல்

*அரிகதி கடக்கும் வாள்வேந் தெழுற்கன்னி யத்த நல்க*
*வொருசல பவனத் தின்கண் வருபொழு தொளிக்கா றன்னை*
*மருவொரு மின்று டைக்க மணிபாது கைமேல் வைத்தா*
*னருமணிப் பீடத் தம்போ ருகநிதி தனைவைத் தாங்கு.* 5

மன்னநீ ராடு மேல்வை மதிமணிக் கும்ப மேந்து
முன்னரும் பாவை மின்னார் முகமதி யெனவூ றம்பைத்
தன்னிலூற் றுதல்கண் டன்னோர் தலைவனைத் திடலு மூற்றா
தன்னது நின்ற தம்ம வறிஞர்த மியல்பு போல. 6

வடுத்தவிர் செண்ப கத்தான் மயங்கிய சுரும்பைக் கையின்
வடித்ததென் றளித்துத் தேற்றும் வசந்தமா தென்ம யிர்ப்பால்
அடுத்திடு நறுநெய் தீர வாரநன் னெல்லிச் சாரங்
கொடுத்தழு தனைய மாதர் கோதின ரரச னுக்கு. 7

சேவகத் தினிற்சி றந்து தினமிருந் தானத் தோடு
மேவியொண்....கலந்தோ மிகுமிளம் பிடிக ளெல்லாந்
தாவிலன் புறவி ளங்குந் தடக்கரப் பெருமா னுக்கு
மாவொளிக் கும்ப நன்னீ ராட்டினர் வான மாதர். 8

வசு மஞ்சன மனையிலிருந்து வருதல்

ஒருத்திசெங் கலையான் மெய்நீர் துவட்டலு மொருத்தி வெள்ளை
வரத்துகி லளிக்கப் போர்த்து மஞ்சன மனையு னின்றும்
விருப்பொடு வந்தான் வேலை விடுத்தொளிர் செக்கர் நீங்கித்
தரைக்கண்வெண் ணிலவி னோடு தண்மதி வருதல் போல. 9

மகளிர் தீபவாலத்தி சுற்றுதல்

சுழியிடை யெழுந்து நின்ற பேரொளித் துதிர்க்கொ ழுந்தை
விழுமிய கடற்ற ரங்கஞ் சுழற்றிடு மேன்மை போல
விழியிடை புகாது விம்மி யெழுமுலைக் கிடைநு டங்கத்
தொழில்செய்வான் மகளிர் தீபத் தகளிகள் சுற்றி னாரால். 10

மகளிர் வசுவுக்குப் பலவித அலங்காரங்களைச் செய்தல்

மானுரம் போல வாச மிருந்துள வலங்கல் வாய்ந்து
நாலருங் கைத்தா னூற்று நவிலரும் பொன்னொ டார்ந்து
சாலவுஞ் சிறந்து வைகுந் தனிமணி வேதி கைக்கண்
மேலிருந் ததுவேந் தென்று விளங்கொரு மணிவி ருப்பால். 11

கிரிமக ளன்பன் சென்னிக் கேசநீர் சரற்கா லத்தோர்
அருமதி நிகர் முகத்தி யாற்றின ளரசு வாவின்
திருவுரு மீது கோதி விமசலத் திவலை தூற்றி
யிருவிழி களிக்க மற்றோ ரிளம்பிடி நின்றா ளாங்கு. 12

புவனமோ கனன்ற னக்குப் புதுமலர் தொடுத்தா னின்றோர்
நவையில்பூங் கொடிமென் பூங்கா னாயகன் றனக்குச் சந்து
தவழ்தரப் பூசி னாள்கந் தவதியெ[ன் றொ]ருத்திக் கீந்தா
ளவிர்மணிப் பணிகள் சோதி நிதியெனு மார ணங்கு. 13

## வசுவேந்தன், தேவர் முதலியோர் கொடுத்த அணிகளைப் புனைந்து விளங்குதல்

இனியகற் பூர வாசத் திலகமொன் றிட்ட தற்பின்
தனபதி யளித்த கொற்றத் தனிமுடி யணிந்தான் வேந்தன்
வனைதரு சென்னித் திங்கள் வளைந்தபூ ணெனக்கீ ழிட்டாங்
குனலருங் கதிரைச் சூடு மொப்பிலா வீசன் போல. 14

முடியில்வான் மகளிர் சேர்த்த முருகவிழ் கற்ப கப்பூந்
தொடையொடு கூடி முத்தப் பாசிகந் துளங்கு தன்மை
தடநெடுங் கனக மேருத் தலையிடை யுதித்த கங்கை
யுடையழ வுருவி னோடு மொளிருதல் போலு மாதோ. 15

அரிபுவி யிறைக்க ளித்த வாணிமுத் தணியொண் காதில்
விரிகதி ரொடுதி கழ்ந்த வெள்ளியும் வியாழந் தானுங்
கிரிகைத னிலக்க ணம்போற் கிளரயி ராணி வாணி
திருவினுக் கில்லை யென்று செப்பல்வந் திருத்தல் போல. 16

பாற்கடற் பயங்கு டித்த பைம்புய றவளத் தீவின்
மேற்பொழி தரப்பி றந்த வமுதமென் குளிகை [யே]ற்ற
போற்றரு மார மாலை புனையிது சுபங்கள் யாவுந்
தோற்றுவித் தருளு மென்று கொடுத்தனன் சேய வேந்தன். 17

ஆரமா லிகைபு னைந்தா னரசனே ரசல[க்] கன்னி
மேருநேர் கொங்கை யாலிங் கனமினி விரைவில் வந்து
சாருமா லென்று நல்வா சகத்தினை தெழுத்தின் பந்தி
யேரென வுரத்தின் மீதே யெழில்பெற விளங்கு மாதோ. 18

வயினதே யன்கொ டுத்த மரகத கேயூ ரங்கள்
புயமிசைத் திகழ்ந்த மன்னே பூண்முலைக் கிரிகை தன்னைப்
பயனுறத் தழுவ நிற்கும் பண்பினுக் கழுக்கா றுள்ளுற்
றயர்வுகொள் புவியைக் கையா லமைப்பது போல மைப்ப. 19

செறிபுகழ் வருண னீந்த திகழ்வயி டூரி யப்பூண்
இறைவன்மூன் கரத்த மைந்த தெழில்புனை மேனி யெங்கு
நிறைதர வெழுந்த சோதித் திருவையு நிகரில் கன்னி
யுறுதனி மங்க லப்பூந் திருவையு முவப்பக் காட்டி. 20

வருநள கூவ ரன்று னுதவிய வனச ராகத்
திருமணிக் கடகந் தாளிற் சிறந்தது மிகுமுன் றேசென்
றிருபுறத் தினுமி லங்கிற் றிறைவவென் றுயரு நேமிக்
கிரிமிக வணங்கி யன்பு கிளர்தர வலஞ்செய் தாங்கு. 21

பொன்னொளிர் விளிம்பு பெற்றுப் பொலிந்தசித் திரமு டைத்தாய்
மின்னவிர் மணிக்கொத் தார்ந்து விளங்குசெவ் வண்ணத் தூசு
மன்னுகற் பகம ளித்த தாங்கதை மகிழ்ந்த ளித்தா
னின்னவில் சயந்த னென்போ னெழுபுவி தொழுமி றைக்கு. 22

முடிவில்பே ரிறைவன் முன்னர் நாரணு முகந்தி ருப்பி
வடிவுடை மணிக்கண் ணாடி காட்டியோர் மதுர வாணி
துடியிடை யொல்க நின்று நீயவென் கபோல நன்றோ
படியிலிவ் வாடி நன்றோ பாரெனக் காட்டல் போல. 23

இந்திரன் வசுவுக்கு ஒரு மாலையளித்து
அதன் சிறப்பினைக் கூறுதல்

இறையெனுங் கலையு ளானுக் கெழிலிவா கனனப் போது
மறுவிலோ ரடையா ளத்தை வழங்குது மெனம தித்துப்
பெறலருந் தெய்வ வாற்றிற் பிறந்தவொண் கமல மாலை
நறுமலர்க் கையி னேந்தி நரபதிக் குவந்து கூறும். 24

கடிகமழ் கரையி னின்ற கற்பக மாணிக் கப்பூம்
பொடிமண லொடுக லந்து பொன்மலை மிசையி னோடுங்
குடிஞையிற் பிறந்த திந்தக் குளிர்சரோ ருகமா மாலை
மிடையரு தொளிக ணல்கு மீந்திடுங் கேட்ட யாவும். 25

மதுமண மருது வாடா தரியவிவ் வனச மாலை
கதிரினை யொக்கு மெல்லாற் காணின்மா தோடந் தீர்க்கும்
இதுதனக் கிணையிம் மூன்று சகத்தினு மில்லை கண்டாய்
எதிருமொன் னலர்செந் நீரிற் குளித்திடு மிலைகொள் வேலோய்!26

அம்புய லனைய கையா யளவிலம் புயங்க ளித்தார்
அம்புய மலர்க்கொவ் வாதென் றறைந்திடல் வேண்டு மோசூல்
அம்புயத் திடும ரக்க ரடுகளத் திடைநின் றெய்யும்
அம்புயர் தோளின் மார்பி னெதிர்செலா தகற்று மென்றால். 27

தன்னைவந் தமர்செய் வண்டைத் தனையெதிர் நேமி தன்னை
முன்னிநின் றடக்குஞ் செய்ய முளரிக டமுள்வ யங்கு
மன்னுமித் தொடைய னந்த மணியொளி யறவி ளங்கு
முன்னிடி னிறும்பூ தாக்குங் கனைதயத் தொளிருங் கண்டாய். 28

மதனயில் வாளி யான வனசமித் தொடையிற் சேர்ந்த
புதியபங் கயத்திற் கெவ்வா றுத்திடு மவைபொன் னன்னார்
இதயமுண் டகத்தை வாட்டு மிவைமதி போற்சி றந்த
கதிர்முக மின்னார் சித்தக் கமலமீ தளிவி ளைக்கும். 29

மலர்வன சங்க டம்மிற் சிறந்தது மாத வன்றன்
அலர்தரு முந்திக் கஞ்ச மதுவிதி வசத்தா லன்றி
யுலகுள பொருளை நல்கா தோதுமிக் கமல முற்ற
தலமதி லளிக்கு மூன்று சகத்துள பொருளை யெல்லாம். 30

வாசவ மாலை யென்று வதிந்ததிப் புவியில் வந்தும்
வாசவ மாலை யென்றே மகிழ்வொடு சிறந்த தம்ம
வோசைகொள் பெரிய ரானோ ருயர்வுபெற் றிடுவ தன்றிப்
பேசிடில் யாண்டுற் றா[லும்] பெருமையி[ற்] கு[றை]வ தில்லை. 31

உரகருக் கிதனி டத்தோங் குவணத்தை யரிது சேர
னரர்தமக் கரிதிக் கஞ்ச நாயக வொளியைக் காணச்
சுரர்தமக் கரிது காணித் தொடையென தாத லானே
யரசகே ணீயே யானென் றளித்தன னுனக்கிப் போது. 32

வசு இந்திரன் அளித்த வனசமாலையை யணிந்து விளங்குதல்

தளர்விலென் வரத்தாற் றெய்வத் தன்மைநீ யடைந்தித் தாரைப்
புளகம தோங்க மேலோய் புனைகெனக் கொடுத்தான் வாங்கி
வளனுறப் புனைந்தான் வேந்தன் மகபதி யுபதே சத்தால்
ஒளிருமா யிரங்கண் பெற்றாங் குருவிடைத் திகழ்ந்த தன்றே. 33

அப்பொழுது தேவதுந்துமி முழங்கல்

அப்பொழு தெழுந்து தேவ துந்துமி யமரர் கோமான்
ஒப்பற விதித்த கோலா கலமறு குழியொ லித்த
தெய்ப்பரு மருங்கிற் கன்னிக் கியன்மண வெழில்செய் கென்று
செப்பரு மினிய தூது நடத்திய செய்கை போல. 34

கிரிகைக்கு மணவலங்காரம் இயற்ற மகளிர் கூடுதல்

துந்துமி யொலித்தல் கேட்டுத் தூயநன் முகுர்த்தங் கிட்டி
வந்தது கிரிகைக் கின்ப மணவெழில் புரிமின் மற்றை
முந்துறு கருமம் யாவு முற்றுமி னென்று கூறிச்
சுந்தர மடவார் யாருந் தொக்கனர் முழக்கத் தோடு. 35

மதிமக பதிவி தித்த மணவணி மண்ட பத்திற்
கதிர்மணி வேதி கைக்கட் கனகபி டத்தி ருத்தி
நுதிவிழிக் கிரிகை தன்னை நுதலிலக் கதைபு னைந்து
புதியகுங் குமமொண் சந்து பூசினர் மேனி யெங்கும். 36

கடகமோ மேத கத்தின் கதிர்தில தயிலங் கொங்கைக்
குடமணி வடவா டோய முயிர்ப்பதே குளிர்சாந் தாற்றி
முடிமலர் விரலே யாகி முதற்சுப நானங் காட்ட
வடிவுடை யொருத்தி நின்று வாசநெய் பூசி னாளால். 37

மதிமணி குயிற்று நன்னீர் மணிமணி பீடத் தேற்றித்
துதைவுற வாரத் தேய்வை யிடப்படுந் தூய கன்னி
நதிபதி யாய வாழி நடுநுரை யொடுபி றந்து
புதுநறை வனச வாசப் பூவையோ வெனத்தி கழ்ந்தாள். 38

தந்தவெண் ணகைவி ளங்கத் தடக்கடல் வாரி கொண்டு
வந்துநல் வளையொண் பூங்கை மான்குழூப் புடையி னின்றே
நந்தபி டேகஞ் செய்ய நளினமென் பாணி யுற்றுண்
மைந்துறு மிமவான் மைந்தன் மனையில்வாழ் திருவை யொத்து. 39

மங்கையர் தவளத் தூசால் வாணுதல் கபோலந் தன்னிற்
கொங்கையிற் களத்தி னெற்றிக் குளிர்புன லகற்ற லோடு
மங்கவற் றிராகந் தோய்ந்தே யதுசிவந் ததுமின் னன்னாள்
தங்களைத் தொடின்மு னுள்ள தனிக்குண மிருக்குங் கொல்லோ. 40

களங்கமில் கனக சோதி கடிதடக் காஞ்சி யாக
விளிம்புறு மணிப தப்பூ ணுகமே லுத்த ரீகத்
துளந்திக ழாக மார்பி னொளிர்வட மாக வாசம்
வளங்கெழு களப மாகப் பண்ணுமோர் துகில்வ ணைந்தாள். 41

மரைமலர் கொடுமு கக்கண் ணேறகற் றிடுதன் மானத்
திருநதி மடவார் வந்து சித்திரா லத்தி யேந்த
வரைமகள் வந்தாள் வேந்தன் மார்பெனக் கமல மாலை
விரையுறத் தூங்கு கின்ற வியன்மண வேதி கைக்கு. 42

பொற்புடை யரிதன் றேவி பூவையர் கரத்த ளித்துக்
கற்பகங் கொடுத்த பூணுங் கடிகம ழினிய தாரு
மற்பொடு வரவி டுத்தா ளுமைநிக ரணங்கி னுக்குப்
பற்பல கற்ப காலம் பரிவொடு வாழ்க வென்று. 43

வேறு

கன்னிகுழ லெழிலியற லாற்றி னள்பின்
கதுப்பென்னு மணிமிஞிறு களிக்க நின்று
தன்னிகர்சண் பகம்புனைந்தா ளளக மென்ற
தனியிருணீங் காதுமதி கதிரேய் பூணை
மின்னவணிந் தனள்கூந்த லான வானின்
மிசைத்தோடந் தவிர்சுட்டி யாரத் தாரை
மன்னவனைந் தனளோதி நீலந் தன்னின்
மரகதவா ணிகரறுகு வைத்தா ளோர்பெண். 44

வேறு

வாசமா ரளக வேணி வாரிக்கு மாலை யார்ந்த
பாசிகங் கரையே யாகிப் பகர்மத காசிச் சுட்டி
யாசறு புருவக் கன்னற் கணிந்திடு திலகந் தானே
தேசுறு கால தாகிச் சிறந்தது யாரும் போற்ற. 45

மயலுத வலிற்பி றங்கி மகிழ்வுறக் கலைவாள் வேந்தன்
றயவுற மதனு ரப்புத் தவலரு மழையி னேங்க
வியனணி யோடு நித்தம் விளங்கிநற் றிருவ யங்க
வயர்விலஞ் சனம ளித்தா ளரிவைகட் கமலத் தோர்மின். 46

பொருதிறன் மதரா சன்விற் போர்வழி போய்மீண் டெய்த்துத்
திரிதரு நயன மென்னும் பதிகர்க்குச் செவிக்கூ வத்தின்
அருகுற வமுத மாய வருந்தட மமைந்த தென்னக்
குருமணி வயிரங் கொண்ட குண்டலந் தரித்தா ளோர்மின். 47

வேறு

இருசெவிக் கூவத் தமுதினைத் தலைப்பூ
ணிடத்தொளி யாகிய சலசூத்
திரநெடுங் கோலிற் செவியிடை யணியாங்
குடஞ்செறித் தோலையாந் துலையில்
அருமணி வயிரக் கதிரெனுங் கால்வா
யகத்துற மதனிறைத் திடலாற்
பொருவற வளர்பூங் கொடிகளுந் தளிரும்
போற்றன தொய்யிலின் செறிவே. 48

ஒன்றினுக் கொன்று சிறந்திடு நறைமிக்
கோங்கிய மான்மதத் தளறுந்
துன்றுசீ ரிலகு குங்குமக் குழம்புந்
தூயபா ளிதமுமோர் புரையு
மின்றிய சவாதுங் கதம்பமும் பிறவு
மேந்திழை மின்ன(ன்)ஞ றெடுத்து
மின்றனக் கணிந்தா ரழகொழுங் க[மைய]
...........விரைபுனைந் தாங்கு. 49

அதரமா மதுரப் பலிக்குவந் தொளிரோ
ரருஞ்சுதைக் குளிகைநின் றூங்குப்
புதியநித் திலமூக் கணியைநே ரிழைக்குப்
புனைந்தன ளொருத்தியப் பொழுதிற்
கிதமுற வொழுங்குற் றிருந்திடு நவக்கோ
ளெனவொரு நவமணி மாலை
கதிர்மணி முலையிடத் தணிந்தன ளொருத்தி
கமலமா தினுமெழில் பழுத்தாள். 50

தளிரரும் பலரஞ் சுகமெனத் திகழத்
தகுங்கர மாகிய கொடியிற்
கிளர்பல வொளிப்பூ ணணிந்தன ளிதமாற்
கிஞ்சுகந் தனைவெலு மொருத்தி

வளர்தன துருக்கத் தடியினிற் சூழ
மணிமதில் குயிற்றிய தெனவோர்
இளநலங் கனியு மணங்கினுக் குதர
பந்தன மிசைத்தன ளொருத்தி. 51

பொருவிலட் டாங்க யோகமுற் றிடலாற்
புகலரு மெழிற்கடி தடத்தின்
மருவிய தெனநல் வயிரமே கலையை
வளனுறப் புனைந்தன ளொருத்தி
இரதியை வடிவால் வென்றமைக் கணியு
மெழிலடை யாளம தெனப்பூந்
திருவடி மிசையே கதிரொளி விரிக்குஞ்
சிலம்பினைப் புனைந்தன ளொருத்தி. 52

அலத்தகம் பதத்தி னூட்டிமற் றொருத்தி
யரிவைமீர் காண்மினென் மினிறு
கலக்குமீர்ங் கமலக் குழுக்கள்வா ளிறைவன்
கரத்தினல் வயங்குமிக் கமல
முலப்பறு புகழ்வா ளிறைவன்மா முடியா
லொளிருமென் றுரைத்தல்கேட் டினிய
சலத்துறு குவளை விழியிடை யிராகந்
தனைமிக வைத்தனள் கிரிகை. 53

ஈன்றருள் புனித நதியினுங் கிரியி
னிடத்தினு முத்தொளி பிறழக்
கான்றிடு மணிக டமையெடுத் துரிய
கயல்விழிக் கன்னித னுருவி
னொன்றிடப் புனைந்தார் தங்கைதன் வதுவை
வரத்தகு மென்பது வன்றி
வான்றிகழ் மடவார் தங்களுக் கினிய
மாமணி தேடவே றரிதோ. 54

மகளிர் சோபனம் பாடுதல்

பலபணி மணியி லரிவையர் விம்பம்
பண்பொடு சூழ்ந்திடக் கிரிகை
மலர்தலை யுலக மெங்கணு முறையு
மங்கலத் தெய்வதம் புடைசூழ்ந்
திலகவை குறுமா னந்தமா திருவொத்
திருந்தனள் மகிழுவப் பொழுது
தொலைவில்செங் கமலந் தேனையூற் றுதல்போல்
சோபனம் பாடினர் மடவார். 55

கோலஞ்செய் படலம் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 864.

## 30. பவனிப் படலம்

### கதிரவன் மறைதல்

சுரருஞ் சுரர்தம் மடவாருந்
தோன்ற றனக்குங் கிரிகைக்கும்
புரையி லணிகொண் டலங்கரித்து
முகுர்த்த நோக்கும் பொழுதிரவி
யுரிய ராகத் தொடுவதுவைக்
கேற்க வொருசெம் மணிகொண்டு
வருதற் கேக லெனவிரைவின்
மணிகொள் வேலைக் கருகடைந்தான்.

### விண்மீன்கள் விளங்கும் காட்சி

கன்னி வதுவை நோக்குமர
மகளிர்க் கனமே டைத[ன்]னை
மன்னு நறைக்குங் குமங்குழம்பான்
மெழுகித் தூப நிறைவித்து
மன்னு மரங்கக் கொடியமைத்து
மகிழ்வின் வைத்தாங் கொளிர்ந்தனவால்
தன்னை நிகர்பூஞ் செக்கருட
னிருளு நெருங்கு தாரகையும்.

ஏன்றக் கனமே டையி[ன்]மிசை
யிருந்து சிறந்த வொருமுப்பான்
மூன்று கோடி சுரர்தழுவு
முளரி முகமெல் லியர்யாருந்
தோன்றல் வதுவைப் பெருஞ்செல்வத்
தொலைவி லெழில்பார்த் திடவமைக்கு
மான்ற மணிச்சா ளரங்களென
வவிர்கின் றனவா லுடுக்கணங்கள்.

### சந்திரோதயம்

தனையே நிகர்வை சயந்தமெனுந்
தனமே டையின்மீ மிசையேறிப்
புனலூர் சேதி வளநாடன்
புரத்து ணிறைந்த வளமனைத்தும்
இனிதா கியநல் லயிராணி
யெட்டிப் பார்க்கும் முகம்போல
நனையார் பொழில்சூ ழுதயகிரி
நண்ணி யெழுந்த தொளிர்திங்கள்.

வெண்ணிலவு எங்கும் பரவல்

மகவான் றேழுன் வசுவேந்தன்
வதுவைப் போதின் மதிக்கடவுள்
அகலா வேலை யுடைப்புவியை
யாரக் குழம்பாற் றிசைகடமைச்
சகமே புகழத் தருசுதையாற்
றவள விதானத் தால்விசும்பை
மிகவே புனைந்தாங் கெப்புறத்தும்
விரித்தான் றனது வெண்ணிலவை. 5

வசு, பவனி வருதற்கு ஐராவதத்தின் மீது ஏறுதல்

கனகன் முகுர்த்த மணித்தாயிற்
றென்று புகலக் கருதருந்தெம்
முனைவேல் குலிசன் விளித்திடலு
முடிவில் கவிஞர் நணியேத்த
வினிய மடவார் பலர்பல்லாண்
டிசைப்ப வெள்ளி வரையினுறு
மனக னெனத்திண் டிறலரச
னயிரா வதத்தின் மிசையிவர்ந்தான். 6

திருத்து சுவேதத் தீவினுறும்
திருமா மங்கை நாயகன்போல்
விரித்த வரவ மணிமாலை
விளக்க மிகுவெண் படக்குடையா
பிரத்தி னிடையே மருவிநிறைந்
திமையோர் பரவு புரந்தரன்றன்
அருத்தி யயிரா வதத்தின்மிசை
யமர்ந்து விழியோ டுளங்களித்தான். 7

வேறு

அப்பொழுது பல வாத்தியங்கள் ஒலித்தல்

மாவயிர் பணிலம் பேரி மல்லரி துடியு டுக்கை
தாவில்சல் லரித டாரி தண்ணுமை படக மாதி
மேவியங் குழுமி யார்த்த விபுதர்கோ னியத்தி னோடு
கோவமுற் றதுபோன் மேருக் குகையெதி ரொலிகொ டுப்ப. 8

பவனி வருதற் சிறப்பு

ஏதமில் வீதி தோறு மியல்பட நிறைத்த செம்பொற்
கேதனம் புடைத்த லானே கிளரொளி யுடுக்க ளஞ்சிப்
பூதலத் திடையே வந்து பொலிவுட னியங்கு மாபோற்
றீதறு தயில கந்தத் தீபிகை விளங்க வெங்கும்; 9

கந்தநன் னறுந்தூ பத்தாற் கவிகையா லுறுமற் போக்க
வந்துமுச் சுடரு மெண்ணி லுருவொடு வயங்கு மாபோல்
எந்திர வாணர் செய்த வியலுடை யங்கிச் சோதி
சந்திர சோதி பல்லா தவநெடுஞ் சோதி மல்க ; 10

திறலுடை வசுப்பா லுற்ற திருமக டிறத்தைக் கற்பா
னுறுதடித் தென்னத் தீப மொளிர்ந்தன வவற்றைத் தான்வீழ்
மறுவின்மி னென்று வந்த மால்விளர்ப் புறுதண் மால்போல்
இறையவன் சென்னி மீதோ ரெழிற்கதிர் விரிந்தி லங்க ; 11

அரிதன தாணை யாலிங் கருளிறை வதுவைக் கேற்ற
பொருள்பல கொண்டு வந்த கற்பகக் கொடிகள் போல
மருவிரி மலருஞ் சாம்பூ நதமுமம் பரமும் வாய்த்த
தருவினன் கனியுங் கொண்டு தையலர் நடக்க மாதோ ; 12

உன்னரு முலகம் போற்று முரனுறும் வசும னத்தைக்
கன்னிபா லிருத்து மாரன் சிலைதனைக் கமழ்பூச் சூழ்ந்து
மன்னுமா நகர்வ லஞ்செய் விசயமா மகளிர் போல
நன்னறுங் குழலார் தார்சூழ் கரும்புகை கொடுந டக்க ; 13

மதனனை வடிவால் வென்ற வசுமதன் போல நுந்நாட்
டெதிரில்வா விபணி டத்தே கண்டது முண்டோ வென்று
கதிர்கொண்மூ வுலகின் மாதர் தமக்குறக் காட்டு மாபோற்
சதியொடு நடன மின்னார் தங்கள்கை நீட்டி யாட ; 14

கடிகைபார்த் தருளு மையர் கடவுளர் சொரிதண் போதிற்
பொடிமிசை நோக்க வொட்டா தெனவெதிர் புகவ மைத்த
வுடுமணித் திகிரி யொத்துச் சுழன்றிடு மூசற் றேமென்
மடவியர் சுழன்றார் சாணை வாய்ப்படு மதன்கோல் போல. 15

தாவரு நிலைப்பொற் றேர்மேற் றளமத் தளத்தோ டாடும்
பாவைக ளொடுசில் பாவை வைகுதல் பலவி மானத்
தோவில்கல் யாண மேன்மை காணிய வுவப்பி னோடு
மேவிநற் றெய்வ மாதர் விளங்குதல் போல்வி ளங்க ; 16

வேறு

சூதுறழ் முலையினர் தூங்க லுக்குமெய்
தாததந் நடையினை யமரர் கோன்பதித்
தாதவிழ் கருங்குழற் றைய லார்க்குநன்
மேதகு தெருத்தொறும் பயிற்று விக்கவே ; 17

நெடுங்கரி முதலிய வூர்தி நீங்கியே
நடந்துமுன் சென்றிடு நரேசர் மாமுடி
யடைந்தசெம் மணியொளி யேகி யாசறு
கடுங்கனற் சிகைக்குயர் கடுமை நல்கவே; 18

பகைபுரி வின்றியே படியில் யாரையுந்
தகமரி யாதியிற் றண்டஞ் செய்தரு
ளிகழ்வி லண்டரந் தண்டதர னென்றிடு
நகைமுடி யரிக்குயர் நாண ளிக்கவே; 19

கருகிருள் கடுத்தவாங் கார வீரர்தம்
பொருகர வாட்படை பொருவில் பூங்கதிர்
மருவரு நிருதிவான் மலின மானதை
யொருவரு மூலையி னுறவொ துக்கவே; 20

புகழ்புனை மேதகு வேந்தர் த[ம்முடை]
மிகைதரு விதப்படை வெள்ளத் தாவடி
தகவுறு வாரிதி யரசர் தம்மையும்
பகருத லரியதோர் பயப்ப டுத்தவே; 21

வனப்புறு சந்தன மான தாதிகள்
அனைத்தையுங் கொண்டுநல் வசந்த மாடுறு
மினத்தினர் நறைகொடு மேவு மின்னெலி
தனக்கொழி யாதசஞ் சலமுண் டாக்கவே; 22

பரிவுட னிறைதிறல் பாடும் பாடகர்க்
குரியநல் லமைச்சரை யாதி யொள்ளியர்
தருவுநா ணுறவரு டக்க வான்பொருள்
வருதனற் களித்தி(ட)[டு] மந்தப் பார்வையை; 23

இடம்படு நூலுணர்ந் திலங்கு கண்ணுளர்
திடம்படு பரிவுட னுடுஞ் சீர்நட
மடைந்தொரு மூலையி னுடு மீசர்த
முடம்பினுக் களித்திட வுயர்வி ளர்ப்பினை; 24

வேறு

ஆசையர சருக்காசை யரிகளுக்கெய் தாதவளந்
தேசுடைவிஞ் சையர்க்கருமை செப்பவுயர் சாத்தியர்க்குப்
பேசில்சாத் தியமாகப் பேரெழின்மங் கலத்தோடு
மோசைமறு கிடைவந்தா னுலம்பொரு திணிதோளான். 25

படிபுரக்கு மடல்வேந்தர் பரிதியொளி வீசுமணி
முடியுழுத கருங்கழற்கான் முதல்வன்ற னெழில்காணக்
கொடிமதிற்கோ லாகலநன் னகர்க்கரிய குழற்கனிவாய்
வடிநிகர்த்த விழிமின்னார் மணிமேடை யிவர்ந்தனரால். 26

காதலுரு வெடுத்துநெறி காட்டுதல்போற் றன்னிழன்முற்
போதரவந் தாளொருத்தி புகல்பார்வை யெனுந்தூதி
மாதுவிரைந் தேனெனத்தாள் வணங்குதல்போற் காதிவிடு
மேதகுதண் குவளைவிழி விரைவினில்வந் தாளொருத்தி. 27

நீவியின்மேற் சுற்றியதோர் நெடும்பணிவிட் டுயிர்ப்பதனாற்
பாவுமுடல் பூரித்துத் தளர்ந்திடுமோர் பண்பென்ன
மேவுமணித் தனதுதர பந்தனம்வீழ்ந் திடவந்தாள்
பாவையனை யாளொருத்தி பார்வேந்தன் றனைக்காண. 28

தளிரிடைமே லருளினொடு கண்பனிநீர் தெளித்திடல்போல்
இளமுலைகள் வெயர்வைதுளித் திடவந்தா ளீங்கொருத்தி
வளர்நிதம்பத் தேரினூறு மதன்பிடித்த கரும்பீலிக்
குளிர்துவசம் போற்கூந்தல் குலைந்திடவந் தாளொருத்தி. 29

கலன்றிகழுங் குயத்தனைத்த யாழினொடுங் கலகலெனுஞ்
சிலம்பினொலி யாற்றொடர்ந்த சிறையன்னந் தனைமுடுக்கிச்
சொலும்பனுவ லாட்டியெனத் தோமில்குணத் தாளொருத்தி
யிலங்குலக மளிப்பவனை யெதிர்காண வந்தனளால். 30

எள்ளலற மேற்பொதிந்த விலைநால்செங் கரத்திருப்ப
வுள்ளுறுமுற் பலப்பந்து விழ[விழு]ந்தா ளுங்கொருத்தி
வள்ளியர்மு னியற்கிரிகை வசுவுக்கே யுரியவென
நள்ளழலிற் காய்மழுவை நனியெடுத்து விடுத்தாள்போல். 31

தரளமணி வடமிடையிற் சுற்றியிறை தனைக்காண
வுரமிசையிற் கட்டியகை யுடனெதிர்வந் தாளொருத்தி
மருவுதம தாரத்தால் வயங்கியிடை மிகமுனியு
மிருதனத்தைக் கரத்திலணைத் தின்பமுறுத் திடுமாபோல். 32

தண்டரள மணிமாலை தன்பதத்தி னறுந்துதிர
மண்டலநா யகன்றனெதிர் மகிழ்ந்தோடி னளொருத்தி
கொண்டமணி மறுகில்வருங் குளிர்கமல மென்னவடிக்
கெண்டகுமுத் தபிடேக மிதயஞ்செய் திடுமாபோல். 33

தனைமுகிலென் றுறுதோகை தனக்[குக்]கள மானதுதா
ரெனுமாவை யளித்துநிறுத் திடவந்தா ளினிதொருத்தி
தனைமலையென் றுறுமுழைக்குத் தனம்பசிய மணிகதிர்வா
ளெனுமுயர்புல் லளித்துநிறுத் திடவந்தா ளினிதொருத்தி. 34

தனைவல்லி யென்றுவரு தன்பூவைக் கங்கைமணி
யெனுமொருசெங் கனியதனை யீந்திடவந் தாளொருத்தி
தனைமரையென் றுறுமெகினந் தனக்கடிவச் சிரகடக
மெனுமொருநல் வலயத்தை யீந்திடவந் தாளொருத்தி. 35

தாமினிது வளர்த்தவிவை தனிவேந்த னெழிலுநோக்கி
னேமமுறு மவ்வளவி லிடையூறு படுத்தாமற்
றேமிலணி யவயவங்க டுணைச்செய்த விவர்க்கென்று
வாமமொடு பிறர்சொல்ல வந்தனராற் சிலமாதர். 36

மேதகைய தார்வேந்தன் மீதுமணி மறுகில்வரு
மாதர்பலர் தாமுவந்து மங்கலவெண் பொரியிறைத்தார்
போதினுறு திருவைமணம் புணரவரு முகுந்தன்மிசை
மேதமில்பாற் கடற்றரங்க மெழுந்திவலை யிறைத்தாங்கு. 37

வசு யானையினின்றும் இறங்கி மணமாளிகையிற் புகுதல்

அப்பொழுது தன்சுற்ற மருஞ்சுத்தி மதிசுற்ற
மெய்புறமுஞ் சூழ்ந்திடவந் துமையிளவ லெதிர்கொளலுங்
கைப்படுவேத் திரர்புகழக் களிற்றினைவிட் டிறங்கிநெடு
மைப்புயனேர் வசுவேந்தன் மணிக்கோயில் புகுங்காலை. 38

பவனிப்படலம் முற்றும்.

ஆகத் திருவிருத்தம் 902.

## 31. வதுவைப் படலம்

மணமாளிகைச் சிறப்பு

மாடமணி பலமாதர் வளரிசையாற் கரைந்தொழுகி
யோடுபுனல் பாதமலர்க் குவந்தளிக்கும் புனலாகக்
கேடினறுங் கற்பகப்பூம் பந்தருதிர் கேசரங்கள்
தேடவரி யாரிறைக்குஞ் சேடையரி யாயிலக. 1

பலபலதூண் டொறுமொளிர்பொற் பாவைகரத் திழைத்தமணி
யலகிலொளி கொளவெடுக்கு மாலத்தி யாய்த்திகழப்
புலனிலகு வாயிறொறும் புனைகதலிக் கொழுங்கனிகண்
மலியவொழுக் கியசாறு மதுபர்க்க மாய்நிகழ. 2

வசு திருமணவேதிகை யருகு செல்லல்

இவ்வகையின் மணிக்கோயி லெனுந்திருநல் லுபசாரஞ்
செய்வனகண் டுளமகிழ்ந்து தேர்வேந்தர் பணிவேந்த
னெவ்வமில்பே ரலங்கார முடைத்தாகி யிலங்குமொரு
செவ்விதரு மணமணிவே திகையருகு சென்றடைந்தான். 3

திருமண வேதிகைச் சிறப்பு

தம்பமே தந்தமென நானமே தானமெனக்
கும்பமே கும்பமெனக் குலவியருங் கதலியொடு
வம்புலாங் கவரியொடு மணப்புகரி னெடுவயங்கிக்
கம்பவா ரணமொத்த கனகமணி வேதிகைக்கண்; 4

வசு திருமண மேடை மீது அமர்தல்

மாதுலன்சொற் றிடவிருந்தான் வளரொளிய பீடத்தின்
மேதகைய கமலையொடு மேவுகன காம்பரனன்
றேதமற விருந்ததுபோ லிலங்குறமற் றியாவர்க்கு
மோதரிய விழிமலரு முளமலருங் களிகூர. 5

கோலாகலவிறை, தேன் பால் முதலியவற்றை வசுவுக்கு
அளித்து உபசரித்தல்

சுரதருவின் மலர்த்தேனுஞ் சுரதேனு நறும்பாலு
மருவுசுவைச் சருக்கரையு மணிவள்ளத் தினிதேந்தி
யரசினுக்கு மாதுலன்வந் தளித்தனன்மா மதுப்பகைக்குந்
திருவினுக்கு மமுதளித்த திரைவேலைக் கிறைபோல. 6

அப்பொழுது கிரிகை மணவேதிகைக்குத்
தோழியர்களுடன் வருதல்

பரப்பியகற் பூரமிசை பதித்தவடிச் சுவட்டில்வளை
வரிக்கயறு மரைவயங்க மணிமதிலின் பார்வைநிழல்
விரைக்குவளை நிதிபோல விளங்கலிறை பாக்கியப்பூந்
திருப்பொருவம் மடவியர்க ளொடுவந்தாள் செழுங்கிரிகை. 7

மகளிர், வசுவையுங் கிரிகையையும் ஒருசேர நிறுத்தல்

பலகுலமெல் லியர்மகவான் பகரநறுந் திரையெடுத்தேழ்
தலவரசை யுங்கிரிகை தனையுமவ ணிறுத்தினரால்
அலரிவரு காலைமல ரரவிந்தத் தாதெடுத்துக்
குலவுறுநன் னேமிகளைக் கூட்டுமியல் போலவே. 8

வசுவுக்கும் கிரிகைக்கும் தேவகுரு கங்கணம் அணிவித்தல்

நிலவரசன் கரத்தடைந்து நேரிழைகைத் தாமரையுங்
குலவுகன்னி யத்தமொடு கூடிநல விறைகரமு
மிலகுதற்கோர் காப்பணித லெனப்பொன்னே னிறைகையினுந்
தலைவிகையி னும்புனைந்தான் றணிவதுவை யடையாளம். 9

### கோலாகலவிறை, கிரிகையை வசுவுக்குத் தாரைவார்த்து அளித்தல்

ஈதமய மெனமுனிவ ரிசைத்திடலுங் கமலமகள்
தாதைநிகர் வரையிறைதன் தனிமகளை வாடாத
கோதையுமிந் திரர்க்குரிய கொள்கையுந்தோள் வலியுமுடைப்
பூதலநா தனுக்களித்தே னெனநின்று புனல்வார்த்தான். 10

### வேறு

### வசு, கிரிகைக்கு மணிப்பொற்றாலி யணிதல்

தலையணியா மதிபானுத் தரளமெனு
முடுமாலை தனில்வ யங்க
மலர்வதனங் கவிழ்ந்துறையு மெழிற்கிரிகை
செழுங்களத்தின் மணிப்பொற் றாலி
யிலகவணிந் தனனிருபன் மதிக்கதிர்வாழ்
நாள்களினு மிருக்க மேலாய்ப்
புலவரொடு முனிவருமத் திருத்தாலி
யின்குணத்தைப் புகழ மாதோ! 11

### சேடையிடும் பொழுது அருகிருந்த மகளிர் கூற்று

அரசன்முடி மீதுமலர்க் கரந்தூக்கிச்
சேடையிடு மளவி லன்னோன்
றிருமகுட மணியிலொளிர் கிரிகைநிழ
றனைக்கண்ட சிலரிவ் வாலை
வரபதிதன் சிரத்திப்போ தேறினா
ளெனலுமெழில் மாதர் சில்லோர்
தரணியிறை சென்னிமிசை நதிப்பிள்ளை
யுறைகுதற்குத் தகுமே யென்றார். 12

### சேடைமணி கிரிகையின் உடம்பெங்கும் பரவி விளங்கும் காட்சி

சுத்திமதி நதியுதவு பிள்ளைதிருக்
கரமென்னுஞ் சுத்தி கொண்டே
நித்திலமென் சேடையிறைத் திடல்கண்டு
குணக்கடலு நின்றி றைக்கு
முத்தமணித் திரளன்னாள் கரியமுகில்
புரைகூந்தன் முளரிப் பாணி
சித்திரமெய் யிடைவீழ்ந்து பலவண்ண
மணியாகித் திகழ்ந்த மாதோ. 13

